இதோ நம் நாட்டிலேயே கிடைக்கிறது!

ஐரோப்பாவையும் அமெரிக்காவையும் வென்றுவிட்ட சலவைப் பவுடர்!






விலை:
ரூ. 1/12 நயா பைசா
(பிரதேச வரிகள் தனி)

## நீலநிற ஸர்ப் உங்கள் துணிகளின் வெள்ளைவெளேரென்ற சலவைக்கு

★ கற்பனை செய்திருக்கவே மாட்டீர்கள் அற்புத சலவைப் பவுடரான ஸர்ப் போன்று மகத்தான வெண்மை அளிக்கும் பவுடர் ஒன்றை!

★ பார்த்திருக்கமாட்டீர்கள் இதுபோன்று அற்புத நுரை கொழிக்கும் சாதனம் ஒன்றை! எத்தகைய நீரிலும் வெண்மையெனக் கொழித்தெழும் நுரைவளம்!

★ உணர்ந்திருக்க மாட்டீர்கள் சலவை இவ்வளவு எளிதென்று! சிரமமே கிடையாது; ஊறவிட்டுக் கசக்கி அலசினாலே காரியம் ஆயிற்று!

★ அடைந்திருக்கவே மாட்டீர்கள் உங்கள் பணத்திற்கு இதுபோன்ற அற்புதமான ஈடு! உங்கள் குடும்பத்தின் சகல துணிகளின் சலவைக்கும் சாலச் சிறந்தது ஸர்ப்.

சலவை செய்துபாருங்கள்... வெள்ளைவெளேரென்ற சலவைக்கு – ஸர்ப்

ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு

SU. 24-X29 TM






"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.




மலர் 18 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற | விகாரி ௵
இதழ் 38 | தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | சித்திரைமீ 6


# நேருஜியின் சென்னை விஜயம்

பாரதப் பிரதமர் நேருஜி தமிழ் நாட்டுக்கு வந்திருக்கிறார். அவர் முன்பு பல தடவைகள் வந்தபோது தமிழ்நாடு இருந்த நிலைக்கும் இப்பொழுது தமிழ்நாடு இருக்கும் நிலைக்கும் ஒப்பிட்டுப் பார்க்காமல் இருக்க முடியவில்லை.

முன்பு எத்தனையோ முறைகள் தமிழ்நாட்டையும் சென்னைமா நகரையும் நேருஜி பாராட்டிப் பேசி யிருக்கிறார்.

பாரத நாட்டில் எந்தப் பகுதியிலும் காணாத அமைதியைச் சென்னையில் காண்ப தாகக் கூறியிருக்கிறார்.

இதற்கெல்லாம் காரணம் காங்கிரஸின் பெருத்த கோட்டையாகத் தமிழ்நாடு இருந்து வந்தது. தமிழ் மக்களின் லட்சியங்களும், காங்கிரஸின் லட்சியங்களும் முரண்படாத நிலையிலிருந்தன. மாபெரும் தமிழ்நாட்டுத் தலைவர்கள், மகத்தான தியாகத்தாலும், சீரிய வாழ்க்கையாலும் காங்கிரஸ் லட்சியங்களைப் போற்றிப் பாதுகாத்து வந்தார்கள்.

தேசம் சுதந்திரம் அடைந்ததற்குப் பிறகு, காந்தி மகான் மறைவுக்குப் பிறகு காங்கிரஸின் லட்சியங்கள் இந்தியா முழுதும் தேய்பிறைபோல் தேயத் தொடங்கின! சமீபத்தில் காங்கிரஸின் தேய்மானம் மிக அதிகமாகிவிட்டது! இதற்குத் தமிழ் நாட்டு நகரசபைத் தேர்தல்கள் தகுந்த சான்று.

காங்கிரஸின் தோல்வியை வைத்து மட்டும் இதைச் சொல்லவில்லை.

இந்தத் தேர்தல்களில் எத்தனை சதவிகிதம் பேர்கள் வாக்களித்திருக்கின்றனர் என்ற கணக்கைப் பார்த்தால் பரிதாபம்.

நூற்றுக்கு நாற்பதுசத விகிதத்துக்கும் குறைவான பேர்கள்தான் தங்கள் வாக்குரிமையை உபயோகித்திருக்கிறார்கள். படித்தவர்கள், விஷயஞானமுள்ள நடுத்தர வர்க்கத்தினர் அத்தனை பேரும் இந்தத் தேர்தலைப் புறக்கணித்திருக்கிறார்கள். காங்கிரஸின் பேரிலுள்ள அதிருப்தியும் வேறு யாருக்கும் வோட்டுப் போடக்கூடிய மனம் இல்லாததும் இதற்குக் காரணம். காங்கிரஸினிடம் பெருத்த ஏமாற்றமடைந்துள்ள சூழ் நிலையில் நேருஜி வருகிறார். இதுதான் முந்திய வருகைக்கும் இப்போதைய வருகைக்கும் உள்ள வித்தியாசம். ஆனால் தேசம் முழுதும் இதே நிலை என்கிற காரணத்தால் அவரும் அதிக வருத்தம் அடையமாட்டார்.

காங்கிரஸ் பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு போராடும் கட்சியாக இருந்த காலத்தில் படிப்பும் சிந்தனை சக்தியுமுள்ள கோடிக்கணக்கான நடுத்தர வர்க்கத்தினர் ஆதரவு அளித்தார்கள்; சிறை சென்றார்கள்; தங்கள் வாழ்க்கையையே அர்ப்பணம் செய்தார்கள்.

காங்கிரஸ் பதவிக்கு வந்த பிறகு இந்த நடுத்தர வர்க்கத்தினரைக் கண்மூடித்தனமாகப் புறக்கணித்து, அலட்சியப்படுத்தி, அவமானப்படுத்தி, "உங்கள் ஆதரவு வேண்டியதில்லை" என்று பகிரங்கமாகக் காங்கிரஸ் குட்டித் தலைவர்கள் ஆணவ மிடுக்கோடு சொல்லத் தலைப்பட்டார்கள். இப்போது படிப்பும் சிந்தனை சக்தியுமுள்ள நடுத்தர வர்க்கத்தினர் அனைவரும் வருத்தத்தில் ஆழ்ந்து வோட்டுச் சாவடிப் பக்கமே தங்கள் பார்வையைக் கூடச் செலுத்தவில்லை.

காங்கிரஸ் கட்சி படுதோல்வி அடைந்து விட்டது. இதற்குக் காரணங்கள் பல கற்பித்துத் தலைவர்கள் நேருஜிக்குச் சொல்லலாம். மத்திய சர்க்காரின் போக்கும் சென்னை மந்திரிகள் பொம்மைகளாகி விட்டதும், இவையே காங்கிரஸின் தோல்விக்கு காரணங்கள்.

நேருஜியின் கொள்கைகளே பெருமளவு காரணம் என்பதை நாம் சொல்லாமல் இருக்க முடியவில்லை.

முக்கியமாக நேருஜியின் நிலச்சீர்திருத்தக் கொள்கையும், மற்ற ஆகாயக் கோட்டைக் கொள்கைகளும் தம் அபிப்பிராயத்துக்கு ஆதரவு தேடும் வகையில் அவர் மூர்க்கத்தனமாகப் பேசும் முறையும் பொது மக்களுக்குப் பெருத்த ஏமாற்றத்தையளித்திருக்கின்றன.

நிலச்சீர்திருத்தம் சம்பந்தமாக நாம் பல தலையங்கங்கள் எழுதி விட்டோம். ராஜாஜி, முன்ஷி, ரங்கா போன்ற பலர் பல கட்டுரைகளும், அறிக்கைகளும் எழுதி வெளியிட்டிருக்கிறார்கள். இவர்களை யெல்லாம் நேருஜி அலட்சியப் படுத்திப் பேசுகிறார்.

மொத்தத்தில் கம்யூனிஸ்ட் கொள்கைகளையும் திட்டங்களையும் காங்கிரஸின் சார்பிலேயே நடத்திவைக்க முனைகிறார். இதைச் சிந்திக்கும் திறன்படைத்த மக்கள் ஒப்புக்கொள்ளவில்லை. முப்பது நாற்பதாண்டுகளாக, காங்கிரஸுக்குப் பெரும் பலமாக இருந்து வந்த ஏழை நடுத்தர வர்க்கத்தார் நேருஜியின் போக்கைக் கண்டு வருத்தம் அடைந்திருக்கின்றனர்.

தமிழ்நாடு மட்டுமல்ல; இந்தியா முழுவதிலுமுள்ள மக்கள் மனத் துயரம் அடைந்திருக்கின்றனர். காந்தியத்தை மறந்துவிட்டு கம்யூனிஸ்ட் பிரதிநிதியாக நேருஜியும் காங்கிரஸும் திட்டங்கள் மேல் திட்டங்கள் போட்டு நடத்தி வருவதை மக்கள் ஒப்புக்கொள்ளவில்லை. அவற்றினால் ஏழைகளுக்கும் ஒரு பயனும் உண்டாகாது.

சென்னைக் கடற்கரையில் காந்தி மகானின் திருவுருவச்சிலையை நேருஜி திறந்து வைக்கிறார். அதன் பயனைச் சிந்தனையில் தெளிவு பெற்றுத் திரும்ப வேண்டும். அரசியல் அதிகாரத்தை மறந்து தருமத்தின் சக்தியை உணர்ந்து திரும்ப வேண்டும்.

# தலாய் லாமா

உலகிலுள்ள புத்த மதத்தினரால் புத்த பகவானின் அவதாரம் என்று கருதப்படும் திபெத்தின் தலாய் லாமா, பாரத நாட்டுக்கு சேமமாய் வந்து சேர்ந்தார் என்ற செய்தியைக் கேட்டு உலகமே மகிழ்ச்சியடைகிறது. உலக மக்களுடன் நாமும் சேர்ந்து மகிழ்ச்சியடையவே, இவ்விதம் அட்டையில் புத்த பகவானையும் தலாய் லாமாவையும் திபெத்திலுள்ள தலாய் லாமாவின் அரண்மனையையும் வெளியிட்டிருக்கிறோம்.

உலகத்தின் கூரை எனப்படும் திபெத், தமிழ்நாட்டைப் போல் ஒன்பது மடங்கு பெரியது. அந் நாட்டு மக்கள் பழம் சம்பிரதாயங்களில் ஊறி அமைதியான வாழ்க்கை நடத்துபவர்கள். விவசாயமே அவர்களுடைய முக்கிய தொழில். இந்தியாவுடன் வேத காலம் முதலே தொடர்புண்டு. திபெத் தலாய் லாமாவுக்கு ஏதாகிலும் ஆபத்து என்றால் எப்பொழுதும் இந்தியாவைத்தான் உதவிக்கு எதிர்பார்ப்பார்கள். பிரிட்டிஷ் ஆட்சி காலத்தில் கூட இவருக்கு முன்பிருந்த பதின்மூன்றாவது தலாய் லாமா இந்தியாவில் புகலடைந்தார். அப்பொழுதெல்லாம் விடத் திபெத் இப்பொழுது கம்யூனிஸ்ட் ஆட்சியில் சிக்கி மிகக் கஷ்டமான நிலையிலிருக்கிறது. சீன கம்யூனிஸ்டுகள் திபெத் பூமியில் தங்கமும் வெள்ளியும் இருக்கின்றன என்று கருதுகிறார்கள். அவை யெல்லாம் தோண்டி யெடுத்துப் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிறார்கள். பழைய விவசாய முறைகளை மாற்றிப் புது பலாத்கார விவசாய முறையைப் புகுத்தப் பார்க்கிறார்கள் புதுக் கல்விமுறை புகுத்தி, திபெத் மக்களைத் 'திருத்திவிட'ப் பார்க்கிறார்கள். மொத்தத்தில் திபெத் மக்களின் அன்றாட வாழ்க்கையில் தலையிடுவதில்லை என்று கூறிவிட்டு, பல விதங்களிலும் தலையிட்டுச் சீன கம்யூனிஸ்டுகள் கொடுமைப்படுத்துகிறார்கள். திபெத் மக்கள் இந்த வேகத்தைத் தாங்க முடியாமல் கஷ்டப்படுவதைப் பார்த்து, சில ஆண்டுகளுக்கு முன் மா-சே-துங் 1962 வரை புது முறைகள் ஒன்றும் புகுத்துவதில்லை என்று வாக்களித்தார். சொன்ன வாக்கைக் காப்பாற்றவில்லை. சீன ராணுவத்தின் பலாத்காரம் திபெத்தில் நடைபெற்றது. திபெத் மக்கள் இதை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர். திபெத் மக்களின் உயிரனைய, தெய்வமேயாகிய தலாய் லாமா அங்கு இருக்கவே முடியவில்லை. தப்பி இந்தியாவுக்கு வந்து விட்டார்.

திபெத் மக்களின் சுதந்திரப் புரட்சியை அடக்கும் வகையில் சீன கம்யூனிஸ்ட் ராணுவம் பல புத்த மத விஹாரங்களைத் தகர்த்துத் தவிடுபொடியாக்கியிருக்கிறது. அந்த மடங்களில் பல அற்புதமான கலைச் செல்வங்கள் உண்டு. பல அரிய பழம் ஏடுகள் உண்டு. அவை யெல்லாம் அழிந்து போயிருக்க வேண்டும். இவை யெல்லாம் துயரம் தரும் சம்பவங்கள்.

எனினும் விரைவில் திபெத் நிலை சீர்ப்படும் என்று எதிர்பார்ப்போமாக. தலாய் லாமா மீண்டும் தமது நாட்டுக்குப் பழம் பெரு சிறப்புடன் திரும்பிச் செல்லும் நற்காலம் வரும் என்று எதிர்பார்ப்போமாக!

# என்ன சேதி?

## அறுபதாண்டு நிறைவு விழா

முசிரி சுப்பிரமண்ய அய்யர் அவர்களின் அறுபதாண்டு நிறைவு விழா சென்னை ரஸிகரஞ்சனி சபா மண்டபத்தில் சென்ற சனிக்கிழமை திரு காமராஜ் அவர்கள் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. தருவாளர்கள் டி. டி.கே., கே. சாரங்கபாணி, டி. கே. ஷண்முகம், வி. வி. நரசிம்மன், சுப்பராய அய்யர், சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை, ஸ்ரீமதி ருக்மிணி தேவி முதலிய பலர் பேசினார்கள். ரஸிகர்களும், பிரமுகர்களும் ஏராளமாகக் கூடியிருந்த அந்தச் சபை திரு முசிரி சுப்பிரமண்ய அய்யர் அவர்களின்



ஜனரஞ்சகத் தன்மையை விளக்குவதாக இருந்தது. பாராட்டுரைகளுக்கு நன்றி செலுத்தும் வகையில் பேசிய திரு முசிரி சுப்பிரமண்ய அய்யர் அவர்கள், தாமது குரு பரம்பரையிலேயே தமிழிசை இருக்கிறது என்றும், அவர்களுடைய ஆசியின் பயனைத் தாம் சொற்ப சேவை சங்கீத உலகுக்குச் செய்ய முடிந்தது என்றும் நெஞ்சம் தழுதழுக்கப் பேசினார்.

இன்றைய சங்கீத வித்வான்களில் ஸீனியர் சங்கீத வித்வான்கள் என்று ஆறு பேர்களைக் கணக்கெடுத்தால் அவர்களில் ஸ்ரீ முசிரி ஒருவராக இருப்பார்.

இவரது மேற்பார்வையில் நடைபெறும் கர்நாடக சங்கீதக்கல்லூரி மேலும்மேலும் சிறப்பதாக. அறுபதாண்டு நிறைந்த ஸ்ரீ முசிரி அய்யர் அவர்கள் பல்லாண்டு வாழ இறைவனை இறைஞ்சுகிறோம்.

## நூற்றாண்டு விழா

செஞ்சிலுவைச் சங்கம் தோன்றி நூறு ஆண்டுகள் பூர்த்தியாவதை முன்னிட்டு சென்னையிலுள்ள இச் சங்கத்தின் கிளைக் கழகத்தினர், சென்னை கூவம் திடலில் ஒரு பெரிய விழாவையே ஆரம்பித்து வைத்திருக்கிறார்கள். பொருட்காட்சி, சர்க்கஸ், களியாட்டக் கேளிக்கைகள் எல்லாம் இந்த விழாவில் இடம் பெற்றிருப்பதோடு, சென்னை அரசாங்கத்தின் இலாகாக்கள் பலவும் இதில் 'ஸ்டால்'கள் அமைத்திருக்கின்றன. சென்னைப் பெருவழித்துறை அமைத்திருக்கும் 'சாலை அபிவிருத்தி திட்ட'க் காட்சி பிரமாதமாக விளங்குகின்றது. இவ்வாறே பொது மராமத்து இலாகா அமைத்திருக்கும் 'மாடல்' வைகை அணையும் பார்ப்போரைப் பிரமிக்க வைப்பதாயிருக்கிறது. இந்த விழாவில் மாலை நேரங்களில் நமது ராணுவப் படையினர், கவாத்துக்களும், சிலம்ப விளையாட்டுக்களும் நடத்துவதையும் பார்க்கலாம். சென்னை போலீஸ் படையும் இந்தக் கேளிக்கைகளில் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறது.

## சிவாஜி கணேசனின் நன்கொடை

சமீபத்தில் சிவாஜி கணேசன் தமது கட்டபொம்மன் நாடகத்தின் நூறாவது நடிப்பு விழாவைக் கொண்டாடும் போது சென்னை கார்ப்பொரேஷனுக்கு ஒரு லட்ச ரூபாய் மத்தியான உணவு ஏற்பாட்டுக்கு நல்குவதாகக் கூறினார். அவருடைய ஈகையைப் பாராட்டுகிறோம். அவர் தமிழ் நாட்டுக் குழந்தைகள் நல்ல கல்வி கற்றவர்களாக விளங்க வேண்டும் என்று ஆசை கொண்டிருக்கும் பண்பைப் பாராட்டுகிறோம். சமீபத்தில் அவர் பாரதி விழாவைச் சிறப்பாக எட்டயபுரத்தில் கொண்டாடித் தமிழர்களின் அபிமானத்தைப் பெற்றார். இப்பொழுது இந்தக் கொடையினால் தமிழ் மக்களின் அன்பிலும் மதிப்பிலும் மிக உயர்ந்துவிட்டார்.



### புதுக்கோட்டையில் கல்கி ஏஜன்ஸி மாற்றம்

12—4—59 இதழ் முதல் புதுக்கோட்டையில் உள்ள கல்கி நேயர்களும் விற்பனையாளர்களும் தங்களுக்குத் தேவையான கல்கி பிரதிகளைப் புதிதாக நியமிக்கப்பட்டிருக்கும் நமது ஏஜண்டு திரு எம். எஸ். சுப்பிரமணிய அய்யர் (3059, இரண்டாவது கீழவீதி, புதுக்கோட்டை) அவர்களிடமிருந்தே வாங்கிக் கொள்ளக் கோருகிறோம்.

மானேஜர்: கல்கி காரியாலயம், கீழ்ப்பாக்கம், சென்னை — 10

# ஆகாச வெடி!

"பிஸிக்ஸ், கெமிஸ்ட்ரி என்ற பதங்களை எழுத்துக் கூட்டத் தெரியாத அளவுக்குக் கல்லூரி மாணவர்களின் கல்வித் தரம் குறைந்திருக்கிறது."—கனம் பக்தவத்சலம்

எழுத்துக்களைக் கூட்டத் தெரியாவிட்டால் போகட்டும், கழிக்காமல் விட்டார்களே!

✽

"கேரளாவில், இதுவரை யாரும் கண்டிராத விதத்தில் தூசிப் புயல் அடித்திருக்கிறது." —செய்தி

புயலோடு தூசியும் கலந்து வரும்போது யாரும் கண்டிராத புயலாகத்தானே இருக்க முடியும்?

✽

"நன்னிலம் தாலுகாவிலிருந்து சென்னைவாசி ஒருவருக்கு எழுதப்பட்ட தபால் கார்டு ஆறு வருடங்களுக்குப் பின் இப்போது வந்து சேர்ந்திருக்கிறது." —செய்தி

ஆறு வருடம் கழித்து, எழுதியவரிடமே கார்டு திரும்பிப் போய்ச் சேராத அதிசயத்தைச் சொல்லுங்கள்!

✽

"திபெத்திலிருந்து உயிர் தப்பி வந்துள்ள தலாய் லாமா தம்முடன் விலை உயர்ந்த பொக்கிஷங்களைக் கொண்டு வந்திருப்பதாகத் தெரிகிறது." —செய்தி

அவர் உயிரைவிட அரிய பொக்கிஷம் என்ன இருக்க முடியும்?

"ஆண்டுதோறும் நாட்டில் பல்லாயிரக் கணக்கான டன் வாழைப் பழத்தோல் வீசி எறியப்படுவதால் வீணாகிறது."

—மத்திய விவசாய ஆலோசனை மந்திரி

வீசி எறியப்படும் தோலினால், எவ்வளவு ஆயிரம் முழங்கால்கள் சேதமடைகின்றன என்பதையும் வெளியிடுவார்களா?

✽

"விமானம் கிளம்பிய சமயத்தில் தங்களுக்கு ஆகாயப் பயணம் பயமாயிருக்கிறதென்று கூக்குரலிட்ட இரு சென்னைப் பிரயாணிகள் இறக்கி விடப்பட்டனர்."

—சென்னை விமான நிலையச் செய்தி

"நாங்களாவது பயத்தைத் தைரியமாக வெளியிட்டு இறங்கினோம். மற்றப் பிரயாணிகள் இதற்குத் தைரியமில்லாமல் எப்படித்தான் போகிறார்களோ?" என்று அவ்விருவரும் சொல்லிக் கொண்டிருப்பார்கள்!

✽

"ஆட்டுப் பண்ணைகள் நடத்தி ஆடுகளை வளர்க்கும் உத்தேசம் அரசாங்கத்துக்குக் கிடையாது."

—மத்திய மந்திரி ஸ்ரீ கிருஷ்ணப்பா

"ஆடுகளை வளர்க்கும் உத்தேசம் இல்லைமலா மரம் நடு விழாவை அரசாங்கம் நாடெங்கும் நடத்துகிறது?" என்று ஓர் ஆடு கேட்கிறது.

## நேருஜியின் தலைவலி



# திபெத் விஷயம்

## நடுநிலைமையின் நுட்பங்கள்

ராஜாஜி

புத்த மதத்தைச்சேர்ந்த ஒரு மேனாட்டு நண்பர் மிக உருக்கமான கடிதம் ஒன்று எனக்கு எழுதியிருக்கிறார். சூயஸ் விஷயத்தில் இங்கிலாந்து செய்த தவறான காரியத்தை இந்தியா தைரியமாகக் கண்டித்ததே. திபெத் விஷயத்திலும் அம்மாதிரி சீனாவை ஏன் கண்டிக்கக் கூடாது என்கிறார். அப்பொழுது நாம் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளும் கண்டனங்களும் மற்ற சுதந்திர சர்க்கார்களின் கண்டனங்களும் ஐ. நா. வை விழிப்படையச் செய்து பிரிட்டன் செய்து வந்த அட்டூழியத்தை நிறுத்தின. அதே முறையைக் கம்யூனிஸ்ட் சீனா விஷயத்திலும் கடைப்பிடிக்கலாமே என்று வாதிக்கிறார்.

மேற்கத்திய நாடுகளுக்கும், கம்யூனிஸ்ட் நாடுகளுக்குமிடையே நடைபெற்று வரும் பனிப் போரில் நாமும் சிக்கிக் கொண்டு அந்தப் போரைப் பெருக்கக் கூடாது; அதை ஒழித்துக் கட்ட வேண்டும்; அந்தப் பிசாசுக்குத் தீனி கொடுக்கக் கூடாது என்பதுதான் நடுநிலைமைக் கொள்கை. நடுநிலைமை வகிக்கும் நாடுகளின் வெளிநாட்டுக் கொள்கைகளை ஆராயும்போது, மேற்கூறிய அடிப்படை விஷயத்தை மனத்தில் கொண்டு பார்க்க வேண்டும்.

சில நாடுகளுடன் நமக்கு நீண்ட காலைய சம்பந்தமும் தொடர்பும் இருந்து வந்து அரசியல் வகையிலும், பண்பாட்டு வகையிலும் நீண்ட காலமாக நெருங்கிய தொடர்பு இருந்து வருவதால் அந்த நாடுகளின்செய்கைகள் தவறாக இருந்தபோது வன்மையாகக் கண்டிக்க நமக்கு உரிமையுண்டு. அப்படிக் கண்டிப்பதனால் நீண்ட நாட்களாக இருந்து வந்த நலவெண்ணமும், நட்பும் அறுந்து போகாது என்ற தைரியமும்கூட இருக்கும். நீண்ட காலைய நட்பும் தொடர்பும் இல்லாத ஒரு நாட்டின் செய்கையை அவ்வாறு தைரியமாகவும் வன்மையாகவும் கண்டிக்க முடியாது. அப்படிக் கண்டித்தால் எந்த நட்புரிமையின் பலத்தினால் அதன் தவறு களைந்திருத்த வேண்டுமோ, அந்த பலம் அழிந்து செல்லும் வழியே அடைத்துப் போகலாம். இதை மறந்துவிட்டுப் பார்ப்பதனால்தான் இந்தியா பட்சபாதமாக நடந்து கொள்வதாகச் சிலர் எண்ணுகிறார்கள். ஒரு கட்சிக்குச் சாதகமாகவும் இன்னொரு கட்சிக்குப் பாதகமாகவும் நாம் நடந்து கொண்டதாகத் தோன்றலாம். இதற்கெல்லாம் காரணம், மேலே கூறிய அடிப்படை விஷயத்தைச் சரியாகப் புரிந்துகொள்ளாமல் மேன்போக்காக நடவடிக்கைகளை மட்டும் ஆராய்வதுதான்.

கம்பி மேல் நடப்பது போன்ற கடினமான நடுநிலைமைக் கொள்கையை அனுஷ்டிக்கும் போது, கோலை ஒரு பக்கம் சாய்க்கலாம்; சில சமயம் எதிர்ப்பக்கம் சாய்க்கவும் நேரலாம். அப்படிச் சாய்ப்பதனால் சாய்ந்த பக்கம் சேர்ந்து விட்டோம் என்று அர்த்தமல்ல!

சண்டையின்றியே விரோதம் பாராட்டிக் கொண்டிருக்கும் இரண்டு கட்சி நாடுகளில் ஏதேனும் ஒரு நாடு தவறாக நடந்து கொண்டால், ஒரு நாட்டை வன்மையாகக் கண்டிக்க முடிகிறது; இன்னொரு நாட்டை அவ்வளவு வன்மையாக கண்டிக்க முடிவதில்லை. இது இரு கட்சிகளுடனும் தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டும் என்ற இந்திய நாட்டின் நிலைமை. இரண்டில் ஒரு கட்சியில் சேர்ந்து விடத் தீர்மானித்தால் எவ்வளவு வன்மையாகக் கண்டிக்க வேண்டுமோ, அவ்வளவு வன்மையாகக் கண்டிக்கலாம்.

பனிப்போருக்கு நாம் பலம் தரலாகாது. அதுதான் முக்கியமான விஷயம். நாம் ஒரு நாட்டைக் கண்டித்து விடுவதனால் உலகம் பெரும் பயன் அடைந்து விடப் போவதில்லை. பனிப்போரில் ஈடுபட்டிருக்கிற கட்சிகள், இந்தியாவும் அதில் ஒரு சார்பில் சேர்ந்துவிட வேண்டுமென்று ஆசைப்படுகிறார்கள். அந்த ஆசையை நிறைவேற்றுவதற்காகத்தான் நம்மிடமிருந்து வன்மையான கண்டிப்பை எதிர்பார்க்கிறார்கள். அந்த வலையில் நாம் சிக்கலாகாது.

இன்றுள்ள நிலையில் நடுநிலைமை வகிப்பது மிகவும் கஷ்டம். ஒரு கட்சியில் சேர்ந்து வேலை செய்வது சுலபம். நடுநிலைமைப் பாதை சுலபமான பாதையல்ல; மிகக் கஷ்டமான பாதை. மேனாட்டு அரசியல் விமர்சகர்களும் இந்தியாவில் அரசாங்கத்தைக் கண்டிப்பவர்களும்கூட ஏன் சீனாவைக் கண்டிக்கவில்லை என்று ஆட்சேபணை செய்கிறார்கள். நாணயப் பரிவர்த்தனை மதிப்பு, நாட்டுக்கு நாடு வித்தியாசப்படுவது போல், அயல் நாட்டுக் கொள்கை விஷயத்தில் கண்டன வரம்புகள் வித்தியாசப்படுகின்றன. ஒரு நாடு சம்பந்தமாகச் செய்யும் கண்டனம் என்ன பலனை அளித்ததோ, அதேமாதிரியான நடவடிக்கை வேறொரு நாடு சம்பந்தமாக எடுத்துக் கொண்டால் அதே பலனை அளிக்காது. நீண்ட கால சம்பந்தம் கொண்ட நாடு நமது கண்டனங்களை நட்பின் காரணமாகக் கூறியது என்று எடுத்துக் கொள்ளும். அதே மாதிரியான கண்டன வாசகங்களை இன்னொரு நாட்டின் நடவடிக்கைகள் சம்பந்தமாகப் பிரயோகித்தால் நட்பை இழந்து நம்முடைய செல்வாக்கு கொஞ்சங்கூட இல்லாமற் போகும்.

இன்னொன்றும் கவனிக்க வேண்டும். சூயஸ் விஷயம் எழுந்தபோது, அதில் சம்பந்தப்பட்ட பிரான்ஸ், இஸ்ரேல், பிரிட்டன், எகிப்து ஆகிய எல்லா நாடுகளும் ஐ. நா. சபையில் அங்கத்தினர்களாக இருந்தன. அதனால் ஐ. நா. சபை தனது செல்வாக்கு முழுவதையும் பிரயோகித்துத் தவற்றைத்திருத்த முடிந்தது. ஆனால் திபெத் விஷயத்தில் நிலைமை வேறுவிதமாக இருக்கிறது. சீனா, பன்முறை ஐ. நா. சபையில் அனுமதிக்கப்பட வேண்டும் என்று பல வகையில் வற்புறுத்தியும் அமெரிக்க சர்க்காரின் ஆட்சேபணையினால் அனுமதிக்கப் படவில்லை. சீனாவை அலட்சியப்படுத்தி, அதன் கோரிக்கை நிராகரிக்கப்பட்டிருக்கிறது. இதனால் பனிப்போரில் சேர்ந்துள்ள சில நாடுகளுக்குக் குறுகிய நோக்கம் கொண்ட திருப்தியும் சந்தோஷமும் உண்டாயிருக்கலாம். ஆனால் இப்பொழுது ஏற்பட்டிருக்கும் நிலைமையைப் பார்த்தால் ஐ. நா.வில் சீனாவைச் சேர்க்காததின் தவற்றை மக்கள் எளிதில் உணர முடிகிறது. பகிஷ்கரிப்பதில் குறுகிய எண்ணத்தின்படி லாபமுண்டு. ஆனால் கஷ்டமுமுண்டு. ஐ. நா. சபையின் கண்டனம், அதில் இடம் கொடுக்கப்படாத கம்யூனிஸ்ட் சீனாவை எந்தவிதத்திலும் பாதிக்காது. தன் கூட்டுறவை விரும்பாத ஐ. நா.வின் கண்டனத்தைச் சீனா ஏன் பொருட்படுத்த வேண்டும்?

எது எப்படியாயினும் உலக மக்கள் திபெத் விஷயத்தில் தாங்கள் கொண்டுள்ள உணர்ச்சியைத் தெரிவிப்பார்கள். இதில் சந்தேகமில்லை. உலகக் கண்டனம் ஒரு பெரும் சக்தி.

உலக மக்கள் கண்டனத்தைப் பற்றி ஒன்று நினைவில் வைக்க வேண்டும். பனிப்போர் நாடுகளின் தூண்டுதலின்றித் தாங்களாகவே, திபெத்தின் பரிதாப நிலையைப் பார்த்துப் பரிந்து செய்யும் உலகமக்களின் கண்டனத்தினால் நல்ல பயன் உண்டு.

பனிப்போர் நாடுகள் ஓயாமல் ஒழியாமல் மத்திய கேந்திரத்திலுள்ள அரபு நாடுகளைத் தங்கள் சுயநலம் காரணமாகத் தத்தம் கட்சியில் சேர்த்துக் கொள்ளப் பார்க்கின்றன. மேற்கத்திய நாடுகளின் தூண்டுதலின்பேரில் திபெத் பற்றிக் கண்டனம் தெரிவித்தால், அந்தக் கண்டனத்தில் சக்தி இராது. பனிப்போரில் அதுவும் ஒரு இணையாகி விடும். பார்க்கப் போனால் மேற்கத்திய நாடுகளின் பரிவு திபெத்துக்கு ஒரு பயனும் இல்லை. அமெரிக்க முன்னாள் இந்தியத் தூதர்கள் செஸ்டர் பௌல்ஸும், ஷெர்மன் கூப்பரும் இதை வற்புறுத்தி வருவது மகிழ்ச்சி தருகிறது.

மேற்கத்திய நாடுகள் திபெத்துக்கு எவ்வித ராணுவ உதவியும் கொடுக்க முடியாது. அவர்கள் கம்யூனிஸ்ட் நாடுகளுடன் சண்டைக்குத் தயாராயில்லை. அணு ஆயுதப் போரை மூட்ட அவர்களுக்கு விருப்பமில்லை. அதனால் ராணுவ உதவி தர முடியாது. மேற்கத்திய நாடுகளின் பேச்சுப் பரிவினால் திபெத்துக்கு கஷ்டமே யொழிய லாபமில்லை.

மேற்கத்திய சர்க்கார்களின் கண்டனமின்றியும், மேல் நாட்டுப் பத்திரிகைகளின் பனிப்போர் தூபமின்றியும், உலக மக்களின் பரிவு விரைவில் வளர்ந்து உருவம் எடுக்கும். திபெத்தில் நடந்திருப்பது பெருத்த அநீதி. அந்த அநீதியை உலக மக்கள் பார்த்துச் சகித்துக் கொண்டிருக்க மாட்டார்கள்.

திபெத் மக்கள், சீன மக்களின் இனத்தவர்கள் அல்ல. பாஷை, பண்பாடு எல்லாம் வேறானவை. திபெத் ஒரு தனி நாடு. மிருகத்தனமாகப் பெருங் கொடுமை நடத்தினாலன்றிச் சீன அரசாங்கம் திபெத்தை அடக்கிவிட முடியாது. திபெத்தின் சுதந்திர உரிமை மறுக்க முடியாதது. இதையும் உலக மக்களின் உணர்ச்சியையும் உணர்ந்து, அதற்குத் தகுந்தபடி சீனா திபெத் விஷயத்தில் நடந்து கொள்ளும் என்று எதிர்பார்ப்போமாக. ஆசிய மக்களின் அபிப்பிராயத்தையும் கவலையையும் கம்யூனிஸ்ட் சர்க்கார்கள் கவனித்து நடந்து கொள்ள வேண்டும்.





# ஸ்ரீராமாவதாரம்

நல்ல காரியத்தைச் செய்வதற்கு எது நல்லது என்று முதலில் தெரிந்திருக்கவேண்டும். இதை எடுத்துச் சொல்ல ஏற்பட்டவை வேதங்களும், இதிஹாசங்களும், ஸ்மிருதிகளும், தர்ம சாஸ்திரங்களும். இவைகளில் பொதிந்துள்ள உண்மைகள் மனித அறிவினால் கண்டுபிடிக்கப்பட்டவை அல்ல. அவை நிரந்தரமான உண்மைகள். அவைகளே ஸனாதன தர்மங்கள். முடிவான மோக்ஷத்துக்குச் சாதனமாக எந்தவித அறவழியை அவசியம் பின்பற்ற வேண்டுமென்பதை அவை எடுத்துரைக்கின்றன.

ஆனால் அறவழியைக் கடைப்பிடித்து ஒழுகுவதில் அடிக்கடி, யுகத்துக்கு யுகம், இடையூறுகள் ஏற்படுகின்றன. தன்னைப் பொறுத்த இடையூறுகள் சில. இவற்றைத் தன்னுடைய தவச் சக்தியினாலும் நெறி முறைகளாலும் கடந்து விடலாம். அப்படித்தான் கடக்க வேண்டும். மற்றும் சில இடையூறுகள் மனிதத் தன்மையைப் பொறுத்தவை. அவற்றைச் சமாளிக்கத் தன்னுடைய சொந்த முயற்சி மட்டும் போதாது. தருமத்துக்கு விரோதியாக இருப்பவர்கள் மிதமிஞ்சிய பலம் அடைந்து சாதாரண மக்களுக்குக் கிடைக்காத உயர்ந்த ஆயுத பலமும் பெற்று விட்டால், அவர்களை அடக்கத் தருமத்திலும் நல்வழியிலும் நிரந்தரமாக நிலைத்துள்ள ஒரு சக்தியினால்தான் முடியும். "அசுர" சம்பத்து மேலோங்கி தருமத்தை அழிக்க முற்பட்டால் அதை ஒடுக்க 'தெய்வ' சம்பத்தையே வடிவமாகக் கொண்ட ஒரு திவ்ய புருஷனாலோ, தேவதையினாலோதான் முடியும். அவர்களுடைய உதவியில்லாமல் அதர்மத்தை ஒழிக்க முடியாது.

அதருமத்துக்கு எதிராக நிகழும் இந்தப் புனிதமான போரில் சாதி, மதம், வர்ணம், ஆசிரமம், ஆண், பெண் என்ற பாகுபாடுகளுக்கு இடமில்லை. அநியாயத்தைக் கண்டிப்பதில் உறவு என்ற பாசம் கூட எதிர் நிற்காது. தன்னுடைய சொந்த மாமன் கம்சனைக் கொல்ல ஸ்ரீ கிருஷ்ண பகவான் துளியும் தயங்கவே இல்லை.

இந்தக் கருத்து கொண்டுதான் ராமாயணத்தையும் கவனிக்க வேண்டும். அப்படிப் பார்க்கும்போது, வெவ்வேறான இரண்டு இனத்தவர் புரிந்த யுத்தந்தான் ராமாயணக் கதை என்று சிந்தனையின்றி ஒருதலைப் பட்சமாகச் சொல்லுவது எவ்வளவு தப்பிதம் என்பது தெரியும். எல்லா அவதாரங்களைப் போல, ராமாவதாரத்தின் காரணமும் துஷ்டநிக்ரஹமும் (தீயவரை ஒடுக்குதலும்) சாதுபரித்ராணமும் (நல்லோரைப் பாதுகாத்தலும்). எங்கெல்லாம் தீமையும் அதர்மமும் தலைதூக்குகின்றனவோ அங்கங்கே அவற்றை ஒடுக்குவதன் மூலம் நன்மையும் தர்மமும் நிலைநாட்டப் படுவதை ராமாயணத்தில் பார்க்கலாம்.]

ஸ்ரீராமன் தர்மத்தின் வடிவம். வனத்துக்குப் புறப்படும் சமயத்தில் ஆசிமொழி கூறும்போது கோசலை "எந்த தர்மத்தை நீ உறுதியுடனும் நியமத்துடனும் பாதுகாத்தாயோ" என்று அடைமொழி கொடுத்துச் சொல்லுகிறாள். "தன்னைப் பாதுகாப்பவனை தர்மம் பாதுகாக்கிறது" (தர்மோ ரக்ஷதி ரக்ஷித:) என்ற உண்மையைக் கோசலை நன்கு உணர்ந்திருந்தாள்.

தர்மம் சாதுக்களின் வாழ்க்கையில் நிலைத்து நிற்கிறது. சாதுக்களைப் போஷிப்பதன் மூலம் தர்மமும் போஷிக்கப்படுகிறது. சாதுபரித்ராண மூலம் தர்ம ஸம்ஸ்தாபனம் நிகழுகிறது. சாதுக்களைத் துன்புறுத்தும் துஷ்டர்களை நிக்ரஹம் செய்வதும் சாதுபரித்ராணத்தில் அடங்கியுள்ளது. துஷ்ட நிக்ரஹம் செய்வதில் ஈடுபட்டுள்ளபோது சமூகக் கட்டுப்பாடு மறைந்து போய் விடும்.

ஒரு குடும்ப க்ஷேமத்தின் பொருட்டு ஒரு மனிதனையும், ஒரு கிராமத்தின் க்ஷேமத்துக்காக ஒரு குடும்பத்தையும், ஒரு தேசத்தின் நலனுக்காக ஒரு கிராமத்தையும், ஆத்மாவின் க்ஷேமத்துக்காக ஒரு தேசத்தையும் தியாகம் செய்ய வேண்டும் என்பது நியாய விதி.

இதனால்தான், தர்ம சாஸ்திரங்கள் பெண்ணைக் கொல்லக் கூடாது என்று விதித்திருந்தாலும் ஸ்ரீராமன் தாடகையைக் கொன்றான். ராவணன் பிரம்மாவின் கொள்பேரன். அந்தணர்களில் முதல்வன். ராவணனுடைய கொடுமையினின்று உலகத்தைப் பாதுகாப்பதாகத் தான் அளித்த வாக்கை ராவண ஸம்ஹாரத்தின் மூலம் காப்பாற்றிக் கொண்டான் ஸ்ரீராமன்.

அசுர சம்பத்தை எதிர்த்துப் போராடியது தெய்வ சம்பத்து என்பதும் பாபத்தின் விளைவு மரணம் என்பதும் இந்த இரண்டு விஷயங்களிலும் எடுத்துக் காட்டப்படுகின்றன. உலக க்ஷேமத்தைக் குலைத்து அமைதியான வாழ்க்கையைக் கெடுப்பவர்களை எதிர்த்துப் போராடவும், அவசியமானால் அவர்களை வதைக்கவும், தயங்கக் கூடாது என்பது இதிலிருந்து தெரிகிறது.] தர்மசாஸ்திர விதிகளுக்கு விரோதமாக இம்மாதிரி செய்கை அமைந்துவிடுகிறதே என்று மேலெழுந்தவாரியாகத் தோன்றினாலும் அதற்காகப் பின்னடையக் கூடாது. தர்ம சூக்ஷ்மங்கள் சாதாரண மக்களின் அறிவுக்குச் சுலபமாக விளங்காது

துஷ்டர்களை நிக்ரஹம் செய்யும்போது கொல்லத்தகாதவர்களை அவமானம் செய்து அனுப்பினாலே போதும். அதுவே அவர்களுடைய மரணத்துக்கு ஒப்பானது. சூர்ப்பனகைக்கு ஸ்ரீராமன் இழைத்த அவமானம் அவளுடைய மரணத்துக்குச் சமமானதே. அநீதியாக க்ஷத்திரிய வம்சத்தின்மீது புரிந்த யுத்தங்களுக்குப்



பரிகாரமாக, பரசுராமன தன் வலிமையை ஸ்ரீராமனிடம் இழக்க நேரிட்டது.

தீமை எந்த இடத்தில் காணப்பட்டாலும், யாரிடம் காணப்பட்டாலும் அது ஒடுக்கப்பட வேண்டும் என்பதுதான் ராமாயணத்தின் சாரமான நீதி. தர்மத்தின்மீது ராமனுக்கு இருந்த பற்றுதல் எவ்வளவு சந்தேகத்துக்கும் இடமில்லாதது. தர்மத்தைப் பரிபாலிப்பதில் தான் மட்டும் திருப்தியடையாமல், உலகத்தோர்களும் தான் தருமபரிபாலனம் செய்வதை உணர வேண்டும் என்பதையும் விரும்பினான் ஸ்ரீராமன். அதற்காகவேதான் சீதாதேவி இரண்டுமுறை சோதனைக்குள்ளானாள். அக்னிப்ரவேசம்செய்ததன் மூலமும், இரண்டாவது தடவை கானகம் சென்றதன் மூலமும், ஸ்ரீ ராமனுடைய தர்மஸ்தாபனத்தில் தன் பங்கை சீதாதேவி மேற்கொண்டிருக்கிறாள்.

ஸ்ரீராமன் பிறப்பில் ஒரு க்ஷத்திரியன். ஆனாலும் சாதுக்களும், ரிஷிகளும், அந்தணர்களும், சாதாரண மக்களும் அவனைப் பாகுபாடின்றி வணங்குகின்றனர். அவன் இளவரசன் என்பதற்காகவோ அரசன் என்பதற்காகவோ இவ்வாறு வணங்கப்படவில்லை. தெய்வ சம்பத்தை அபரிமிதமாகப் பெற்றிருந்ததாலும், ராமாயண ஆரம்பத்தில் வால்மீகியின் கேள்விக்கு நாரதர் சொன்ன பதிலில் விவரித்துள்ள உன்னதமான குணங்களைப் பெற்றிருந்ததாலும், எல்லாரும் ஸ்ரீராமனை வணங்குகின்றனர். ஆரம்பத்தில் சொன்ன சிரேஷ்ட குணங்களின் விவரணம்தான் ராமாயணத்தின் பின் அத்தியாயங்களில் செய்யப்பட்டிருக்கிறது.

ராமாயணத்தில் நாராயணனே மனிதனாக அவதரித்தார். எந்த விதமான கஷ்டங்கள் ஏற்பட்ட போதிலும், எப்படிப்பட்ட இடையூறுகள் நேர்ந்தாலும், என்ன விளைவுகள் நேர்ந்தாலும் மனோதிடம் குன்றாது தர்மத்தில் நிலைத்து நிற்க வேண்டும் என்பதைச் சாதாரண ஜனங்களுக்கு ஸ்ரீராமன் நடத்திக் காட்டவே மனிதனாகத் தோன்றி வாழ்ந்தார். பிறப்பில்லாத சத்தியவஸ்து பிறவியெடுத்து மானிட உருக்கொண்டது மனித உள்ளங்களில் அறநெறியை நிலைக்கச் செய்வதற்காகத்தான். சிலர் சொல்லுவது போல் இதை இனச் சண்டையென்றோ, உள் மக்களுக்கும் படையெடுத்துவந்த அன்னியர்களுக்கும் நடந்த யுத்தம் என்றோ, நம் நாட்டினரைச் சுரண்ட வந்த அயல் நாட்டினர் போட்ட சண்டை என்றோ விளக்கம் செய்வது அறியாமையாகும். ராமாயணம் ஒரு தெய்விகக் கதை. எப்போதெல்லாம் உலகத்தில் தீமை அதர்மம் மேலோங்கி வளர்ந்து, தெய்வத்தின் உதவியின்றி அவற்றை ஒடுக்க முடியாது என்ற நிலைமை உண்டாகின்றதோ அப்போதெல்லாம் இம்மாதிரி அவதாரங்கள் நிகழும். துஷ்டர்களைத் தங்களது அசுர சம்பத்தின் விளைவுகளிலிருந்து விடுவித்து அவர்கள் இருதயத்திலும் தெய்வசம்பத்தை நிலைநாட்ட இம்மாதிரி அவதாரங்கள் அவசியமாகின்றன.

# சரித்திரத்தைத் திரிக்கும் பேதமை

கொழும்பு, ஏப்ரல் 9உ.

சமீபத்தில் யாழ்ப்பாணம் மத்தியக் கல்லூரி மண்டபத்தில் வட இலங்கை வித்தியாதிகாரி திரு எஸ்.யு. சோமசேகரம் அவர்களது தலைமையில் ஒரு முக்கியமான மகாநாடு நடைபெற்றது. நீதிபதிகளும், வழக்கறிஞர்களும், கல்லூரித் தலைமை ஆசிரியர்களும், சரித்திர ஆசிரியர்களும் சரித்திர ஆராய்ச்சியில் அக்கறையுடைய அறிஞர்களும் அந்த மகாநாட்டுக்குச் சமூகம் கொடுத்திருந்தார்கள். கல்வி அதிகாரி மகாநாட்டின் இலட்சியத்தை எடுத்துரைக்கையில் தென்னிலங்கையிலுள்ளவர்கள் (சிங்களவர்கள்) தங்களுடைய கலாசாரத்தையும் பண்பாட்டையும் பரப்ப வேண்டுமென்ற ஆர்வத்தினால் புதிய புதிய சஞ்சிகைகளையும் புத்தகங்களையும் வெளியிட்டு வருகிறார்களென்றும், தமிழர்கள் நாட்டின் சரித்திரத்தை அறிந்து கொள்ளுவதின் முன்னால் தங்களது பகுதியின் சரித்திரத்தை அறிந்து கொள்ளுவது அவசியமென்றும் தமிழர் சரித்திர ஆராய்ச்சிக்கு ஒரு கழகத்தை ஆரம்பிக்கவே அன்றைய மகாநாடு கூட்டப்பட்டிருப்பதாயும் சொன்னார்.

கலைப்புலவர் திரு க. நவரத்தினம் ஒரு அருமையான ஆராய்ச்சிச் சொற்பொழிவு நிகழ்த்தினார். சரித்திரமென்ற பெயரில் தென்னிலங்கைச் சிங்களவர்களினால் கொஞ்ச காலமாக வெளியிடப்பட்டு வரும் புத்தகங்கள் எவ்விதம் உண்மைக்கு மாறாகவும் சரித்திர நிகழ்ச்சிகளைத் திரித்தும் எழுதி வருகின்றன என்பதற்கு அவர் சில உதாரணங்களை எடுத்துக் காட்டினார். சிங்களச் சிற்பங்கள் என்ற தலைப்புடன் முன்னைநாள் புதைபொருள் ஆராய்ச்சி இலாகா உதவிக் கமிஷனர் திரு தேவேந்திரா என்பவர் சமீபத்தில் எழுதி வெளியிட்டிருக்கும் ஒரு நூலில் ஆங்கிலேயர்கள் இலங்கைக்கு வந்த பிறகு தான் ராமாயண காவியம் ஏற்பட்டதைப் போலவும் ராமாயணத்துக்குச் சான்றாக இலங்கையில் ஒன்றுமே யில்லையென்றும் எழுதியிருப்பதைச் சுட்டிக்காட்டி, நுவரெலியிலும் வேறு பல இடங்களிலும் உள்ள விபீஷணர் கோவிலும் சீதா எலியா, சீதாவாகா, சீதாவாவி முதலான பெயர்களும் எதைக் குறிக்கின்றன என்று வினவினார். காஷ்மீரத்திலிருந்து கன்னியாகுமரி வரையில் மட்டுமல்ல, அதற்கு அப்பாலும் பெண்மைக்கு ஒரு உதாரணமாக இந்துக்கள் கல்பகோடி வருடங்களாகப் போற்றி வரும் சீதையை ராவணன் கற்பழித்ததாக மேற்படி ஆசிரியர் குறிப்பிட்டிருப்பதையும் கலைப்புலவர் வன்மையாகக் கண்டித்தார். கந்தரோடை என்ற தமிழ்ப் பகுதியில் ஒரு புத்தர் சிலை சமீபத்தில் கண்டெடுக்கப்பட்ட காரணத்தினால் அந்தப் பகுதியின் பூர்வீகக் குடிகள் சிங்களவர்களாகவே இருக்க வேண்டுமென வாதிக்கப்படுவது எவ்வளவு பெரிய அபத்தமென்பதைச் சுட்டிக்காட்ட கி. பி. ஏழாவது நூற்றாண்டு வரையில் தென்னிந்தியத் தமிழகத்தில் பௌத்தம் பரவியிருந்ததாலும் அங்கு பல பௌத்தச் சின்னங்கள் இருப்பதாலும் தென்னிந்தியா சிங்கள நாடு என்றும் தமிழர்கள் பிற்காலத்தில் தென்னிந்தியாவில் குடியேறியதாயும் ஓர் பிரகஸ்பதி சொல்லத் தொடங்கினால் நாம் ஆச்சரியப்படத் தேவையில்லையென்றார். ஈழத் தமிழர்களைப் பற்றித் தவறான அபிப்பிராயங்களை உலகெங்கிலும் பரப்ப இப்போது முயற்சிகள் கட்டுப்பாடாக நடந்து வருவதினால், உண்மையான சரித்திர வரலாறுகளை உள்ளது உள்ளபடி ஆராய்ந்து வெளியிடுவது தமிழர் கடமையென்பதைக் கலைப்புலவர் திரு நவரத்தினம் பலமாக வற்புறுத்தினார்.

விசேஷ அழைப்பின்மீது மகாநாட்டுக்கு வந்திருந்த வீரகேசரி ஆசிரியர் திரு கே. வி. எஸ். வாஸ் பேசுகையில், சென்ற சில ஆண்டுகளுக்கிடையில் இலங்கையைப் பற்றி எழுதப்பட்ட அனேகம் புத்தகங்களைப் படித்து விமரிசனம் செய்யும் வாய்ப்பு தமக்கு ஏற்பட்டதாயும் அவற்றிலெல்லாம் ஈழத் தமிழர்களை வேண்டுமென்றே சிறுமைப்படுத்தியும் சில இடங்களில் அவமானப்படுத்தியும் எழுதியிருப்பதைக் காணத் தமக்கு அதிர்ச்சியும் ஆச்சரியமும் ஏற்பட்டதாயும் கூறினார். இலங்கைக்கும் ராமாயணத்துக்கும் சம்பந்தமில்லையென்றால் இங்கு பௌத்தம் வருவதற்கு முன்பிருந்தே விபீஷண வழிபாடு இருந்து வருவதும் இன்றைக்கும் விபீஷணரை இலங்கையைக் காக்கும் தெய்வங்களிலே ஒன்றாகப் பௌத்தர்கள் நம்புவதும் எதைக் குறிக்கின்றதென்று வினவினார். ஸ்ரீபாதமலைமீதுள்ள திருவடியை ஸ்ரீயின் அதாவது விஷ்ணுவின் பாதமென்றால் இந்து சமயசார்புடையதாகி விடுமே யென்று அதை எமபாதமென்று நிலைநிறுத்த இலங்கை பல்கலைக் கழகப் புதைபொருள் ஆராய்ச்சிப் பகுதி பேராசிரியர் டாக்டர் பரணவிதானே என்பவர் சமீபத்தில் ஒரு விநோதமான புத்தகத்தை எழுதி வெளியிட்டிருப்பதை எடுத்துக் காட்டினார்.

முடிவில் திரு சோமசேகரத்தைத் தலைவராகவும் திரு கலைப்புலவர் க. நவரத்தினம் வைத்தீஸ்வர வித்தியாலயத் தலைமை ஆசிரியர் அம்பிகைபாகன் ஆகியவர்களை உபதலைவர்களாகவும், திரு வி. எஸ். நவரத்தினம், திரு கே. வி. நடராஜா ஆகியவர்களை இணைக் காரியதரிசிகளாகவும், திரு சீனிவாசகத்தை நிதி அதிகாரியாகவும் கொண்ட சரித்திர ஆராய்ச்சிக் கழகம் ஒன்று நிறுவப்பட்டது.

## வகுப்புவாதத்துக்குப் பின் சமயவாதம்

போலீஸ் இலாகா தலைவரான இன்ஸ்பெக்டர் ஜெனரல் திரு ஓஸ்மண்ட் டி. சில்வா என்பவரின் பதவிகாலம் சாதாரணமாக ஜூலை மாதத்தில் முடியவேண்டும். அவருடைய பதவிகாலத்தை நீடிக்க வேண்டுமென்று பலரும் கேட்டுக்கொண்



சங்கீத நாடக அகாடமி இவ்வருஷம் வழங்கியுள்ள பரிசுகளில் இரண்டு தென்னகத்தைச் சேர்ந்த பிரபல சங்கீத வித்வான்கள் இருவருக்கு அளிக்கப்பட்டுள்ளதைக் கண்டு தென்னாடு மகிழ்ச்சி அடைகிறது. வாய்ப்பாட்டில் முதன்மையாக விளங்குபவருக்கென அளிக்கப்படும் பரிசு சங்கீத கலாநிதி ஜி. என். பாலசுப்ரமணியம் அவர்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறது. வாத்திய இசையில் உன்னதமாக விளங்குபவருக்கான பரிசு பிடில் வித்வான் சங்கீத கலாநிதி ராஜமாணிக்கம் பிள்ளை அவர்களுக்குக் கிடைத்திருக்கிறது. இவ்விருவருடைய வித்வத் திறமையைப் பற்றிக் குறிப்பிடுவது மிகையாகும். ஏற்கனவே பல்லாண்டுகளாகச் சங்கீத ரசிகர்களின் உள்ளங்களில் நிறைந்துவிட்ட இவ்விரண்டு வித்வான்களுக்குப் பரிசுகள் வழங்கியதன் மூலம் சங்கீத நாடக அகாடமி தன்னையே கௌரவித்துக் கொண்டது எனலாம். சிறந்த நடிகர் என்று திரு அசோக்கு-மாருக்குப் பரிசு அளித்திருப்பது திரைப்பட அன்பர்கள் அனைவருக்கும் திருப்தியளித்திருக்கும். மார்ச் 30ந் தேதி நடந்த ஒரு பிரத்தியேக வைபவத்தில் இந்தியாவின் உபஜனாதிபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் மற்றக் கலைஞர்களுடன் இம் மூன்று கலா சிரோன்மணிகளுக்கும் பரிசுகளும் விருதுகளும் வழங்கிக் கௌரவித்தார்.

---

டும் அதற்குப் பிரதம மந்திரி இணங்க மறுத்து விட்டார். மற்றவர்களுக்கும் சந்தர்ப்பமளிப்பதற்காகத் திரு டி. சில்வாவின் பதவியை நீடிக்க முடியாதென்று பிரதமர் சொல்லியிருந்தால் எவ்வளவோ கௌரவமாக இருந்திருக்கும். இதற்கு மாறாக இன்ஸ்பெக்டர் ஜெனரல் திறமையற்றவரென்றும் ஆகையால் அவரைப் பதவியிலிருந்து நீக்குவதாயும் மட்டரகமாகப் பிரதமர் சொல்லியிருக்கிறார். அப்படியானால் திறமையற்ற ஒருவரை ஏன் அவரது பதவிகாலம் முடியும்வரையில் பிரதமர் வேலையில் வைத்திருந்தார்?

இதுவாவது போகட்டும். இன்ஸ்பெக்டர்ஜெனரல் ஒருவர் வேலையிலிருந்து விலகினால் அவருக்கு அடுத்தபடியாக உள்ளவர் ஒருவரை நியமிப்பதுதான் சம்பிரதாயம். ஐந்து உதவி இன்ஸ்பெக்டர் ஜெனரல்களையும் பிரதமர் அழைத்து அந்த ஐவரும் சிங்களவர்களாயிருப்பினும் (ஒருவர் பறங்கியர்) கிறிஸ்தவர்களாதலால் இன்ஸ்பெக்டர் ஜெனரல் பதவியில் அவர்களில் யாரையும் நியமிக்க முடியாதென்றும் ஒரு சிங்கள பௌத்தரையே தற்போதையச் சூழ்நிலையில் இன்ஸ்பெக்டர் ஜெனரலாக நியமிக்க வேண்டியிருக்கிறதென்றும் கூறிவிட்டு நிலமந்திரி இலாகாவைச் சேர்ந்தவரும் போலீசுடன் எவ்விதத் தொடர்பும் இல்லாதவருமான திரு அபயக்கூன் என்பவரைப் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரலாக நியமித்திருக்கிறார். சிங்கள பௌத்தரல்லாத ஒரு இன்ஸ்பெக்டர் ஜெனரலிடம் சிங்கள பௌத்தர்களுக்கு நம்பிக்கையிருக்காதென்று பிரதமர் கருதுவதாயின் அவரிடம் பௌத்தர்களல்லாத இந்துக்கள், இஸ்லாமியர், கிறிஸ்தவர் ஆகியவர்களுக்கு நம்பிக்கையிருக்க முடியுமா?

இதற்கிடையில் தற்சமயமுள்ள இன்ஸ்பெக்டர் ஜெனரலையே தொடர்ந்து வைத்திருக்கக் கதிர்காமக்கடவுளை (தமிழர்கள் முருகனென்றும் சிங்களவர்கள் கதிர்காம தேவோ என்றும் வழிபடும் தெய்வத்தை) வேண்டிக் கொள்ளுவதற்காகப் பிக்ஷுக்கள் கதிர்காமத்துக்கு ஒரு பெரிய ஊர்வலமாகச் செல்ல உத்தேசித்திருக்கிறார்கள்.

பிரதமரின் பிற்போக்கான இந்த நடவடிக்கையைப் பின்பற்றித் திரு ஸி. ஸி. திசநாயகா என்ற உதவி போலீஸ்-இன்ஸ்பெக்டர் ஜெனரல் தமது பதவியை ராஜினாமாச் செய்து விட்டார். அவரைப் பின்பற்றி மற்றும் பல உயர்தர போலீஸ் அதிகாரிகள் பதவிகளை உதறித் தள்ளுவார்களென்று எதிர்பார்க்கப்படுகிறது. இதுகாரணமாக, போலீஸில் ஒரு பெரிய நெருக்கடி உருவாகிக்கொண்டுவருகிறது.

## தமிழரசுத் தந்தையின் ஜோதிடம்

தமிழரசுக் கட்சியின் தந்தையான திரு எஸ். ஜே. வி. செல்வநாயகத்திடம் கட்சி வேலைகளுக்காக ரூபாய் ஆயிரத்தொன்று அடங்கிய ஒரு பண முடிப்பைக் கொடுக்க இணுவில் என்னுமிடத்தில் இவ்வாரம் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. அக்கூட்டத்தில் திரு செல்வநாயகம் பேசியபோது தமிழ் இனத்தின் உரிமைப் போராட்டத்துக்காகத் தமிழ் மக்கள் எத்தனையோ மாதிரியான தியாகங்களைச் செய்திருக்கிறார்களென்றும் அவர்களது போராட்டம் வெற்றி பெறும் காலம் விரைவில் நெருங்கி விட்டதென்றே தாம் நம்புவதாயும் கூறினார். பூரண வெற்றி கிடைக்கும் வரையில் போராட்டம் தொடர்ந்து நடக்கத்தான் வேண்டுமென்றும் திரு செல்வநாயகம் எடுத்துரைத்தார். — ரஜனி

பாகவதமாகிய

# பக்தி வயல்

பௌராணிகர்

## 33. யயாதியின் கதை

"சந்திர வம்சத்தில் பிறந்த நகுஷனுக்கு யயாதி என்பவன் இரண்டாவது புதல்வன். முதல்வனான யாதி என்பவன் தனக்குப் பட்டம் வேண்டாம் என்று கானகம் சென்று விட்டான். யயாதி அரசனானன். சுக்ராசாரியாரின் மகளை மணந்து வெகு நாட்கள் பூமியை ஆண்டான்" என்றார் சுகர் பரீக்ஷித்திடம்.

"சுக்ராசாரியார் அந்தணர் ஆயிற்றே. அவர் மகளை மன்னவன் எப்படி மணந்தான்?" என்று பரீக்ஷித்து கேட்டார். அப்பொழுது யயாதியின் கதையைச் சுகர் சொல்லுகிறார்:

சுக்ராசாரியாரின் மகள் தேவயானியும் அசுர ராஜன் மகள் சர்மிஷ்டாவும் ஒரு நாள் நகரத்துக்கு வெளியே யிருந்த பூங்காவில் உலாவிக் கொண்டிருந்தனர். அங்கிருந்த தடாகத்தில் இருவரும் இறங்கி நீராடிக் களித்தனர். குளித்து விட்டுக் கரை ஏறியதும் அவசரத்தில் சர்மிஷ்டா ஆசாரியன் மகளான தேவயானியின் ஆடையை அணிந்து கொண்டாள். தேவயானிக்குக் கோபம் வந்தது. "ஓமத்தில் இடவேண்டிய ஆஹுதியைத் தூக்கிப்போகும் பெண் நாயைப்போல் என்னுடைய ஆடையை அணிவதில் இச் சேடிப் பெண்ணுக்கு என்ன செருக்கு? நான் குருகுலத்தில் பிறந்தவள். இவள் தந்தை அசுரன். என் தகப்பனாருடைய சிடன். இவள் என் ஆடையை உடுக்கலாவது" என்று ஏளனமாய்ப் பேசினாள். அசுரகுமாரி சர்மிஷ்டா பாம்பெனச் சீறினாள். "காக்கைக் கூட்டம் போல் எங்கள் வீட்டு வாயிலில் நின்று கொண்டு பிச்சை எடுப்பவளுக்குப் பேச்சு மட்டும் பெரிதாக இருக்கிறது" என்று கூறி அவள் ஆடையைப் பிடுங்கிக் கொண்டு அங்கிருந்த ஒரு கிணற்றில் அவளைத் தள்ளி விட்டாள்.

ஏதோ காரணமாக யயாதி மன்னன் சிறிது நேரத்துக் கெல்லாம் அவ்விடம் வர நேர்ந்தது. தாகம் மேலிட்டுக் கிணற்றை அண்டின அரசன் அதனுள் பரிதவிக்கும் பெண்ணைக் கண்டான். தனது மேலாடையைக் கொடுத்து அவளைக் கை தூக்கினான். "அரசே! என்னைக் கை தொட்டுத் தூக்கினீர். என் கை இனிமேல் உனக்கே உரியது" என்றாள் தேவயானி. இதுவும் விதியின் விளையாட்டு என்று எண்ணி யயாதியும் அவளை அங்கீகரித்தான்.

யயாதி திரும்பியதும் தேவயானி அழுது கொண்டே தன் தந்தையிடம் சென்று சர்மிஷ்டா தனக்குச் செய்த குற்றத்தை எடுத்துரைத்தாள். சுக்ராசாரியார் மன வருத்தம் அடைந்தார். பிறர் உதவியால் வாழும் வழியை நிந்தித்தார். மகளுடன் ஊரை விட்டு வெளியேறினார். அசுர மன்னன் இதைக் கேட்டு அஞ்சி அவரை வழியில் சந்தித்து வணங்கி என்ன வேண்டுமானாலும் செய்வதாய் வாக்களித்தான். "தேவயானியின் இச்சை நிறைவேற வேண்டும்" என்றார் சுக்கிரர்.

"நான் போகும் இடத்துக்கெல்லாம் சர்மிஷ்டா அவளுடைய தோழிப் பெண்களுடன் என்னைப் பின்தொடர வேண்டும்" என்றாள் தேவயானி. அசுரகுலத்துக்கு அபாயம் வரக்கூடாதென்று சர்மிஷ்டா அன்றுதொட்டு தேவயானிக்குச் சேடித் தொழில் செய்ய இணைந்தாள்.

தேவயானி யயாதியை மணந்து கொண்டு அவ்வரசனோடு வாழலானாள். சர்மிஷ்டா அவளுக்குச் சேவகம் செய்து வந்தாள். நாளடைவில் தேவயானிக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அப்பொழுது சர்மிஷ்டாவுக்குத் தனக்கும் ஒரு குழந்தை வேண்டும் என்ற ஆசை மிகுந்தது. யயாதியும் அவள் ஆசைக்கு இணங்கினான். இதை அறிந்த தேவயானி தன் தந்தை வீட்டுக்குச் சென்று விட்டாள். யயாதி அவளிடம் நல் வார்த்தை கூறி வருந்தி அழைத்தான்; ஆனால் அவள் பிடிவாதமாகவே இருந்து விட்டாள். சுக்கிராசாரியார் யயாதியைச் சபித்தார். "பொய் யுரைத்துப் பெண்ணிடம் மயங்கும் மதியீனனே! அருவருப்பளிக்கும் முதுமையை நீ உடனே அடைவாய்" என்றார். "உம்முடைய மகளிடம் எனக்கு ஆசை தீரவில்லையே" என்றான் யயாதி. "வேறொருவரோடு உனது முதுமையை மாற்றிக் கொள்ளலாம்" என்று சமாதானம் அளித்தார் அசுர குரு.

தலைநகர் திரும்பிய மன்னன் தனது முதல் மகன் யதுவை விளித்துத் தனது முதுமையை ஏற்றுக் கொள்ளும்படி வேண்டிக் கொண்டான். யது அவ்வேண்டுகோளை மறுத்து விட்டான். மற்ற மைந்தரும் அவ்வாறே மறுத்தனர். கடைசி மகன் பூரு என்பவன் தந்தையின் ஆசையை நிறைவேற்ற முன் வந்து முதுமையை ஏற்றுக் கொண்டான்.

பல நாள் சிற்றின்பங்களை அனுபவித்த யயாதிக்கு ஒரு நாள் போதுமென்ற எண்ணம் வந்தது. ஆசையை ஒழித்தே அடக்க வேண்டும்; அனுபவித்துத் தீர்ப்பது என்பது நெருப்பை நெய்விட்டு அணைப்பதுபோல் முடியாத செயல் என்று தெரிந்து கொண்டான். தன் மகனிடமிருந்து முதுமையை வாங்கிக் கொண்டான். பூருவை அரசனாக்கி விட்டு அரண்யம் சென்று ஆண்டவனை எண்ணி எண்ணி எஞ்சிய நாட்களைக் கழித்தான்.

## ரந்திதேவன் கதை

பூரு வம்சத்தில் பிறந்த துஷ்யந்தன் விசுவாமித்திர முனிவருக்கும் மேனகைக்கும் பிறந்த சகுந்தலையை மணந்து கொண்டான். ஒருநாள் வேட்டையாடச் சென்ற துஷ்யந்தன் கண்வருடைய ஆசிரமத்தை அடைந்தான். அங்கு ஸ்ரீ தேவியோ என்று ஐயம் தரும் எழில் வாய்ந்து, இருக்குமிடத்துக்கே ஒளியை நல்கும் மங்கையைக் கண்டு மன்னவன் அவனிடம் காதல் கொண்டான். "தாமரைக் கண் வாய்ந்த நீ யார்? யாருடைய மகள்? ஏன் கானகத்தில் வாழ்ந்து வருகிறாய்?" என்று வினவினான். "நான் விசுவாமித்திர முனிவரின் மகள். என்னை என் தாய் மேனகை கைவிட்டுச் சென்றாள். எனது கதையைக் கண்வர் அறிவார். உங்கள் வரவு நல்வரவு ஆகுக. அமருங்கள். எங்களுடைய உபசாரத்தை ஏற்றுக் கொள்ளுங்கள்" என்று பணிவுடன் மொழிந்தாள் சகுந்தலை. "குசிகன் மகளுக்குப் பொருத்தமான சொற்களே இவை. அரசிளங் குமரிகள் மணாளனை வரிப்பது இயல்பே" என்று கூறி துஷ்யந்தன் சகுந்தலையைக் 'காந்தர்வ விவாகம்' (அதாவது அரசருக்கு உரியது; மனம் இசைந்ததும் மோதிரம் மாற்றி மணம் செய்து கொள்ளுதல்) செய்து கொண்டான்.

மறுநாள் காலையில் அரசன் நாடு சென்று விட்டான். நாளடைவில் சகுந்தலைக்கு ஒரு மகன் பிறந்தான். கண்வர் குழந்தைக்கு உரிய சடங்குகளைச் செய்தார். அரச குலத்தைச் சேர்ந்த சிறுவனும் சிறு வயதிலேயே சிங்கங்களோடு விளையாடும் திறமையை எய்தினான். தகுந்த தருணத்தில் சகுந்தலை தனது மைந்தனோடு மன்னவனை நாடிச் சென்றாள். மன்னன் இவ்விருவரையும்ஏற்கவில்லை. அப்பொழுது ஆகாயத்தில் அசரீரி கேட்டது.

"கருவை வைத்துக் காப்பாற்றும் உரிமை மட்டும்தான் தாய்க்கு உண்டு. மகன் தகப்பனுக்கே உரியவன். ஆகவே, அரசே! உன் மனைவியையும் மகனையும் உடனே ஏற்றுக் கொள்."

துஷ்யந்தன் அவர்களை ஏற்றுக் கொண்டான். அவனுக்குப் பிறகு பரதன் நாட்டை ஆண்டான். அந்த வம்சத்தில் பிறந்தவர் ரந்தி தேவர். அவருடைய புகழை மூவுலகிலும் இன்றும் பாடுகிறார்கள்.

கொடையில் இணையற்றவராய் விளங்கினார் ரந்தி தேவர். தேடாமல் கிடைத்ததைக் கொண்டு காலம் கழித்து வந்தார். இருந்ததையெல்லாம் அள்ளிக்கொடுத்து விட்டார். மாலை உணவுக்கு வழியின்றித் தம்மை ஏழையாக்கிக் கொண்டார். பசியில் வருந்துவதையும் பொருட்படுத்தாத மகான். ஒரு சமயம் நாற்பத்தியெட்டு நாள் உணவின்றிக் கிடந்தார். நாற்பத்தி ஒன்பதாவது நாள் எதிர் பாராமல் அவருக்குப் பால் பாயஸமும் கோதுமைக் கூழும் நீரும் கிடைத்தன. அவ்வுணவை உட்கொள்ளப் போகும் தறுவாயில் அதிதியாய் ஒரு அந்தணன் தோன்றினான். அது ஹரியைத் தவிர வேறில்லை என்று திண்ணம் கொண்டிருந்த ரந்தி தேவர் உணவில் ஒரு பங்கை அவருக்கு அளித்தார். அந்தணன் போன பிறகு திரும்பவும் உண்பதற்குச் சித்தமானார் ரந்திதேவர். அப்பொழுது கீழ்குலத்தோன் ஒருவன் அங்கு வந்தான். மிஞ்சியதில் ஒரு பங்கை அவனுக்கு அளித்தார். அவன் சென்ற பிறகு நாய்கள் சூழ ஒரு புது மனிதன் தோன்றினான். "அரசே! எனக்கும் எனது நாய்களுக்கும் ஆகாரம் வேண்டும்" என்றான். ஹரியையே எங்கும் கண்ட ரந்திதேவர் மீதி இருந்த உணவை அவர்களுக்கு



அளித்து விட்டார். சிறிது நீர்மட்டும் மிஞ்சி இருந்தது. அது ஒரு மனிதனுடைய தாகத்தைத் தீர்க்கவே போதாத அளவில் இருந்தது. அப்பொழுது அங்கு ஒரு சண்டாளன் வந்து ''எனக்குத் தாகமெடுக்கிறது'' என்றான். அதைக் கேட்ட ரந்தி தேவர் மனம் கசிந்தார். ''யோக சித்திகள் வேண்டுமென்று நான் கடவுளைக் கேட்கவில்லை. எனக்கு முக்தியும் வேண்டாம். வருந்துவோர் மனத்தில் புகுந்து மற்றவர் வருத்தத்தை நான் வாங்கிக்கொண்டு அவர்களுக்கு ஆறுதல் அளிக்கும் திறமையைக் கோருகிறேன். இவ்விழிகுலத்தோனுக்கு நீரை அளித்ததும் என்னுடைய பசியும் பிணியும் பறந்து விட்டன'' என்று தமக்குள் எண்ணிக் களித்தார்.

ஆனால் வந்தவர்கள் வெறும் அதிதிகள் அல்ல. ரந்தி தேவரின் மனத்தைச் சோதனை செய்வதற்கென்று ஹரியினால் ஏவப்பட்ட பிரம்மன், விஷ்ணு, சிவனே யாவர். சண்டாளனுக்கு ஆசையோடு அரசன் நீரை அளித்ததும் மூவரும் தங்கள் சொந்த உருவோடு அவர் முன்தோன்றி அவரை வாழ்த்தினார்கள். மாயையை வென்ற மன்னவன் அவர்களிடம் தனக்கென்று ஒன்றுமே கேட்டுக் கொள்ளவில்லை. நாராயணனையே அல்லும் பகலும் நினைத்து அவன் தாள்களையே அடைந்தார்.

# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி

## 78

**சி**ரமப்பட்டுக் கல்வி கற்பவர்களே அறிவு அடைவார்கள். சோம்பேறிகளுக்கு அறிவு கிட்டாது.

**தொட்டனைத்து ஊறும்**
**மணற்கேணி மாந்தர்க்குக்**
**கற்றனைத்து ஊறும் அறிவு.**

தொட்டல் - தோண்டல்.

எவ்வளவு சிரமப்படுகிறாயோ அவ்வளவு அறிவு அடைவாய். ஆற்று மணலில் தோண்டிய அளவு நீர் ஊறும். கொஞ்சம் தோண்டினால் கொஞ்சம்தான் தண்ணீர் தோன்றும். ஆழத்தின் அளவு நீர், முயற்சியின் அளவு அறிவு.

* * *

**க**ல்வியின் சிறப்பு என்னவென்றால், குருவும் சீடனும் இருவரும் இன்பம் அடைகிறார்கள். சொல்லித் தருவது குருவுக்கு மகிழ்ச்சி தருகிறது. அறிவு அடையும் சீடனும் மகிழ்ச்சியடைகிறான். சொல்லித் தருவதே ஓர் இன்பம். அப்படியிருக்க மாணவன் தனக்கு நன்மை செய்தான் என்று குருவை நன்றியுடன் பாராட்டுகிறான். தன் செயல் தனக்கே தரும் மகிழ்ச்சி ஒருபுறம் இருக்க, தான் ஏதோ தந்து விட்டுச் சீடனை மகிழச் செய்ததாக மேற்கொண்டு ஒரு லாபமும் பெறுகிறான். நல்ல ஆசான் இருவிதத்தில் லாபம் அடைகிறான். தன் பணியே தனக்குத் தரும் இன்பம் ஒன்று. இவன் உலகத்துக்கு நன்மை செய்கிறான் என்று எல்லோரும் போற்றுவதும் மேற்கொண்டு பெறும் இன்பம். இதனாலேதான் கற்றறிந்தவர் கல்வியின் மேல் அளவற்ற மதிப்பு வைக்கிறார்கள்.

**தாம்இன் புறுவது**
**உலகுஇன் புறக்கண்டு**
**காமுறுவர் கற்றறிந் தார்.**

காமுறுதல் - பற்று வைத்தல்.

* * *

**மி**கவும் விரும்பத் தக்க நூல்கள் பலவும் படித்தறியாமல் சபைக்குள் நின்று பேசுவது மடமை. அது, சதுரங்கம் முதலிய ஆட்டம் ஆடுவதற்கு வேண்டிய கட்டங்கள் இல்லாமல் ஆடினால் எவ்வாறு பயனற்ற செய்கையோ அவ்வாறே ஆகும்.

**அரங்குஇன்றி வட்டுஆடி**
**யற்றே நிரம்பிய**
**நூல்இன்றிக் கோட்டி கொளல்.**

அரங்கு-ஆட்டம் ஆடுவதற்காக வகுக்கப்பட்ட கட்டங்கள். வட்டு-ஆட்டத்தில் உருட்டும் கருவி. கோட்டி-சபை-கோஷ்டி.






## சகட யோகம்

திடீரென்று தலைநகருக்கு யோகம் பிறந்திருக்கிறது. ஆஸ்திகத்தின் சின்னமாகிய ஆச்சாரியாள் சகடபுரத்தினின்றும் இங்கு எழுந்தருளியுள்ளார்கள். மைசூர் பீடத்தைச் சேர்ந்த அன்னார் கடந்த ஒரு வாரமாகப் பல பக்தர்களுக்குத் தரிசனம் தந்து உய்வித்து வருகிறார்கள். காலையும் மாலையும் நடக்கும் பூஜைக்குத் திரளான பக்தகோடிகள் விஜயம் செய்து அம்பாளின் அருளுக்குப் பாத்திரமாகி வருகிறார்கள். தில்லி வைதிகச் சங்கத்தின் ஆதரவில் தென்னிந்தியக் கழகத்தில் இந்தப் புனித கைங்கரியம் நடைபெறுகிறது. டாக்டர் கிருஷ்ணன் அவர்களைத் தலைவராகக் கொண்ட பஜனை சமாஜத்தார் இந்தச் சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் பெரிய அளவில் பூஜை ஏற்பாடு செய்து அனைவரின் உள்ளங்களையும் குளிரச் செய்தார்கள். யாத்திரை மார்க்கத்தில் வந்தசுவாமிகளை, திக் காரியதரிசி திரு எஸ். ரத்தினம் அவர்கள் வீட்டில் பூரண கும்பத்துடன் வரவேற்று, பஜனை சங்கீர்த்தனமும் வேத கோஷங்களும் முழங்க ஊர்வலம் அழைத்து வந்தது காணக் கண் கோடி வேண்டிய காட்சி.

## தென்றல் போன்ற குன்றக்குடிகள்

இதற்கிடையே சென்ற மாதம் வந்த மற்றொரு ஆஸ்திகச் சின்னத்தைப் பற்றியும் குறிப்பிட வேண்டும். குன்றக்குடியடிகளின் சொல் ஆற்றலை இன்றெல்லாம் கேட்கலாம். தெவிட்டாத தேன் என்று சொன்னால் அது சிறிதும் மிகையாகாது.

தமிழ்ச்சங்கத்தின் ஆதரவிலும், பஜனை சமாஜத்தாரின் ஆதரவிலும் அன்னார் அரும் பெரும் சொற்பொழிவுகளாற்றினார்கள். கருத்துக்களின் செறிவும் நிறைவும் பரிபூர்ணம். கேளுங்கள்: "ஹிருதயம் ஊமையாயிருந்தாலொழிய ஆண்டவன் செவிடல்ல." இது போன்ற தத்துவச் சுருக்கங்கள் பல நூறு அவர் பேச்சில் மிளிர்ந்தன. இதை யெல்லாம் பார்க்கும்போது ஸனாதனத்துக்கு என்றுமே அழிவு இடையாது என்ற எண்ணத் திண்ணம் உண்டாகிறதல்லவா?


குன்றக்குடி அடிகளார்

## சங்கீதத் திருவிழா

ஸ்ரீமதி 'எம். எஸ்.' ஸின் கச்சேரிகள் எப்போதுமே திருவிழாத் தன்மை அடைந்து வருகின்றன. சமீபத்தில் பழனியில் பங்குனி உத்திரத்தன்று இட்டத்தட்ட அரை லக்ஷம் ஜனங்கள் கான வெள்ளத்தைப் பருகினார்கள் என்று பத்திரிகையில் கண்டேன். தில்லி மதராஸி உயர்நிலைப்பள்ளியின் உதவி நிதிக்காக அன்னார் இம் மாதம் ஐந்தாம் தேதி லோதி ரோடு திறந்தவெளியில் நடத்திய கச்சேரியும் சிறந்ததொரு வைபவமாகவே அமைந்து விட்டது.



1. கச்சேரி நடைபெறுகிறது. 2. உதவி ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன், மந்திரி திரு எஸ். கே. பாட்டீல், டாக்டர் சுப்பராயன் முதலியோர். 3. ரசிகப் பெருமக்களில் ஒரு பகுதி 4. ஸ்ரீ சதாசிவம் தம்பதிகளைத் தில்லி அன்பர்கள் ரயிலடியில் வரவேற்றனர்.

கச்சேரி களை கட்டிச் சோபிதமாயிருந்தது என்பது வெறும் உபசார வார்த்தை. தோடி வர்ணத்திலிருந்து கண்ணன் ஓடி வந்த கதை சொல்லும் மீரா பஜன் வரை சபைத் திரள் லயித்துக் கேட்டுக் கொண்டிருந்தது. இந்தக் கச்சேரியில் நான் பெரிதும் ரசித்த இரு கிருதிகள் நீலகண்ட சிவனின் ''சம்போ மஹாதேவா''வும், ஸ்வாதித் திருநாளின் ''பாவயாமி'' என்ற ராமாயணக் கிருதியும். 'சம்போ மஹாதேவனுக்காகப் பௌளி ராகம் ஏற்பட்டதா, அல்லது பௌளி ராகத்துக்காக 'சம்போ மகாதேவ' ஏற்பட்டதா என்பது பற்றிச்சர்ச்சை இருக்கலாம். இவையிரண்டும் எம். எஸ். ஸிற்காகத்தான் ஏற்பட்டது என்பது பற்றிச் சந்தேகம் கிடையாது. இருதயத்தை நேரே தொடும் பாட்டு. ''பாவயாமி'' ஒரு ராக மாலிகை. சாவேரி, நாட்டைக் குறிஞ்சி, தன்யாசி, மோஹனம், முகாரி, பூரி கல்யாணி, மத்யமாவதி முதலிய புஷ்பங்கள் சரமாகக் கோக்கப்பட்டிருந்தன. சரங்களுக் கிடையில் ஜிகினா வேலை வேண்டுமல்லவா ஸ்வரங்கள் சிட்டையாய் அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டன. எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தாற் போல் ஒரு அவுட்டு வாண ராகக் கோவையான சிட்டாஸ்வரம். கேட்டுப் பார்க்க வேண்டும். எழுத இயலாது; பயனுமில்லை.

தில்லி மதராஸி பள்ளிக்கூடத்துக்கு இந்த உதவிக் கச்சேரியின் மூலம் ஐம்பதினாயிரம் ரூபாய் வசூலாயிற்று.

கச்சேரிபந்தல் நிர்மாணித்த ஸ்ரீ எம். கே. சிவசுப்பிரமணியம் அவர்களைப் பற்றி ஒரு வார்த்தை. ஆறாயிரம் பேர்கள் உட்கார வேண்டும். எல்லாரும் பக்கத்திலிருப்பது போன்ற பிரமை கொள்ள வேண்டும். பார்ப்பதற்கு ரம்மியமாயும் அமையவேண்டும். பள்ளிக்கூடத்தையே கட்டி உதவிய அன்னாருக்கு இது ஒரு சிரமமான காரியமல்ல. புதிதாக நிர்மாணிக்கப்படப் போகும் பள்ளிக்கூடத்தை அவருக்குள்ள உற்சாகத்தில் உன்னதமாய் அமைத்து விடுவார் என்பது திண்ணம்.

சகடபுரம் சந்நிதிக்கு பஜனை சமாஜத்தில் பாதபூஜை செய்கிறார்கள்.






தூய தவங்கள்
    தொடங்கிய தொல்லோன்
ஏய் அவன் வல்வில்
    இறுப்பதன் முன்னம்
சேயிழை மங்கையர்
    சிந்தைதொ றெய்யா
ஆயிர வில்லை
    அனங்கன் இறுத்தான்! — கம்பர்




**கா**லை ஏழே முக்கால் மணி.

முத்துசாமி கிளம்பினார்.

"இன்றைக்கு எப்படியும் நீங்கள் சீக்கிரம் வந்து விடுகிற வழியைப் பாருங்கள். யார் யார் வருகிறார்களோ, தெரியவில்லை."

"நான் பார்த்துத்தான் எனக்கும் எக்கச்சக்கமாக வேலை வந்திருக்கிறது, பார்வதி! இன்று நாள் முழுவதும் நான் வெய்யிலில் நின்றாக வேண்டும்!"

"சரியாய்ப் போச்சு. இன்று சைக்கிள் பிடிக்கிற நாளா?"

"ஆமாம். பகல் சாப்பாட்டுக்கே வருவது சந்தேகம். எந்த நாற்சந்தியிலே 'ட்யூட்டி' போடுகிறானோ, ஆபீசுக்குப் போனால்தான் தெரியும்!"

"நல்ல வேலை, உங்களுக்கென்று. ஒரு சமய சந்தர்ப்பத்துக்குக்கூட இடைஞ்சலாக. விட்டுத்தொலைக்கவும்வழியில்லை." பார்வதி அடித்துக் கொண்டாள்.

"இருபது வருட சர்விசுக்கு அப்புறம் ஞானோதயம் ஏற்பட்டு என்ன பிரயோசனம்?" என்று முணுமுணுத்தபடியே நகர்ந்தார் முத்துசாமி.

பகல் பன்னிரண்டரை மணி.

'காந்தி பூங்கா' நாற்சந்தியில் வெற்றிலைப் பாக்குக்கடை முகப்பில் ஒரு ஸ்டூலில் உட்கார்ந்து கொண்டிருந்தார் முத்துசாமி.

பொறியில் வந்து சிக்குகிற பறவைகள் மாதிரி, சைக்கிள்கள் வந்து வந்து மாட்டிக் கொண்டிருந்தன.

ஸ்தலத்திலேயே 'இரண்டு ரூபாய் பன்னிரண்டு நயே பைசே' செலுத்தாதவர்களை எந்தக் காரணம் கொண்டும் சைக்கிளோடு போக அனுமதிக்கக் கூடாது என்பது நகராட்சி ஆணையரின் கண்டிப்பான உத்தரவு.

முத்துசாமி கண்டிப்பான ஆசாமிதான். அவர் தம் கடமையை நிறைவேற்றும் பணியில் ஈடுபட்டிருந்த பொழுதிலும், அன்று அவர் மனம் மட்டும் வீட்டிலேயே இருந்தது.

ஆம்; இன்றைக்குத்தான் அந்தத் 'திருவாரூர் வரன்' அவருடைய பெண் அம்புஜாவைப் பார்க்க வருகிறான்.

எப்போது வருகிறானோ? வீட்டில் இருக்க முடியாதபடி இன்று பார்த்து இந்தச் சைக்கிள் பிடிக்கிற வேலை வந்து சேர்ந்ததே!

"சார்!"

திடுக்கிட்டு நிமிர்ந்தார் முத்துசாமி. எதிரில் ஒரு இளைஞன்.

"சார்! இந்த ஆளு ஏதோ ஆசுபத்திரிக்குப் போகிறாராம்" என்றான்.

அந்த இளைஞன் பரிதாபமாகப் பேசினான். "சார்! ரொம்ப அவசரம். என் உறவினர் ஒருவரைப் பார்க்க ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டும். சைக்கிள் இரவல். கொஞ்சம் தயவு செய்தீர்களேயானால், நான் என்றென்றைக்கும் மறக்க மாட்டேன்" என்றான்.

முத்துசாமிக்கும் ஒரு கணம் என்ன செய்வதென்று புரியவில்லை. போனால் போகிறது என்று விட்டுவிடுவோமா என்றுகூட எண்ணினார்.

ஆனால், அந்தச்சமயம் பார்த்துத்தானா ரெவின்யூ இன்ஸ்பெக்டர் ரங்கசாமி அங்கு வர வேண்டும்?

ரங்கசாமி பொல்லாதவன். அதோடு முத்துசாமியைக் கண்டாலே அவனுக்குப் பிடிக்காது. இம்மாதிரி ஒருவரை விடுவதைப் பார்த்தால் வேறு வினையே வேண்டாம்...எல்லாச் சைக்கிள்களையும் முத்துசாமி இப்படி விட்டு விடுவதாகப் போய் 'வத்தி' வைத்து விடுவான்.

முத்துசாமியின் மனம் மாறிவிட்டது.

"முடியாது சார்! பணத்தைக் கட்டி விட்டுச் சைக்கிளை எடுத்துப் போங்கள்."

"சார்! தயவு பண்ண வேண்டும்!"

"தயவு காட்டினால் எங்க உத்தியோகத்துக்கு ஆபத்து, ஐயா!"

"தயவுகாட்டச் சொல்லவில்லை, ஐயா! அவசரமாகப் போக வேண்டும். உங்களோடு அனாவசியமாக வாதாட வேண்டியிருக்கிறதே என்றுதான் பார்க்கிறேன்."

"யார் ஐயா உன்னே வாதாடச் சொன்னுங்க? பணம் கட்ட வக்கு இல் லேன்னு, ஏதாவது பொய் சால்சாப்பு சொல்கிறுயா? சைக்கிளே வைத்து விட் டுப் போய்ப் பணம் கொண்டாய்யா!"

இளேஞனின் முகம் சிவந்து விட்டது. "அனுவசியமாக மரியாதைக் குறை வாகப் பேசவேண்டாம், இந்தாங்க, ரசீ தைக் கொடுங்க!" என்று ஒரு ஐந்து ரூபாய் நோட்டை நீட்டினுன்.

"இதை முதலிலேயே செய்திருந்தால் இவ்வளவு பேச்சு இல்லே" என்றபடி ரசீதைக் கிறுக்கி, அவன் கையில் கொடுத் தார் முத்துசாமி.

**மா**லே ஆறு மணிக்கு நகராட்சிக் காரியாலயத்தில், வசூலான பணத்தை ஒப்படைத்து விட்டு வெளியே வந்தார் முத்துசாமி.

'இந்நேரம் அந்தத் திருவாரூர் ஆசாமி அம்புஜாவைப் பார்த்துவிட்டுப் போயிருப்பான். இன்றைக்கு என்று இவ்வளவு நேரம் ஆகிவிட்டதே?'

உடல் சோர்ந்து போனுலும், உள்ளத் தில், 'எப்படியாவது இந்த இடம் குதிர்ந்து விட்டால் அப்புறம் நமக்குக் கவலேயே இல்லே' என்ற நிம்மதியுடன் வீடு நோக்கி விரைந்தார் முத்துசாமி.

படி யேறியதும், எதிர்ப்பட்டார் தரகர் சுப்பு.

"என்ன பார்வதி! எல்லாம் சௌகர்ய மாக முடிந்ததா?" என்று கேட்டுக் கொண்டே சுப்பு உள்ளே நுழைந்தார்.

"முடிந்தது. அம்புஜா பாடினுள். அவர்களுக்குத் திருப்தி என்றுதான் தோன்றியது. 'போய் எழுதுகிறேன்' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டுச் சென்றுர்கள்" என்றுள் பார்வதி.

"பையனுடைய மாமா உள்ளூர் தானே, நான் நாளேக் காலேயில் அவரை விசாரித்துவிட மாட்டேன்?" ... என்று தைரியம் கொடுத்தார் சுப்பு.

"அந்தப் பையன் ஏதோ சொன் ஞனே?" என்று ஆரம்பித்தாள் பார்வதி.

"என்ன?" என்று முத்துசாமி பரபரப் புடன் வினவியதற்குத் தரகர் சுப்பு பதில் கூறினுர்.

"எல்லாம் உம்ம முனிசிபாலிடியைப் பற்றித்தான். நீர் அங்கே வேலே பார்க் கிறீர் என்று சொன்னபொழுது, அவன் இந்தத் தகவலேச் சொன்னுன். இன் றைக்குக் காலேயில்தான் ஊரிலிருந்து வந்ததும் வராததுமாக 'மாமாவின் பிள்ளேக்கு ஏதோ கிழே விழுந்து அடி பட்டுவிட்டது. அதனுல் மாமா தம் பிள்ளேயுடன் ஆஸ்பத்திரிக்குப் போயிருக் கிறுர்' என்று வீட்டிலே சொல்லியிருக் கிறுர்கள். உடனே நேரில் தானும் போய்ப் பார்க்க விரும்பி, பக்கத்து வீட்டுப் பையன் சைக்கிளே இரவல் வாங்கிக்கொண்டு புறப்பட்டிருக்கிறுன். 'பார்க்' முனேயிலே முனிசிபாலிடிக் காரன் சைக்கிள் பிடிக்கிற இடத்திலே அவன் மாட்டிக் கொண்டு விட்டான். சைக்கிள் இரவல் என்றும் ஆஸ்பத்தி ரிக்குப் போகிற அவசரம் என்றும் எவ் வளவோ சொல்லியும், அங்கே இருந்த கடன்காரன் விடமாட்டேன் என்று தாறுமாருகப் பேசி விட்டானும்."

பார்வதி தொடர்ந்தாள். "அந்தப் பிள்ளே எவ்வளவோ வாதாடியும் கேட் காமல் பணத்தை வாங்கிக் கொண்டு தான் விட்டானும். நீங்க அதிலே வேலே பார்க்கிறவர் என்று சொன்னபோது இந்தத் தகவலேச் சொன்னுன். உங்க



ளிடம் இதைச் சொல்ல வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். அவன் ரொம்பவும் வருத்தப்பட்டான்!"

"யார் ஐயா இன்னிக்கு 'பார்க்' கிட்டே சைக்கிள் பிடிச்சவன்?"

முத்துசாமிக்குத் தலே 'கிர்'ரென்று சுற்றுவது போல இருந்தது.

"ஒல்லியாக, சிவப்பாக இருப்பானே அந்தப் பையன்?"

"ஆமாம், உங்களுக்கு எப்படித் தெரி யும்?"—ஏக காலத்தில் கேட்டார்கள் பார்வதியும் சுப்புவும்.

"இந்த வரனும் தட்டிப்போன 'கேஸ்' தான், பார்வதி!" என்று முத்துசாமி பதில் அளித்ததைக் கேட்டுத் திகைத்த னர் இருவரும்.

பாவம், காலேயில் தாம் சண்டை போட்ட வாலிபனே தமது பெண்ணேப் பார்க்கவந்தவன் என்று அறிந்தபொழுது முத்துசாமியின் மனம் படும்பாடு அவர் களுக்கு எப்படித் தெரிய முடியும்?



# நல்ல தீர்ப்பு

காந்தன்

சினிமாப்படத்தில் வரும்காட்சிகளில் நம் நிஜ வாழ்க்கையின் பிரதிபலிப்பை அப்படியே காணும் பொழுதுதான், ரஸிகர்கள் தங்களையே மறந்து புளகமெய்துகிறார்கள். அதை விடுத்துப் படத்தில் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத நிகழ்ச்சிக் கோவைகளும், கதை அம்சங்களும், பாத்திரங்களின் நடை, உடை பாவனைகளும் காட்டப்படுமானால், ரஸிகர்கள் வேதனைப்படத்தானே நேரிடும்!

சில வருஷங்களுக்கு முன்பு வெளிவந்த தமிழ்ப் படம் ஒன்றில் கண்ட ஒரு அதிசயம் நினைவுக்கு வருகிறது. கதை பழைய காலத்து ஜமீன்தார் கதை, அதாவது தபால், தந்தி, கார், விமானம் முதலிய நவீன சாதனங்கள் இல்லாத காலத்தில் நிகழ்ந்த கதை. அப்படியிருந்தும் ஒரு நடன நிகழ்ச்சியில் மின்சார விளக்குகள் காணப்பட்டன. 'மெயின் ஸ்விச்'சை அணைத்து இருட்படலம் உண்டாக்கி ஒருபெண்மணி வில்லனிடமிருந்து தப்புவதாக ஒரு கட்டம் காட்டப்பட்டது. இது திரைப் படத்தில் ஒரு நல்ல உத்தியாகக் காணப்பட்டாலும், கதையோடு பொருந்தாத நிகழ்ச்சி என்பதைநாம் மறுப்பதற்கில்லை. இதற்கு உதாரணம் கூற வேண்டுமானால், கற்பனையாக ஒரு சம்பவத்தை நினைத்துப் பார்க்கலாம்.

கேகய நாட்டில், மாமன் வீட்டில் இருந்த பரதன், ஸ்ரீராமபிரான் வனம் சென்றதையும், தசரத மன்னன் துயரம் தாங்காமல் இறந்ததையும் ரேடியோவில் கேட்டதாக வைத்துக் கொண்டால்...?

இதுபோன்ற குறைகள் மிகவும் அற்பமானவை என்று படத்தின் டைரக்டரோ, படாதிபதியோ நினைக்கலாம். ஆனால் படம் பார்ப்பவர்கள் சின்னக் குறையையும் பொறுக்க மாட்டார்கள் என்பதையும் மனத்தில் வைக்க வேண்டும்.

படம் தத்ரூபமாக நிஜ வாழ்க்கையைப் பார்ப்பதுபோல் அமைய வேண்டுமானால், திரைக்கதையின் போக்கை அநுசரித்துப் படம் தயாரிக்கப் படவேண்டும். அந்த உரிமை டைரக்டருக்குப் பரிபூரணமாயிருக்க வேண்டும். அப்பொழுதுதான் படம் எல்லோரும்பாராட்டும்படியாக அமையும்.

முன்பெல்லாம் தமிழ்ப் படங்களில் நீதிமன்ற விசாரணைக் காட்சி ஓர் இன்றியமையாத அம்சமாக விளங்கி வந்தது. சமீப காலத்துப் படங்களில் மேற்படி காட்சியைக் காண்பது அரிதாகிவிட்டது.

அந்தக் குறையைப் போக்க ஸ்ரீ புரொடக்ஷன்ஸ் தயாரிப்பான ''நல்ல தீர்ப்பு'' இப்போது வெளிவந்திருக்கிறது.

தற்காலத்தில் நிகழ்ந்த கதையாயிருந்தும் சில இடங்களில் நிஜ வாழ்க்கை நிகழ்ச்சிகளுக்கு ஒவ்வாத காட்சிகள் வந்து விடுவதால், படம் 'சப்'பென்று போய் விடுகிறது.

பெரிய ஹோட்டலான ''இந்திர பவன'த்தின் மானேஜர் அடிக்கும் கேலிக்கூத்துகள் சகிக்கக் கூடியனவாயில்லை. பொறுப்புள்ள பதவியில் இருக்கும் ஒரு மனிதரை ஒரு பித்துக்குளியாக உருவகப்படுத்தியிருப்பதைக் காண மிகவும் வேதனையாயிருக்கிறது.

இந்தக் காட்சிகளில் ஹாஸ்யத்தைப் புகுத்த வேண்டும் என்று தீர்மானித்த மகானுபாவர் மிகவும் அநுதாபத்துக்குரியவர்!

வழக்கறிஞரான கதாநாயகன் 'இந்திர பவன'த்தில் தங்கியிருக்கும்போது வில்லனின் கையாட்கள் அவனை வேவுபார்க்கும் முறை துளியும் சரியில்லை. ஹோட்டல் தாழ்வாரத்தில், மாடிப் படியில் நடக்கும் கைகலப்புச் சண்டை முதலியவை கூட அதிகப்படியானவைதான்! இவை போன்றவைகளை ஆங்கிலப் படங்களில் பார்க்க வேண்டும். ஹோட்டல், போலீஸ் ஸ்டேஷன், ஆஸ்பத்திரி வார்டு முதலியவைகளெல்லாம் நிஜ வாழ்க்கையில் காண்பது போலவே இருப்பதால் படத்தின் தரம்



அவற்றின் காரணமாகவே பிரமாதமாக உயர்ந்து விடுகிறது.

இளம் வக்கீல் சங்கர் முதல் வழக்கிலேயே வெற்றி பெற்றுப் பெருமிதத்துடன் வீடு திரும்புகிறான். இது வரையில் அமங்கலிக் கோலத்துடன் இருந்த அவன் அன்னை அன்று சுமங்கலிக் கோலத்தில் இருக்கக் கண்டு வியப்படைகிறான். பொங்கி வரும் பெரும் துயரத்துக்கு! இடையில் அன்னை பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்த ஒரு கோர நிகழ்ச்சியைக் கூறி, அதன் காரணமாக அநியாயமாய் ஆயுள் தண்டனையடைந்து திருச்சி சிறையில வாடும் அவன் தந்தையைப் பற்றிச் சொல்லுகிறாள். உண்மைக் குற்றவாளியைக் கண்டுபிடிக்கும் பொருட்டுச் சங்கர் வீறு கொண்டு எழுகிறான்.

ஜெமினி கணேசன் சங்கராக நடிக்கிறார். நிறையக் கண்ணீர் விட்டு விம்மி யழ அவருக்குச் சந்தர்ப்பம் கிட்டியிருக்கிறது. அவரும் சந்தர்ப்பத்தை நழுவ விடவில்லை. கதறித் தீர்த்து விடுகிறார். தந்தையின் கடிதத்தைப் படித்ததும் தாயாரிடம் அவர் பேசிய உறுதி வார்த்தைகள் மெய்சிலிர்க்க உணர்ச்சி ஊட்டுவனவா யிருக்கின்றன.

சங்கரின் ஆராய்ச்சிக்குப் பத்திரிகை உதவி ஆசிரியை லீலா மிகவும் உதவியா யிருக்கிறாள். அந்தப் பாத்திரத்தை ஜமுனா ஏற்று நன்றாய் நடித்திருக்கிறார்.

சங்கரின் நண்பனாகவரும் டி. ஆர். ராமச்சந்திரன் ஹாஸ்யமாக நடித்துச் சக்கைப் போடு போட்டிருக்கிறார். அவருக்கு மாமனாராக வரும் டி. எஸ். துரைராஜ் அவருக்கு உதவியாகச் சிரிப்பு வெடிகளை உதிர்க்கிறார். திரைக் கதையுடன் சம்பந்தம் இல்லாமல் போய் விடுவதனால் மேற்படி காட்சிகள் ரசிக்க முடியாமல் இருக்கின்றன.





ஆயுள் கைதியாக நடிக்க, பல விதத்திலும் ஏற்றவர் நாகையா. சிறைச் சாலைக்குள் அவர் மௌனமாக உட்கார்ந்திருந்தாலும் அவரது சோகமயமான தோற்றம் நம்மை என்னவோ செய்து விடுகிறது. எம். ஜி. சக்கரபாணி, எஸ்.வி.சஹஸ்ரநாமம் இருவரும் இந்தப் படத்தின் வில்லன்கள். இருவரும் நன்றாய் நடித்திருக்கிறார்கள். கடைசியில் எஸ். வி. சஹஸ்ரநாமம்தான் உண்மைக் குற்றவாளி என்று நிரூபிக்கப்படும் போது அதிர்ச்சியாகத்தான் இருக்கிறது.

"அழகான மாறன் யாரடி?" என்ற பாட்டுக்கு ராகினியின் அபிநயம் மிகவும் நன்றாயிருக்கிறது. அவர் பாத்திரமும் அத்துடன்முடிந்துவிடுகிறது.

வீணாவாக வரும் எம். என். ராஜம் ஒரு வீணான பாத்திரம் அல்ல.

ஆனால் பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்பு நீதிமன்றத்தில் பொய்ச் சாட்சி கூறிய வீணா கடைசி வரையில் வயது வித்தியாசம் தெரியாமல் இருப்பது அதிசயம்தான்! வீணாபொய்ச்சாட்சி சொன்ன காட்சியில் அவளைப் பதினைந்து வயதுப் பெண்மாதிரி காட்டியிருந்தால் பொருத்தமாக இருந்திருக்கும்.

நீதிமன்றத்தில் விசாரணை நடக்கும் போது சத்தம் அதிகமா யிருக்கிறது.

மக்கள் அபிப்பிராயத்தைத் தனக்குச் சாதகமாகத் திரட்டி, "நல்ல தீர்ப்பு வேண்டும்" என்ற மக்கள் குரலை எழுப்பி, சங்கர் தன் தந்தையின் வழக்கை மீண்டும் விசாரணைக்குக் கொண்டுவர முயலுவது நாடகப் பாணியில் இருக்கிறது. அந்தக் கட்டத்தில் நிஜவாழ்க்கையைச் சிந்தித்துப் பார்த்ததாகவே தெரியவில்லை.

விசேஷமாகக் கூறும்படி பாட்டுக்கள் எதுவும் அமையவில்லை. கதைவசனம்முரசொலி மாறன் எழுதியிருக்கிறார்: கடைசியில் ஒரு வார்த்தை: "நல்ல தீர்ப்பு"க்கு மக்கள் தீர்ப்பு முற்றிலும் சாதகமாயிருக்கும் என்று நாம் எதிர்பார்ப்பதற்கில்லை.

# கண்கள் உறங்காவோ?

### அத்தியாயம் 2

## காசிப்பூர் சமஸ்தானம்

ஏறத்தாழ முப்பது வருஷங்களுக்கு முன் நடந்தது அது. அப்பொழுது சச்சிதானந்தம் பிள்ளை சென்னையில் பிரசித்தி பெற்ற வக்கீலாகத் தொழிலாற்றி வந்தார். இளமைப் பிராயம்; கம்பீரமான தோற்றம். கவர்ச்சி மிக்க பேச்சு. சட்டத்தில் ஆழ்ந்த புலமை. இவையெல்லாம் சேர்ந்து அவரை அத்தொழிலில் படிப்படியாக உயர்த்திச் சென்றன. கிரிமினல் வக்கீல் சச்சிதானந்தம் நடத்தும் வழக்கு என்றால் கோர்ட்டில் எள் போட்டால் எண்ணெயாகி விடும்படியான கூட்டம் கூடி விடும். அவருடைய 'பாயிண்ட்ஸ்', 'ட்விஸ்ட்', சாதுரியமான 'கிராஸ் எக்ஸாமினேஷன்', துரும்பைத் தூணாக்கிக் கொண்டு போகும் திறமை ஆகியவற்றைக் கண்டு, கேட்டு அநுபவம் பெற வக்கீல்கள் திரளாக வருவார்கள். பத்திரிகைகளில் துப்பறியும் நாவல்களைவிடச் சுவையாக வெளியிடப்பட்டிருக்கும் அவருடைய விவாதச் செய்திகளைப் படித்து அதை நேரில் கேட்க வேண்டுமென்று பொது மக்கள் கூட்டமாகக் கூடுவார்கள். நீதிபதிகளுக்குக்கூட அவர் நடத்தும் வழக்கு என்றால் ஒரு தனிச் சுவை. தமது சாமர்த்தியத்தால் அவர் நெல்லைப் புல்லாகவும், புல்லை நெல்லாகவும் திரித்து, தமது கட்சியிலே நியாயம் இருப்பதாகத் தோற்றும்படி செய்து விடுவது வழக்கமாதலால், தீர்ப்பு விஷயம் நீதிபதிகளுக்கு மிகக் கடினமாகவே இருக்கும். இருந்தாலும் புதுப் புது வழியில் செல்லும் அவருடைய வாதத் திறமை அவர்களுக்கு அந்த வழக்குகளில் பிரத்தியேகச் சுவையும், பிரத்தியேகக் கவனமும் ஏற்படும்படி செய்யும்.

இவ்வாறு தனிப் புகழை நிலைநாட்டிக் கொண்டிருந்ததால், சச்சிதானந்தத்திடம் வரும் வழக்குகளும் பெரிய வழக்குகளாகத்தான் இருக்கும். அவற்றுக்கு அவர் வாங்கும் 'பீஸ்' தொகையும் பெரிதாகவே இருக்கும். ஆனால் ஒன்று. அவர் நடத்தும் வழக்கு என்றால் வெற்றி நிச்சயம், நியாயம் யார் பங்கில் இருந்தாலும் சரி. ஆகையால் பணம் படைத்தவர்கள் தங்கள் வழக்குகளுக்கு அவரை அமர்த்திக் கொள்ளப் போட்டி போட்டுக் கொண்டு முன் வருவார்கள். இதன் காரணமாகச் செல்வ நிலையில் பெருத்த அபிவிருத்தியும் பெரிய இடத்துத் தொடர்புகளும் சச்சிதானந்தத்துக்கு ஏற்பட்டு அவருக்குச் சமூகத்தில்கூட ஒரு தனி அந்தஸ்தை அளித்திருந்தன. மொத்தத்தில் வெளியில் உள்ளோருக்கு அவர் குறைவற்ற மனிதராகவே தோற்றம் அளித்தார்.

ஆனால் சச்சிதானந்தம் தம்மை அப்படிக் கருதியிருக்கவில்லை. அவருக்கு இந்த வாழ்வும், இந்தப் புகழும், இந்தப் பெருமையும் திருப்தி அளிக்கவில்லை. அவர் இதை முட்புதர் வாழ்க்கையாகவே கருதினார். முட்புதரில் சிக்கிக் கொண்டவன் நாற்புறமும் குத்தும் முட்களின் வேதனையைச் சகித்துக் கொண்டே, அதிலிருந்து வெளியேறும் வழியில் கவனமாக இருப்பது போலத்தான் அவர் இருந்து வந்தார். அதற்குக் காரணம் இதுதான். அவர் தெய்வ பக்தியும், பாவ - புண்ணியத்துக்குப் பயப்படும் பண்பும் நிறைந்த சைவ வேளாளர் குலத்தில் உதித்தவர். அந்த மரபு அவருடைய ரத்தத்தோடு ஊறிப் போயிருந்தது. ஆனால் அவர் மேற்கொண்டு விட்ட தொழிலோ பாவ - புண்ணியம் பார்த்தால் பரதேசி ஆகிவிட வேண்டிய தொழில். எப்படியோ விதி அவரை இதில் மாட்டி வைத்து விட்டது. உடலைக் கிழித்துக் கொண்டு அவரால் அதிலிருந்து வெளியேற முடியவில்லை. பதமாக அந்த முட்களை விலக்கி வெளியேறுவதோடு, வெளியேறிய பின் வாழும் வாழ்க்கை இந்தப் பாவ வாழ்க்கைக்குப் பிராயச்சித்தம் செய்யும் வகையில் அமைய வேண்டும் என்று அவர் விரும்பினார்.

பெயரும், புகழும், பொருளும் தந்த இந்த வாழ்க்கை அவருக்குப் பிடிக்காமல் போனதற்கு மற்றொரு காரணமும் இருந்தது. அவருக்குக் கண்ணுக்கினிய மனைவி இருந்தாள். கருத்துக்கு இசைந்த நாயகியாகவே அவள் விளங்கினாள். அவ்வாறு அழகும் குணமும் ஒருங்கே பொருந்திய ஒரு நாயகி எல்லோருக்கும் கிட்டி விடுவாளென்று சொல்ல முடியாது. சச்சிதானந்தங்கூட அடிக்கடி பெருமை மலர, "நீ சாதாரணப் பெண்ணில்லை கண்ணு! பெண்களுக்கே ராணி நீ. உன் குணம் அறிந்துதான் உனக்குத் தையல்நாயகி என்று பேர் வைச்சிருக்காங்க" என்பார். ஆனால் அந்த மனம் நிறைந்த மனைவியிடமும் காண்பட ஒரு குறை ஏற்பட்டது. கணவனின் கரம் பிடித்து வருஷங்கள் பத்தாகியும் தையல்நாயகி வயிறு திறக்கவில்லை. இந்தக் குறை அவள் மனத்தையும் அரித்தது; அவர் மனத்தையும் அரித்தது. ஆனால் சச்சிதானந்தம் இந்தக் குறைக்குத் தாம் செய்து வரும் தொழில்தான் காரணமென்று

மாயாவி



தீவிரமாக கம்பீனார். இதுவேறு அவரை வக்கீல் தொழிலில் சுவை யற்றுப் போகச் செய்தது.

இந்தச் சமயத்தில்தான் அவரிடம் வட நாட்டில் காசிப்பூர் என்ற சமஸ்தான வழக்கு ஒன்று வந்தது. காசிப்பூர் மகாராஜா, மோஹன்சிங் பகதூர் ராணா அந்தக் காலத்து சமஸ்தான மன்னர்களிலேயே தவறிப் பிறந்தவர் என்று சொல்ல வேண்டும். அவர் என்றும் தம்மை ஒரு மன்னராகக் கருதியதே இல்லை. மக்களின் ஊழியன் என்றே கருதினார். அவர்களின் க்ஷேமலந்தான் அவருடைய லட்சியமாக இருந்தது. காசிப்பூர் சிறிய சமஸ்தானந்தான். ஆயினும் மற்றெந்த சமஸ்தானத்து மக்களையும்விட அங்கு வாழ்ந்த மக்கள் சீரும் சிறப்பும் பெற்று விளங்கினர். நாடு செழித்திருந்ததால் மன்னரின் பொக்கிஷ சாலையும் செழித்து விளங்கியது. ஆனால் மன்னர் 'பொக்கிஷ சாலைப் பொருள் உறங்கிக் கொண்டிருக்கக் கூடாது' என்ற கருத்துடையவர். ஆகையால் அவர் தமது சமஸ்தானப் பொருளைப் பிற சமஸ்தானங்களிலும் உலவ விட்டார்; அவற்றைக் குட்டி போட்டு வளரச் செய்தார்; அக்குட்டிகளைத் தம் நாட்டு மக்களுக்கு மேலும் மேலும் வசதிகள் செய்து கொடுப்பதில் செலவிட்டார். அதாவது

மன்னர் பிற மாகாணங்களிலும் பல தொழிற்சாலைகளில் முதலீடு செய்து, அதில் வரும் வருவாயைத் தமது சமஸ்தான மக்களின் க்ஷேம நலத்துக்காக ஒதுக்கி வைத்தார். இக்கொள்கையின்படி அவர் சென்னையில்கூடச் சிலதொழிற்சாலைகளில் முக்கிய பங்குதாரராக விளங்கி வந்தார். அம்மாதிரி அவர் பங்குதாரராக விளங்கிய பெரிய தொழிற்சாலையின் வழக்கு ஒன்றுதான் முதன் முதலாக ராஜா மோகன்சிங் பஹதூரையும், வக்கீல் சச்சிதானந்தம் பிள்ளையையும் பரஸ்பரம் அறிமுகமாக்கி வைத்தது. அது மிகச் சிக்கலான வழக்கு. உண்மையில் நியாயம் மோஹன்சிங் பஹதூரின் கட்சியிலேயே இருந்த போதிலும், சூழ்நிலைகள் அவருக்கு மிகவும் பாதகமாக அமைந்திருந்தன. ஆனால் சச்சிதானந்தம் தமது வழக்கமான மதிநுட்பத்தால் அவ்வழக்கில் மன்னருக்கு மிகச் சுலபமாக வெற்றி தேடித் தந்தார். அவருடைய திறமை மன்னரை மிகவும் கவர்ந்தது. இம்மாதிரித் திறமைசாலி ஒருவர் தமக்குத் திவானாக இருந்தால், சமஸ்தானத்தை இன்னும் வளப்படுத்தலாம் என்று கண்ட அவர் சச்சிதானந்தத்திடம் தமது கோரிக்கையை வெளியிட்டார்.

மன்னரின் மனப் போக்கு, குடிமக்களிடம் அவர் கொண்டிருந்த பேரன்பு, அவருடைய நன்னடத்தைகள் ஆகியவற்றைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்த சச்சிதானந்தம், இதுதான் தாம் வக்கீல் வாழ்வைத் துறந்து மக்கள் பணியில் ஈடுபடச் சிறந்த வாய்ப்பென்று தடை சொல்லாமல் ஒப்புக் கொண்டார். வக்கீல் சச்சிதானந்தம் இப்போது காசிப்பூர் திவான் சச்சிதானந்தம் ஆகிவிட்டார்.

மந்திரிப் பதவி வக்கீல் பதவியைவிட உயர்ந்ததுதான். என்றாலும் அதைப் போல் இதில் கொள்ளை கொள்ளையாகப் பணம் வரவில்லை. ஆனால் சச்சிதானந்தத்துக்கு இதில் ஒரு நிறைவு இருந்தது. பொய் புனை சுருட்டின்றி நேர்மையான வாழ்க்கை வாழ்கிறோம் என்ற நிம்மதி இருந்தது. மன்னரும் அவரைத் தமது சகோதரர் போல் நடத்தினார். மன்னரின் குடும்பமும் சச்சிதானந்தத்தின் குடும்பமும் ஒரே குடும்பமாகப் பழகின. மகாராணி ஊர்மிளாதேவி சச்சிதானந்தத்தை 'ஆனந்த் அண்ணா' என்றும், அவர் மனைவியை 'நாயகி மதனி' என்றுந்தான் அழைப்பாள். அவ்விரு குடும்பங்களுக்கும் இடையே இத்தனை ஒற்றுமை ஏற்பட மற்றொரு காரணமும் இருந்தது. சச்சிதானந்தத்தைப் போலவே மோஹன்ஸிங் பஹதூரும் மக்கட் பேறற்றவர்; அவரைப் போலவே மழலைமொழியும் மதலைக்காக ஏங்கிக் கொண்டிருந்தவர்.

கடைசியில் இறைவனின் உறங்கா விழிகள் சச்சிதானந்தத்தினிடம் தங்கள் அருட் பார்வையைத் திருப்பின. காசிப்பூர் திவான் பதவியேற்றுச் சில ஆண்டுகளான பின் தையல்நாயகி கருத்தரித்தாள். உரிய காலத்தில் ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்தாள்.

பெற்றவள் பூரித்தாள்; சச்சிதானந்தம் சந்தோஷ சாகரத்தில் மூழ்கினர். அவ்விருவரையும் விட அதிகமாக மன்னர் மகிழ்ந்தார். மகாராணி ஊர்மிளாதேவி உவகை பூத்தாள். ஆனால் விதி அந்தக் குழந்தை மூலம் ஒரு பெரிய விளையாட்டை ஆரம்பித்திருந்தது என்பதை அவர்கள் எவரும் அப்பொழுது அறிந்திருக்கவில்லை.

பிரசவ அறையை விட்டு வெளிவந்த சில நாட்களுக்கெல்லாம் தையல்நாயகிக்குச் சிறிய ஜுரம் ஒன்று வந்தது. அந்தச் சிறிய ஜுரம் யாரும் எதிர்பாரா வண்ணம் பெரிய ஜுரமாக மாறியது. பின்னர் நிரந்தரமாக அவள் உடல் நிலையைப் பாதித்து நித்திய நோயாளியாக்கிப் படுக்கையிலேயே சாய்த்து விட்டது.

நல்லவேளை, அந்தப் பச்சைக் குழந்தையைப் பற்றிய கவலை தையல்நாயகிக்கு இருக்கவில்லை. மகாராணி ஊர்மிளாதேவி அதைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பு முழுவதையும் எடுத்துக் கொண்டு விட்டாள். குழந்தைக்கு ஏங்கிய அவளுடைய தாயுள்ளத்துக்கு நிறைவு கிடைத்தது. அவள்தான் அந்தக் குழந்தைக்குப் பெயர் சூட்டினாள்; உணவூட்டினாள்; பாராட்டினாள்; சீராட்டினாள். பாக்கியவதி அவள்!

குழந்தையின் அழுகுரலிலே மகாராணி வீணையின் இனிய ஒலியை நுகர்ந்தாள். ஆகையால் அவள் அதற்கு வீணா என்றே பெயர் சூட்டினாள். அதை அன்பால்குளிப்பாட்டி, இன்பச் சூழ்நிலையில் கண்ணென வளர்த்த அவளுடைய கவனிப்பினால்தானோ என்னவோ, வீணா என்ற பெயரின் இனிமை அந்தக் குழந்தையின் உருவத்திலும் பிரதிபலித்



தது. குழந்தையைப் பார்த்துப் பார்த்துக் குதூகலித்தாள் ராணி; அணைத்து அணைத்து ஆனந்தித்தாள். வீணாவே ராணியின் உயிர், உடல், ஆவி எல்லாம் ஆனாள். ஆனால் அவளைப் பெற்றவள்?

அவள் வெய்யிலில் உருகி ஓடும் பனிக் கட்டியைப் போல் நோயின் வெம்மையில் உருகித் தேய்ந்து வந்தாள். எவ்வளவோ வைத்தியம் பார்க்கப்பட்டது; எத்தனையோ பணம் வாரி இறைக்கப்பட்டது. ஆனால் பணமும் மருந்தும் பயனளிக்கவில்லை. நாட்கள் மாதங்களாகி, மாதங்கள் வருஷங்களாகிக் காலம் கரைந்து வந்தது. ஐந்து வருஷங்கள் தேய்ந்து விட்டன. ஆனால் தையல்நாயகியின் நோய் கரையவில்லை. அது பெருகித்தான் வந்தது! "போதும் இந்த வாழ்வு; நான் துன்பப்படுவதோடு பிறரையும் துன்பத்தில் ஆழ்த்தும் இந்த நரக வாழ்வை முடித்துவிடு இறைவா!' என்று அவள் மனம் உருகிக் கதறும் அளவுக்கு நோய்க் கொடுமை முற்றிவிட்டது. ஆனால்...ஆனால்...

அவள் உள்ளத்தின் அடித்தளத்திலே ஓர் ஆவல். 'பெற்றேன் ஒரு செல்வத்தை. பாலூட்டக் கொடுத்து வைக்கவில்லை; சீராட்டக் கொடுத்து வைக்கவில்லை. அவள் நல்வாழ்வு வாழ்வதைக் காணவும் உயிருடன் இருக்கப்போவதில்லை. ஆயினும் ஒன்றை நான் காணலாம்; காண முடியும். என் செல்வத்தின் கழுத்தில் பொன்தாலி ஏறிப் பார்க்கலாம். அதற்கு நான் கொடுத்து வைத்தவள் ஆகலாம் அல்லவா?'

இறுதிக் காலத்தை எதிர்பார்த்த அவளால் இந்த ஆவலை உள்ளடக்கி வைத்துக் கொள்ள முடியவில்லை. அதை வெளியிடுவதைத் தாமதப்படுத்தவும் முடியவில்லை. ஒருநாள் கணவர், மன்னர், ராணி ஆகியோர் முன்னிலையில் அதைக் கூறிவிட்டாள். புனிதமான ஓர் ஆத்மா, உயிரின் எல்லையில் வந்து நின்றுகொண்டு விடுக்கும் ஒரு வேண்டுகோளை யாரால்தான் மறுக்க முடியும்? வீணாவுக்கு உடனடியாகக் கலியாணத்தை நடத்தி விடுவது என்று அம் மூவரும் அப்பொழுதே தீர்மானித்து விட்டனர்.

ஐந்து வயதுப் பாலிகையான வீணாவுக்கு வரன் தேடி அவர்கள் எங்கும் அலைய வேண்டியிருக்கவில்லை. முறை மாப்பிள்ளையே அங்கே இருந்தான்.

சச்சிதானந்தத்தின் மூத்த சகோதரி தைலம்மாள் நோய்வாய்ப்பட்டிருந்த மதனிக்குச் சிசுருஷை செய்ய வந்தவள் சென்ற நான்கு வருஷங்களாகத் தன் மகன் மயில்வண்ணனுடன் காசிப்பூரிலே தங்கும்படி ஆகிவிட்டது. தைலம்மாளின் கணவர் சடையப்பர் சென்னையில் ஒரு கட்டடக் கம்பெனியின் மானேஜராக இருந்தார். தைலம்மாளின் காசிப்பூர் வாசம் நீடித்துக் கொண்டே போவதைக் கண்டபோது அவர் அங்கும் அவள் இங்குமாக வாழவிடப் பிரியப்படவில்லை சச்சிதானந்தம். ஆகையால் அவர் மன்னரிடம் விவரத்தைக் கூறிச் சடையப்பருக்கு காசிப்பூர் சமஸ்தானத்திலேயே உயர் பதவி ஒன்று கொடுக்கச் செய்து சென்னை நகரிலிருந்து இங்கே வரவழைத்து வைத்துக் கொண்டார்.

மாப்பிள்ளை அருகில் இருந்தபோது திருமணம் தாமதப்படுமா? ஒரே வாரத்தில் அந்தப் பொம்மைக் கலியாணம், ஒரு மன்னர் மகளின் கலியாண ஆடம்பரத்துடன் நிறைவேறியது. கலியாணத்தின் முழுச் செலவுகளையும் மன்னர் மோஹன் ஸிங் பஹதூரே ஏற்றுக் கொண்டதோடு, மாப்பிள்ளைக்குத் தனிப்பட்ட திருமண அன்பளிப்பு ஒன்றும் வாக்குறுதி செய்தார். அதாவது அவனை உடனே மேல் நாட்டுக்கு அனுப்பிக் கல்விகற்கச் செய்து, பாரிஸ்டராகத் திரும்பும் வரையில் ஆகும் செலவுகளைத் தாமே ஏற்றுக் கொள்வதாக வாக்களித்தார்.

மயில்வண்ணனுக்கு அப்பொழுது பன்னிரண்டு வயதுதான் ஆகியிருந்தது. ஆயினும் மகனின் பிற்காலத்தை மனத்தில் கொண்டு அவனை அத்தனை சிறு பிராயத்திலேயே கண்காணா நாட்டுக்கு அனுப்ப இணங்கினர் சடையப்பரும், தைலம்மாளும். மன்னர் அதற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்வதென்றும், சடையப்பர் மகனுடன் சென்று அவனுக்கு அந் நாட்டுச் சூழ்நிலை பிடித்துவரும் வரையில் அங்கு தங்கியிருந்து பிறகு திரும்புவதென்றும் தீர்மானிக்கப்பட்டது. ஆனால் தைலம்மாள் அப்பொழுது கருவுற்றிருந்ததால், அவளுடைய பிரசவத்துக்குப் பின்னர் அவர்கள் புறப்பட முடிவு செய்தனர்.

உரிய காலத்தில் தைலம்மாள் ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அதன் பிறகு தந்தையும் மகனும் இங்கிலாந்துக்குக் கிளம்பினர். அக் காலத்தில் விமான ஸர்வீஸ் அவ்வளவு பிரபலமாகவில்லை. விமானத்தில் போவதற்கே மக்கள் பயந்து வந்தனர். ஆகையால் எஸ். எஸ். ஹோப் என்ற கப்பலில் ஒரு நாள் பம்பாய்த் துறைமுகத்திலிருந்து அவர்கள் பிரயாணப் பட்டனர்.

யாருடைய கெட்ட காலமோ தெரியாது. அந்தப் பிரம்மாண்டமான கப்பல் நடுக் கடலில் ஒரு புயலில் சிக்கிக் கவிழ்ந்து விட்டது. அதில் பிரயாணம் செய்த ஆயிரம் பிரயாணிகளில் ஒருவர் கூட உயிர் தப்பவில்லை. கடலின் பசி அகோரமானதுதான்!

யாருடைய பிழையென்று இதைச் சொல்வது? யாரை யார் நோவது? யாரை யார் தேற்றுவது? காசிப்பூர் சமஸ்தானமே துக்கத்தில் ஆழ்ந்துவிட்டது. அந்தத் துக்கத்தோடு துக்கம் சேர்த்து வைத்தாள் தையல்நாயகி. அவளுடைய மரண நாளை இந்த இடிபோன்ற செய்தி இன்னும் நெருக்கி விட்டது. இச் செய்தி அறிந்த அன்று நினைவிழந்தவள்

தான் அவன்; மூன்று நாட்களுக்குப் பின்னர் கடைசி மூச்சையும் விட்டு விட்டுக் கடலுக்குப் பலியாகிவிட்ட மருமகனைக் காணப் புறப்பட்டு விட்டான்.

தைலம்மாள் பட்டணத்தில் வாழ்ந்தவள்தானென்றாலும் பரந்த மனப்பான்மை அற்றவள். துயரம் ஏற்படும்போது அதன் பிழையை வேறு எவர்மீதாவது சுமத்தி மனசைத் தேற்றிக்கொள்ள முயல்வது மனித சுபாவந்தான்; ஆனால் பரந்த மனப்பான்மை யுடையவர்கள் அதைப் பறைசாற்றிக் கொண்டிருக்கமாட்டார்கள். குறுகிய நோக்கமும் சுயநலமும் மிகுந்தவர்களிடமே இந்தச் சுபாவம் சட்டென்று வெளிப்படும். தைலம்மாள் அப்படிப்பட்டவள்தான். ஆகையால் மகனையும் கணவனையும் இழக்கக் காரணமாக இருந்தவர் மகாராஜாதான் என்று தூற்றி விட்டு அவள் கைக் குழந்தையுடன் சொந்த ஊராகிய கேசவபுரத்துக்கு மூட்டை கட்டிவிட்டாள்.

சச்சிதானந்தத்துக்கும் வாழ்வு கசந்துவிட்டது. முடிந்திருந்தால் அவர் துறவியாகித் தேசாந்தரம் போயிருப்பார். ஆனால் அவருக்குத்தான் ஒரு பாரம் இருந்ததே? அறியாச் சிறுமி வீணை. இத்தனை இளம் வயதில் தன்னைச் சூழ்ந்துவிட்ட வாழ்க்கை இருளை அவள் இன்று அறிய மாட்டாள். ஆனால் என்றுமே அது தெரியாமலா போய் விடும்? தெரியும்போது அந்தக் கன்னி மனம் எப்படிக் குமுறுமோ? என்னென்ன ஏங்குமோ? யார் மடியில் அவள் முகத்தைப் புதைத்துத் தன் துயரத்தைத் தீர்த்துக் கொள்ளுவாள்? யார் அவளுக்கு ஆறுதல் சொல்லித் தேற்றுவார்?



மன்னரும் அவர் மனைவியும் இன்று அவளுக்குத் தந்தையும் தாயுமாக விளங்கலாம். என்றென்றுமே அவளை மகளாக வளர்த்து வர விரும்பலாம். ஆயினும் வீணையின் மனசு முதிரும்போது அவர்களது பாசம் அவளுக்கு இயற்கைப் பாசமாகத் தோன்றுதே. ரத்த பாசம் தனிப்பட்ட பண்பு உடையது அல்லவா? ஆகையால் மகளின் வருங்காலத்தை உத்தேசித்து அவர் வாழத்தான் வேண்டும்; வாழ்ந்தார். ஆனால் இந்த வாழ்க்கை அவருக்குப் பிடிக்கவில்லை. 'போதும் பதவி; போதும் வருவாய்; போய் விடுவோம் ஊருக்கு' என்று துணிந்தார். ஆனால்—

மகாராஜா மோஹன்ஸிங் பஹதூர் அவரைப் போகவிடவில்லை. "இதுதான் உங்கள் ஊர்; இதுதான் உங்கள் குடும்பம். இதைவிட்டு நீங்கள் எங்கும் போகமுடியாது" என்று அன்பு ததும்ப அவர் வழிமறித்த போது. சச்சிதானந்தத்தால் மன்னரின் தடுத்த கைகளைத் தள்ளிவிட்டுப் போக முடியவில்லை. அவருடைய கட்டளையைக் கடமையாகக் கொண்டு மேலும் சிலகாலம் காசிப்பூரிலே வாழ்ந்தார்; திவானாகவே பதவியாற்றினார்.

நல்லகாலமாகச் சில வருஷங்களுக்குப் பிறகு அவருக்கு அந்தக் கடமையிலிருந்து இயற்கையாகவே விடுதலை கிடைத்தது. இந்தியா சுதந்திரம் அடைந்தது. சுதேச சமஸ்தானங்கள் இந்திய யூனியனுடன் இணைக்கப்பட்டன. 'மன்னருக்கும் வேலையில்லை; அவருக்கு மந்திரியும் தேவையில்லை' என்றாகிவிட்ட அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு இத் தடவை கேசவபுரத்துக்குக் கிளம்பியே விட்டார் சச்சிதானந்தம்.

ஆனால் இங்கும் அவர் திட்டத்தில் ஒரு மாறுதல். சச்சிதானந்தத்தைப் போகவிட்ட மன்னரும் ராணியும் வீணையை விட்டுப் பிரிய மறுத்தனர். "அவள் விதவை. நீங்களும் நாங்களும் நம்மிடமுள்ள பொருளும் பூஷணமும் நிலையற்றவை. அவள் என்றென்றும் நம்மைச்சார்ந்தே வாழ்ந்து

விட முடியாது. அந்த இளங்கொடி இனி எந்தக் கொம்பிலும் படர முடியாது; எதுவும் அதற்கு ஆதாரமாகாது. அது தானே வளர்ந்து படர வேண்டியது. அவளை வளர்த்த எங்களுக்கு அந்தக் கடமையை நிறைவேற்றும் வாய்ப்பையும் அளியுங்கள். அவளை டாக்டருக்குப் படிக்க வைத்து ஊருக்கு அனுப்பி விடுகிறோம். அதுவரையில் எங்களிடம் விட்டு வையுங்கள்'' என்று மனம் உருக வேண்டிக் கொண்டனர். ஆகையால் வீணாவைக் காசிப்பூரிலேயே விட்டு, தாம் மட்டும் கேசவபுரத்துக்கு வந்து சேர்ந்தார் சச்சிதானந்தம்.

மகளைப் பிரிந்துவந்த துயரத்தை ஆற்ற இங்கே மருமகள் மாலா இருந்ததால் அவரால் இந்த எட்டு வருஷங்களைச் சற்றே நிம்மதியுடன் தள்ள முடிந்தது. ஆயினும் அதைப் பரிபூர்ண நிம்மதியென்று சொல்ல முடியாது. கன்றைப் பிரிந்து மந்தைக்கு வந்த தாய்ப் பசு அங்கே வயிறார மேய்ந்தாலும், அதன் மனம் முழுவதும் கொட்டிலிலே இருப்பது போன்ற நிலைதான் அது. ஆகையால் தான் நேற்று அவள் வருவதாகத் தந்தி வந்தது முதல் அவருக்கு அத்தனை பரபரப்பு. ஆகையால்தான் மகள் வந்த ரயில் விபத்துக்குள்ளான செய்தி அறிந்த போது அத்தனை மன இடிவு.

ஆனால் ''ஆ!'' என்ற அவனுடைய அலறல் அங்கே வீசிய ஓலச் சூறாவளியில் யாருக்குக் கேட்டிருக்கப் போகிறது? ஆயிரம் அலறலில் ஒன்றான அதை யார் கவனித்திருக்கப் போகிறார்கள்? ஏன்? எங்கும் நிறைந்து, எப்பொருளிலும் கலந்து, மெய்ப்பொருளாக விளங்கும் அந்த இறைவன்தான் அத்தனை ஓலங்களின் இடையே அதை மட்டும் குறிப்பாகக் கவனித்திருக்கப் போகிறாரா?

இமைக்கும் நேரம் வானமே இடிந்து தலைமீது விழுந்து விட்டது போன்றிருந்தது சச்சிதானந்தத்துக்கு. ஆனால் அந்த முதல் அதிர்ச்சியின் வேகம் தீர்ந்ததும் அவர் தன்னிலை பெற்றுவிட்டார். உள்ளத்திலே கவலையும் பீதியும் புதுப் புனலாகப் பொங்கிய போதிலும், மற்றவர்களைப் போல் அதை அணைபெயர்த்துக்கொண்டு பாயவிடவில்லை அவர். ஆமாம், விபத்து எங்கே நடந்தது, எப்படிப்பட்டது என்பதையெல்லாம் அறிந்து கொள்ளுவதற்கு முன்பே, சே! இது என்ன அர்த்தமற்ற பதற்றம்?

அருகே மாலா அழுது கொண்டிருந்தாள். ''ஏம்மா அழறே? நம்ம வீணாவுக்கு ஒண்ணும் ஆகியிருக்காது. வா, ஸ்டேஷன் மாஸ்டர்கிட்டே போய் விவரமாகக் கேட்கலாம்'' என்று அவள் கையைப் பிடித்துக் கொண்டு நடந்தார் அவர். ஸ்டேஷன் முன் கூடியிருந்த கூட்டம் பெருங்கூட்டமாக இருந்தது. அதனுள்ளே நுழைந்து எப்படியோ ஸ்டேஷன் மாஸ்டர் நின்று கொண்டிருந்த இடத்துக்கு வந்து விட்டார் சச்சிதானந்தம்.

ஸ்டேஷன் மாஸ்டர் முருகேச முதலியார் சச்சிதானந்தத்தை அந்தக் கும்பலிலும் குழப்பத்திலும் கவனிக்கவில்லை. கவனித்திருந்தால் அவரே ஓடி வந்திருப்பார். அவருக்குச் சச்சிதானந்தத்தைக் கடந்த எட்டு வருஷங்களாகப் பழக்கமுண்டு. பிரபல வக்கீலாகவும், ஒரு சமஸ்தானத்தின் திவானாகவும் விளங்கியிருந்தும் சிறிதுகூட ஆடம்பரமோ, அகந்தையோ இன்றி எல்லோருக்கும் நல்லவராக எளிய வாழ்வு வாழ்ந்து வந்த அவரிடம் முருகேசம் அளவிலா மதிப்பு வைத்திருந்தார். ''நிறை குடங்க அவர்; நிறை குடம்'' என்று அவரைப் பற்றிய பேச்சு எழும்போதெல்லாம் பரவசத்துடன் குறிப்பிடுவார்.

''முதலியார் ஸார்!''

இந்தக் கும்பலுக்குத் தம்மால் பதில் சொல்லி முடியாதென்று கண்டு ஸ்டேஷன் அறைக்குச் சென்று கொண்டிருந்த முருகேசம், குரல் கேட்டதும் சட்டென்று திரும்பினார்.

''வாங்க, வாங்க; நீங்க எங்கே, இங்கே, இப்போ......?''

அவருடைய அந்த நீண்ட கேள்விக்கு விடையைச் சச்சிதானந்தத்தின் முகம் அளித்தது; மாலாவின் கண்ணீர் அளித்தது.

''யாராவது வந்துக்கிட்டிருந்தாங்களா மெட்ரூஸ் பாஸஞ்சரிலே?''

''ஆமாங்க; மகள் வரதாகத் தந்தி வந்தது நேற்று.''

''அட ஆண்டவனே!''

ஸ்டேஷன் மாஸ்டரிடமிருந்தே இத்தகைய சொல் வெளிப்பட்டதும் சச்சிதானந்தம் துணுக்குற்றார். ''என்னங்க ஆச்சு வண்டிக்கு?'' என்று இப்பொழுது அவர் சிறிது அச்சத்துடனே கேட்டார்.

''தடம் புரண்டு போச்சு; கோவிலூர் சந்திப்பிலே யிருந்து ரெண்டு மைல் இந்தப் பக்கமாக. இன்ஜினும் முதல் மூணு பெட்டிகளும் வள்ளிசா நொறுங்கிப் போயுடுத்தாம்.''

சச்சிதானந்தத்துக்கு இச்செய்தி சிறிது ஆறுதலை அளித்தது! ஏனென்றால் வீணா முதல் வகுப்பில்தான் வந்திருப்பாள். பெரும்பாலும் முதல் வகுப்புப் பெட்டி ரயில் தொடரின் நடுவில்தான் இருக்கும். இருந்தாலும் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளுவதற்காக, ''ஏன் முதலியார் சார், பஸ்ட்கிளாகப் பெட்டிக்கு ஒண்ணும் ஆகலியே?'' என்று கேட்டார்.

''ஓங்க மகள் பஸ்ட்கிளாசிலேதான் வந்துக்கிட்டிருந்தாங்களா?''

''ஆமாம், அதிலேதான் வந்திருக்கணும். அந்தப் பெட்டியை அநேகமா நடுவிலேதானே கோக்கறது வழக்கம்.''

''நிச்சயமாகச் சொல்ல முடியாது, சார்; ஒரு நிமிஷம் உள்ளே வாங்க; டெலிபோன் பண்ணிக் கேட்டுச் சொல்றேன்.''

முருகேச முதலியாரைப் பின்பற்றிச் சச்சிதானந்தமும் மாலாவும் உள்ளே சென்றனர். முருகேசம் சுவரில் பொருத்தியிருந்த டெலிபோனின் ரிஸீ



*மனைவி: என்னை மனமாரக் காதலிக்கிறீர்களா?*

*கணவன்: ஆம்.*

*மனைவி: என்னை சதாசர்வகாலமும் மனத்தில் நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா?*

*கணவன்: ரோட்டில் குறுக்கே நடந்துபோகும் நேரத்தைத் தவிர மிச்ச நேரமெல்லாம் நினைத்துக் கொண்டிருக்கிறேன்!*

---

வரை எடுத்துக் காதில் வைத்துக் கொண்டு, மணி அடிக்கும் குமிழை மூன்று முறை அமுக்கி அடுத்த ஸ்டேஷனைக் கூப்பிட்டார்.

டிங்! டிங்! டிங்!

"ஹலோ, யாரு பேசறது! சிக்னலிங் இனார்க்கா? நான் எஸ். எம்; கே. எஸ். பி. எம். (ஸ்டேஷன் மாஸ்டர், கேசவபுரம்) ஆமாம். சேதமடைந்த 'போகீஸ்' எந்தெந்த கிளாஸ் சார்? அதுபற்றி ஏதாவது தகவல் தெரியுமா?......ஓ காட்! (அட கடவுளே!)"

அவர் பேசிய மீதிப் பேச்சு சச்சிதானந்தத்தின் காதில் விழவில்லை. "ஓ காட்!" என்ற முருகேசத்தின் இரண்டு வார்த்தைகளில் கலந்திருந்த அதிர்ச்சியே அவருக்குப் போதுமானதாக இருந்தது. அவர் நெஞ்சை ஏதோ ஒன்று 'குப்' பென்று அடைத்தது. அவருடைய அற்ப நம்பிக்கை செத்து விட்டது.

முருகேசம் ரிஸீவரைக் கொக்கியில் மாட்டி விட்டு,—"நான் ரொம்ப விசனிக்கிறேன் சார். சேதமடைந்த மூன்று பெட்டிகளிலே முதலிலே இருந்தது போஸ்டல் வானும். அடுத்தது பஸ்ட் கிளாஸ். அநேகமாக அதிலே ஒருத்தரும்......" அவர் மேலே பேச வராமல் நிறுத்திக் கொண்டார்.

சச்சிதானந்தம் பிள்ளை உள்ளுக்குள்ளே கதறினார்; மாலா வாய்விட்டு அலறினாள்.

முருகேசம் அவர்களைத் தேற்றும் பொருட்டு, "வருத்தப்படாதீங்க, சார். கடவுள் நல்லவருக்கு ஒரு தீங்கும் செய்ய மாட்டார். அவர் புண்ணியத்திலே ஓங்க மகன் பிழைச்சிருப்பான். தவிர, இந்தச் செய்தி பக்கத்து வேதம்பட்டி ஸ்டேஷனிலே யிருந்து கிடைச்ச செய்திதான். அதை அப்படியே எடுத்துக்க முடியாது. எதுக்கும் நீங்க உடனே கோவிலூருக்குக் கிளம்பிப் போங்க" என்றார்.

"எப்படிப் போவேன், முதலியார் சார்?" என்று பிரலாபித்தார் சச்சிதானந்தம்.

"இனிமேல் பகல் ஒரு மணிக்குத்தானே வடக்கே போகிற வண்டி. அதைக்கூட விடுறீங்களோ, இல்லையோ? ஒரு காருக்குக்கூட வழி கிடையாதே சார் நம்ம ஊரிலே! ஓடற ஓட்டத்துக்கு ஐம்பது மைல் இருக்குமே இங்கேயிருந்து கோவிலூருக்கு." அவர் தொண்டை அடைத்தது.

அழுது கொண்டிருந்த மாலா சட்டென்று ஏதோ நினைவுக்கு வந்தவள் போல், "மாமா! மாமா! நம்ம சுந்தர அத்தான் இன்னிக்குக் காலையிலே வரதாகச் சொன்னீங்களே புஷ்பவன மாமா. இதுக்குள்ளே வந்திருப்பாரு. வந்திருந்தாரின்னு அவர் கார்..." என்று இழுத்தாள்.

"ஆமாம் அம்மா; நினைப்பேயில்லையே எனக்கு? வா, வா, போகலாம்" என்று கிளம்பினார் சச்சிதானந்தம். ஸ்டேஷன் மாஸ்டரைக்கூட ஒரு கணம் மறந்து விட்டது, பதற்றம் கொண்ட அவருடைய மனம். இரண்டோரடிகள் நடந்த பிறகு தான் அது நினைவு வந்தது. உடனே திரும்பி நின்று, "போயிட்டு வரேங்க, முதலியார் சார். நம்ம புஷ்பவனம் பிள்ளை மகன் பட்டணத்திலேயிருந்து காரிலே வந்திருப்பான். அவன் காரை எடுத்துக் கிட்டுப் போறேன்" என்றார்.

"ஆமாம், போய்ப் பாருங்க. கவலைப் படாமல் போங்க. கடவுள் காப்பாத்தியிருப்பார் உங்க மகனை. இந்தாங்க, இந்த வழியாப் போயிடுங்க. வாசலிலே ஒரே கும்பலாயிருக்கு." முருகேசம் ஸ்டேஷன் அறையின் பின் கதவைத் திறந்து கொடுத்தார்.

ஸ்டேஷனிலிருந்த கூட்டமும் இதற்கிடையே கலைய ஆரம்பித்து விட்டது. தவறி விழுந்த மட்பாண்டம் சிதறுவது போல் அங்கே எழுந்த ஒலிஒலிகள் நாற்புறமும் சிதறிப் பிரிந்தன. ஆமாம், ஐம்பது மைல்களுக்கு அப்பால் எங்கோ விபத்து நடந்திருக்கிறது. அதற்கு இங்கே இருந்து ஓலமிட்டுக் கொண்டிருப்பதில் என்ன பயன் இருக்கிறது. நடையோ, வண்டியோ, எதிலாவது எப்படியாவது விபத்து நடந்த இடத்துக்குப் போய்ச் சேர்ந்தால்தானே, தங்களைச் சார்ந்தவர்கள் இருக்கிறார்களா, இல்லையா என்பதையேனும் தெரிந்து கொள்ளலாம்.

ஸ்டேஷனிலிருந்து வெளியேறிக் கொண்டிருந்த சிலரிடம் விபத்தின் முழு விவரத்தையும் அறிய முயன்று கொண்டிருந்தான் வண்டிக்காரன் மாடசாமி. சச்சிதானந்தத்தின் தலையைக் கண்டதும் அவன் ஓடோடி வந்தான். "நம்ம குழந்தைக்கு ஒண்ணும் ஆகலீங்களே?" என்று அவன் கருத்தோடு கேட்டான்.

"என்னமோ, கடவுளுக்குத்தான் வெளிச்சம்" என்று விரக்தியுடன் கூறினார் சச்சிதானந்தம். பிறகு, "வண்டியைக் கட்டு மாடசாமி. நேரே தெற்குத் தெருப் புஷ்பவனம் ஐயா வீட்டுக்கு ஓட்டு" என்றார் அவசரத்துடன். (தொடரும்)

அன்று நான் கலாசாலைக்குப் புறப் படும்போது அடுத்த வீட்டு வாசலில் அதிவேகமாய் ஒரு கார் வந்து குலுங்கி நின்றது. அதிலிருந்து ஓர் அழகி கையில் டம்பப் பை ஊசலாட ஒய்யாரமாய் இறங்கி உள்ளே சென்றாள். அதைப் பார்த்த நான் என்னை யறியாது கற்சிலை போல் நின்றேன்.



# புதுமைப் பெண்

**எம். எஸ். கமலா**

"ஹல்லோ! முரளி....என்ன யோசித் துக் கொண்டு நிற்கிறாய்? இன்று கல்லூரிக்கு பட்டம்தானா?" என்று தண்டபாணி வந்து முதுகில் தட்டினான். நான் சுயநிலைக்கு வந்து, "நேரம் ஆகி விட்டதா? இதோ...." என்று சொல்லிக் கொண்டே உள்ளே சென்றேன். புத்தகங் களை எடுத்துக்கொண்டு அறையைப்பூட்டி விட்டுப் புறப்பட்டேன். நான் தண்ட பாணியுடன் சென்றேனே ஒழிய என் மனப் பறவை அந்த அழகியைச் சரி யாய்ப் பார்க்க வில்லையே என்று ஆசை இறகுகளைப் பட பட வென்று அடித்துக் கொண்டிருந்தது. வகுப்புக்குள் சென்று அமர்ந்தேன். பாடத்தில் புத்தி செல்ல வில்லை. பைத்தியக்காரன் போல் அர்த்த மற்று மேற் கூரையையும், ஜன்னல் கத வையும், வெட்ட வெளியையும் வெறிக்க வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தேன். என் நண்பர்கள் என்னைப் பரிதாபமாய்ப் பார்க்கத் தொடங்கினர்.

மாலையில் என் அறைக்குச் செல்லும் போது தண்டபாணி என்னைப் பரிதாப மாய்ப் பார்த்து, "நான் கடைக்குப் போய்க் கொஞ்சம் சாமான்கள் வாங் கிக் கொண்டு வீட்டுக்குப் போக வேண் டும்; நீ தனியாய்ப் போவாயாடா? யாரையாவது வரச் சொல்லட்டுமா?" என்றான். அப்பொழுதுதான் என் பைத் தியக்கார நிலை என்னை வெட்கத்தில் ஆழ்த்தியது. சமாளித்துக் கொண்டு, "தண்டு! ஊரிலிருந்து கடிதம் வந்து ஒரு மாதமாகி விட்டது. அதனால் மனம் என்னவோ...." என்று இழுத்தேன்.

"அட, பைத்தியக்காரா! ஒரு நாள் போய்விட்டு வந்து விடுவதுதானே!" என்றான். நான் சிரித்துக் கொண்டே என் அறையை நோக்கிச் சென்றேன்.

★

என்னைப் பற்றி நானே சொல்ல வேண்டி வந்ததற்கு நான் வருந்தவில்லை; பெருமைப்படுகிறேன். நான் உலகப் பெரியார்களில் ஒருவனாகப் போவதில்லை. எவரும் என்னைப் பற்றிப் புத்தகமாய், பத்தி பத்தியாய் எழுதிப் பிரசுரிக்கப் போவதில்லை. தச்சக்காடு தர்மராஜா் தம்பதிகளுக்கு நான் ஒரே ஒரு மைந்தன். அம்மாவின் செல்லம் சற்று அதிகம். ஒவ்வொரு வகுப்பையும் இரண்டு அல்லது மூன்று வருடங்கள் முற்றுகையிடாமல் வெளியே வரமாட்டேன். அப்படி முற்றுகையிட்டு நான் இருபத்திரண்டாம் படியில் நின்று கலாசாலை வாசலுக்குள் கால் வைத்தேன். சென்னையில் எங்கள் தூர உறவினரது வீட்டின் மாடியில் தெருப்புறமுள்ள அறையை என் தந்தை எனக்கு ஏற்பாடு செய்து விட்டுப் போனார்.

நான் அங்கு வந்து ஆறு மாதங்களாகி விட்டன. அன்று காலை அடுத்த வீட்டில் இறங்கிய அந்த அழகியின்மேல் என் மனம் பாய்ந்ததை நினைத்து ஆச்சரியத்தில் ஆழ்ந்தேன். கலாசாலையை விட்டு வந்ததும் காப்பி சாப்பிடக் கூட வெளியில் செல்லாது அடுத்த வீட்டை நோக்கியிருக்கும் ஜன்னலருகில் நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தேன். இயற்கையின் மேல் இருள் படர்ந்து இரவு வந்ததே ஒழிய அந்த இளம் நங்கையை எத்தனையோ முயன்றும் பார்க்க முடியவில்லை.

"அவர்கள் வீட்டுக்கு யார் வந்து போனார்களோ ? நீ ஏன் இப்படிச் சிலை போல் அமர்ந்திருக்கிறாய் ?" என்று நல்லறிவு உள்ளூறக் கேட்டது. உதறிக் கொண்டெழுந்து விளக்கைப் போட்டு மணியைப் பார்த்தேன். மணி ஒன்பதரை. பரபரவென்று வெளியில் சென்று இரண்டு பிஸ்கட் வாங்கிச் சாப்பிட்டு ஒரு கப் பாலைக் குடித்து விட்டு வந்து படுத்தேன். நன்றாய்த் தூங்கிவிட்டேன்.

என் வேலைகளை முடித்துக் கொண்டு கலாசாலைக்குச் சென்றேன். முதலில் என்னை ஆவலாய்ப் பார்த்தவன் தண்டபாணிதான். அவன் என்னைக் கண்டதும், "டேய் ! கடிதாக வந்துவிட்டதா? இன்று உன் முகம் எப்பொழுதும் போல் இருக்கிறதே !" என்று தோளை வளைத்துக் கட்டிக் கொண்டான். நான் நகைத்தபடியே தலையாட்டினேன்.

அன்று பிற்பகல் 'காதல்' என்ற படத்துக்குச் சென்றுவிட்டு இரவு என் அறையில் வந்து படுத்தேன். எங்கிருந்தோ இனிமையான வீணைகானம் கேட்டது. பாரதியாரின் "கண்ணம்மா என் காதலி" என்ற பாட்டு. இடையிடையே அற்புதமான குரலொலியும் வீணையின் நாதத்துடன் ஒன்றி இசைந்து ஒலித்தது. எனக்குத் தூக்கம் வரவில்லை. எழுந்து வெளியில் வந்து நாற்புறமும் பார்த்தேன். அடுத்த வீட்டிலிருந்துதான் அந்த அமுத கானம் வந்து கொண்டிருந்தது தெரிந்தது. சிறிது நேரம் தெருவில் நின்றவன் உள்ளே சென்று படுத்தேன். பாட்டு எப்பொழுது நின்றதோ, தெரியாது. நான் பரவசமாய்த் தூங்கிப் போய் விட்டேன்.

மறுநாள் நான் கண்ணாடி முன் நின்று கிராப் வாரிக் கொண்டிருந்த போது அழகியின் நிழல் தெரிந்தது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன். அடுத்த வீட்டு மாடியில் அழகி நின்று கொண்டிருந்தாள். அவள் நான்கு நாட்களுக்கு முன் காரிலிருந்து இறங்கிய காரிகைதானென்றுணர்ந்தேன். என்மனத்திலோர் குறுகுறுப்பு. உள்ளத்தில் கிளுகிளுப்பு. 'மணந்தால் இவளை...' என்று நினைக்கும் போதே அவள் அவ்விடம் விட்டு அகன்றாள். எப்படியாவது அவள் காதலைப் பெற்று அவளை மணக்க வேண்டும் என்று உள்ளத்தில் அவசரத் தீர்மானம் தோன்றி என் ஆசை அதை ஆமோதித்ததுதான் தாமதம், என் மனத்திரையில் மணமான நண்பர்களின் உருவப் படங்கள் நிழலாடத் தொடங்கின.

என்னைவிடச் சிறியவனான சீனிவாசன் எதிர் வீட்டு ஹேமாவைக் காதலித்தான். என் சித்தப்பாவின் பிள்ளை என்னைவிட ஒரு வயது சிறியவன். ஒரு குழந்தைக்குத் தகப்பனாகி விட்டான். மாமா பிள்ளை மகாலிங்கமும் நானும் ஒரே நாளில் பிறந்தவர்கள். அவன் வகுப்பிலேயே படித்த வாசுகியை எஸ். எஸ். எல். ஸி. படிக்கும்போதே, காதலித்துக் கடிமணம் புரிந்து கொண்டு மூன்று வருடங்களாயின. எப்படியாகிலும் இவளைக் காதலித்து மணம் முடித்தால்தான் மனத்தில் உயிர்ப் பறவை அடங்கிக் கிடக்கும். இல்லையேல்...

"டேய், முரளி! தயாரா ?" என்று தண்டபாணி உள்ளே வந்தான்.

"வா ! இன்று மத்தியானம் வகுப்பு இல்லையே ! அப்படியே நேராய்ப் படத்துக்குப் போகலாமா ?" என்று கேட்டபடி அறையைவிட்டு வெளியே வந்தேன்.

"நாளைக்குப் போவோம். எனக்கு பகல் காட்சியே பிடிக்காது. மேலும் இன்று மத்தியானம் என் அக்காவை

உறவினர்கள் வீட்டுக்கு அழைத்துச் செல்ல வேண்டும். இன்று பத்திரிகையில் புத்தக விமர்சனம் பார்த்தாயா? நம் பேராசிரியரின் பொருளாதார நூலைப்பற்றி நன்ருக எழுதியிருக்கிருர்கள். ஒரு ஹாஸ்யமான விமர்சனமும் இருந்தது.''

'' என்ன ?''

'' காதற் கடிதங்கள் என்று ஒருதொகுதி வந்திருக்கிறதாம். அதில் முந்நூறு காதற் கடிதங்கள் பாதி ஆங்கிலத்திலும், பாதி தீந்தமிழிலும் எழுதப்பட்டுள்ளதாம். அதைப் பற்றி வேடிக்கையாகக் காதலை வளர்க்க விரும்புகிறவர்களுக்கு இன்றியமையாத நூல் என்று விமரிசனம் எழுதியிருக்கிருர்கள்'' என்று கூறிவிட்டுத் தண்டு விடைபெற்றுக்கொண்டு போய் விட்டான்.

★

அன்று கலாசாலைக்குப் போகவில்லை. ஆங்கிலப் பாடத்திலிருந்து குறிப்புக்கள் எழுதிக் கொண்டிருந்தேன். தபால்காரன் 'தபால்' என்று சொல்லியபடி வந்தவன் என்னைக் கண்டதும், '' சார்! ஒரு வி. பி. வந்திருக்கிறது. ஐந்து ரூபாய்'' என்ருன். மாதக் கடைசி. அப்பாவுக்குப் பணத்துக்கு எழுதியிருந்தேன். பணம் வரவில்லை. நான் எதிர்பார்த்த காதற் கடிதங்கள் வி. பி. யில் வந்து விட்டன. பெட்டியின் அடியில் அம்மா கொடுத்த பத்து ரூபாய் கிடந்தது. அதை எடுத்து அவனிடம் கொடுத்து வி. பி. யைப் பெற்றுக் கொண்டேன். அவன் சென்று விட்டான். நான் புத்தகப் பார்சலை மிகவும் ஆவலோடு பிரித்துக் கொண்டிருந்தேன்.



'' தபால்காரரே! எனக்கு ஏதாகிலும் இருக்கிறதா?'' என்று கேட்பது கேட்டது. திரும்பிப் பார்த்தேன். அந்தக் கிள்ளைமொழியாள் கைப்பிடிச் சுவரின் மேல் சாய்ந்து தெருவில் செல்லும் தபால்காரரைக் கேட்டுக் கொண்டிருந்தாள். நான் குறும்புத்தனமாக என் கையிலிருந்த பார்சலை அவளுக்கு முன் தெரியும்படி நீட்டினேன். அவள் அழகிய உதடுகளில் புன்முறுவல் வழிய 'விர்' என்று உள்ளே சென்ருள்.

அவள் ஒய்யாரப் பார்வையும், உயர்ந்த நடையும் மேனியின் பருவ எழிலும் என்னைப் பரவசப்படுத்தின. புத்தகத்தைப் பிரித்துப் படித்தேன். அதில் ஓர் ரசமான கடிதத்தைத் தேர்ந்தெடுத்து எழுதினேன். அதை என்ன விலாசமிட்டு எழுதி அனுப்புவது? அவள் பெயரோ தெரியாது. நூதாக அனுப்ப, நான் இருக்கும் வீட்டில் சிறு குழந்தைகளும் கிடையாது. தர்ம சங்கட நிலையில் தவித்துக் கொண்டிருந்தேன்.

மாலை ஆறு மணிக்கு நான் வெளியிலிருந்து வந்தேன். என் கண்கள் அடுத்த வீட்டு மாடியில் பாய்ந்தன. வெட்ட வெளியில் அவள் ஏதோ படித்துக் கொண்டு அமர்ந்திருந்தாள். பரபர

## ☆ அருள் வாக்கு ☆

அநாதிகாலம் தொட்டு விநாயக சொரூபம் நமக்கு அநுக்கிரஹம் பண்ணிக் கொண்டு வருகிறது. எந்த சுவாமியை வழிபட்டாலும் முதலில் பிள்ளையாருடைய அருளைப் பெற்றுக் கொண்டால்தான் அந்தக் காரியம் தடையின்றி நடக்கும். பெருமாள் கோயிலுக்குப் போனாலும் தும்பிக்கையாழ்வார் என்று ஒரு சுவாமி இருக்கிறார். அம்பாள் கோயிலானாலும் ஈசுவரன் கோயிலானாலும் முதலில் பிள்ளையார் இருக்கிறார். அவரை வழிபட்டால் எல்லா விதமான சுகங்களையும் அடையலாம். விநாயகர் குழந்தைச் சுவாமி. அதனால்தான் தன்னைப் பார்க்கிற ஜனங்களுக்குப் பார்க்கப் பார்க்கப் பொங்கும் ஆனந்தத்தை உண்டாக்கும்படியான யானை உருவத்துடன் விளங்குகிறார். அவர் ஆனந்த தத்துவம்; ஆருத ஆசையின் தத்துவ சொரூபமானவர்.

—ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்

வென்று உள்ளே சென்று மத்தியானம் எழுதிய கடிதத்தில் ஓர் கல்லை வைத்துச் சுருட்டி அவள் வீட்டு மாடியில் வீசி எறிந்தேன். என் காதலைச் சுமந்து சென்ற அந்தக் கல் பொட்டலம் அவள் பாதங்களை முத்தமிட்டது. அவள் நிமிர்ந்து பார்ப்பதற்குள் நான் திருப்தியாய் நெடுமூச்செறிந்து உள்ளே சென்றேன். என் மனம் அவளிடமிருந்து ஆவலாய்ப் பதிலை எதிர்பார்த்தது.

ஒன்று, இரண்டு, மூன்று நாட்கள் நகர்ந்து விட்டன. நான் எதிர்பார்த்த கடிதம்...என் மனம் படும் வேதனைத் துன்பம் எழுத்தால் விவரிக்கக் கூடியதா?

நான்காம் நாள் நான் அறைக் கதவை மூடிக்கொண்டு ஏதோ சிந்தித்தபடி படுத்துக் கொண்டிருந்தேன். ஜன்னல் வழியாய் ஓர் கடித உறையைத் தபால்காரன் வீசி எறிந்து விட்டுச் சென்றான். ஆச்சரியத்துடன் கடிதத்தை எடுத்துப் பார்த்தேன். எழுத்து புதியது. என் விட்டு என் எல்லாம் எழுதிக் 'கலாசாலை மாணவன்' என்று குறிப்பிட்டிருந்தது. பரபரவென்று கடித உறையைக் கிழித்துக் கடிதத்தைப் படித்தேன். ஹா! பரமானந்தம். அதில்,

"அன்புமிக்க அடுத்த வீட்டுக் காதலருக்கு, உங்கள் கடிதம் கிடைத்தது. நீங்கள் என்னைக் காதலிப்பது என் பாக்கியம். உங்கள் கடிதத்தில் நீங்கள் **'அடுத்த வீட்டுக் காதலன்'** என்று எழுதி இருந்ததால் உங்கள் பெயரைக் குறிப்பிட்டு எழுத இயலாமல் போயிற்று. நீங்கள் தயவுசெய்து இன்று மாலை சிரமத்தைப் பாராது ஐந்து மணிக்கு எங்கள் வீட்டுக்கு வரவேண்டுமாய் மிகவும் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன். **அடுத்தவீட்டுக் காதலி"** என்றிருந்தது. அந்தக் கடிதத்தை ஆசை தீர உள்ளத்தில் வைத்து அணைத்துக் கொண்டேன். சடுதியில் கதிரவன் மேற்கில் ஓடி மாலை இருள் கவிழத் தொடங்காதா, மங்கை விளித்த ஐந்து மணியும் அடிக்காதா என்று காத்திருந்தேன்.

**ம**ணி நான்கு அடித்ததுதான் தாமதம். குளித்து, பெண்பிள்ளையைப் போல் தலையை 'திருதிரு' என்று வாரி, முகத்தில் ஸ்னோவைப் பூசி, அதன்மேல் பவுடரையும் போட்டுத் தேய்த்து 'கெபர்டீன்' பேண்ட் அணிந்து, அதன்மேல் வெள்ளை ஸில்க் ஷர்ட்டை யணிந்து, என் அழகை நானே கண்ணாடி முன் நின்று ஒரு முறை பார்த்துச் சிறு புன்னகையைக் கண்ணாடியில் வீசித் திரும்பினேன். மேஜையின் மேலிருந்த கைக்கடிகாரம் ஐந்தாகிறதென்று எச்சரித்தது. கடிகாரத்தைக் கட்டிக் கொண்டே தடதட வென்று இறங்கி அடுத்த வீட்டுக்குள் நுழைந்தேன்.

"வாருங்கள். ஐந்து நிமிடத்துக்கு முன்பே ஆஜராகிவிட்டீர்களே!" என்று நகைத்தபடி வரவேற்றாள் அவள். என்னிடம் இருந்த தைரியம் எங்கோ போய் ஒளிந்து கொண்டது. அவள் பாதங்களைப் பார்த்தேனே யல்லாது, அவள் முகத்தைப் பார்க்கும் துணிச்சல் என்னை விட்டு அகன்று விட்டது.

"ஏன் நிற்கிறீர்கள்? உட்காருங்கள்" என்றாள். என் முகம் நிறைய வியர்வை துளித்தது. அழுத்தித் துடைத்தால் முகப்பூச்சு அழிந்து சாயம் வெளுத்துப் போனால் என்ன செய்வதென்று காமிரா முன் நிற்கும் நட்சத்திரங்கள் முகத்தை ஒற்றிக் கொள்வது போல் நாசுக்காய் ஒற்றிக் கொண்டேன். "உங்கள் கடிதத்தைப் பார்த்ததும், நீங்கள் பெரும் பேச்சாளர் என்று நினைத்தேன். நீங்கள் பேசுவதற்கே...." என்று நிறுத்தினாள்.

என் வாய் ஏனோ அசைய மறுத்தது. அவள் என் கடிதத்தைப் படித்துவிட்டு என்னை எடை போட்டிருக்கிறாள். அது என் சொந்த அறிவில் எடுத்த அமிர்தமல்ல என்பதை அவள் அறிவாளோ?

"உங்கள் பெயர்...? வயது ..? என்ன படிக்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

மெல்லத் தங்கியபடியே, "என் பெயர் முரளி....என் வயது இருபத்திரண்டு

முடிந்து இருபத்திமூன்று'' என்றேன். ஏனோ என் குரலில் கரகரப்பு ஏற்பட்டது.

''அட...என் தம்பியின் பெயரும் அது தான். நீங்கள் என்னைவிட ஆறு வயது சின்னவர்'' என்று கூறிக் குறும்பாய்ப் பார்த்தாள் அந்தப் பசுங் கிளி.

துணுக்குற்ற நான் அவளை நிமிர்ந்து பார்த்தேன். நான் முதன் முதலில் பார்த்துக் காதல் கொண்ட காதற்கிளி யான் வயதில் பெரியவளா? ஒரு நிமிஷத் தில் நான் திருப்தியுடன் தலை நிமிர்ந் தேன். என் மனத்தில் எத்தனையோ ஆதர்ச ஜோடிகள். ஆயர்பாடி ஆதவனை விட ராதை பெரியவள். சமீபத்தில் மணம் புரிந்துகொண்ட புகழ் பெற்ற சினிமா நடிகர் அமீர்சந்த் தம் நட்சத் திர மனைவியைவிட நான்கு வயது சிறிய வர்தானே? புகழ் பெற்ற தம்பதிகள் அப்படித்தான் இருப்பார்கள் போலும்!

''நீங்கள் என்னை முழுமனத்துடன் நேசிக்கிறீர்களா?'' என்று கேட்டாள். எதிர்பாராத கேள்வி. திடுக்கிட்டு ''ஊம்'' என்றேன்.

''எனக்காக எதை வேண்டுமாயினும் தியாகம் செய்வீர்களா?'' என்று அழுத்த மாய்க் கேட்டாள். அவள் நேரிடையான பேச்சைக் கண்டு என் மனம் தைரியம் கொண்டது.

''தவறாமல், ஸ்புட்னிக்கில் போகச் சொல்கிறீர்களா? சூரியனின் யோக க்ஷேமத்தைவிசாரிக்கச் சொல்கிறீர்களா? எதை வேண்டுமானாலும் செய்கிறேன்'' என்றேன் ஆனந்தமாய். அவள் சாந்த மாய் என்னைப் பார்த்தபடியே நின்றாள். அவள் கண்களில்தான் என்ன பொறுமை, என்ன கவர்ச்சி!

''நீங்கள் அம்மாதிரியான காரி யங்கள் செய்ய வேண்டாம். இந்த நிமி ஷமே என்னை அழைத்துச் செல்லுங்கள்'' என்றாள் வெகு நிதானமாய்.

''உங்களையா?'' என்றேன் வறண்ட குரலில். என் உடல் சிறிதே நடுங்கத் தொடங்கியது. உள்ளத்தில் பயத் துருத்தி அமுங்கி அமுங்கி மேல் எழும் பியது. அவளை எப்படி எங்கு அழைத் துச் செல்வது? நான் இருக்கும் அறைக்கு அழைத்துச் செல்ல முடியுமா? என்னை அங்கு தங்கத்தான் விடுவார்களா? நான் மானமாய்த் தலைநிமிர்ந்து நடக்க முடியுமா? நாகரிகம் அதிகமாக ஆக நங்கையர்களுக்குத்தான் எத்தனை துணிச்சல் வந்து விடுகிறது!

நம் பாரத நாட்டுப் பெண்கள் மானத் தைப் பெரிதாய்க் கருதுபவர்கள். தங் களையறியாது சறுக்கி விழுந்து சங்கடப் பட்டாலும் சாகத் துணிவார்களே ஒழி யத் தங்களைச் சந்தியில் நிறுத்தியவனை அம்பலப்படுத்த மாட்டார்களே! இவள் பெண்ணா.....'' என் வாயும் மனமும் அடைத்துப் போய் விட்டன.

''என்ன யோசிக்கிறீர்கள்? உங்கள் காதல் வெறும் காதல்தானா? என்னை அழைத்துப் போக அஞ்சுகிறீர்களா?''

நான் பிடிபட்ட கள்ளனைப் போல், சங்கடமான கனவைக் கண்ட ஊமை யைப் போல் 'திருதிரு' வென்று விழித் தேன். பொறுமையைக் கக்கிக் கொண் டிருந்த அவள் கண்கள் கனலைக் கக்கத் தொடங்கின. புன்னகை வழிந்து கொண் டிருந்த அவள் உதடுகள் பொசுக்கும் சொற்களை உதிர்க்கத் தொடங்கின.

''இருபத்தைந்து வயது சரியாக ஆக வில்லை. காதலாம் காதல்! அதுவும் கண்டதும் காதல். கண் முன் அழகிய கன்னி தவறு....பெண் உருவம் தென் பட்டால் உடல்உருகுகிறதாக்கும்! நன்றா யிருக்கிறது. ஓர் பெண் அறியாமல் ஆட வனைப் பார்த்து விட்டால் காதல், குலம், கோத்திரம், நீதி நியமம், வயது வகை ஒன்றும் கிடையாது போலும்! ஒருவரை யொருவர் பார்த்ததுமே காதல் ஏற்பட வேண்டுமானால் ஒவ்வொருவனுக்கும் ஆயிரக் கணக்கான காதலிகளல்லவா இருக்க வேண்டும்? அன்புக்குப் பொருள் தெரியுமா? காதலின் தத்துவம் தெரி யுமா? நான் உனக்குப் புத்தி கற்பிக்கவே இப்படிச் செய்தேன், முகப்பூச்சுக்காக இன்று எவ்வளவு செலவு செய்தீர்? எதற் காக....என்னைப் பார்க்க...நான் உங்க ளைக் கண்டு மயங்க. எனக்காக அநா வசியமாய் இத்தனை செலவு செய்ததற்கு வருந்துகிறேன். எனக்கு மணம் முடிந்து மூன்றாண்டுகளாயின. என் கணவர் வெளி நாட்டுக்குச் சென்றிருக்கிறார். வர நான்கு மாதங்களாகும். அவர் வரும்வரை யில் அவர் சொந்த வீட்டில் என்னை விட் டுச் சென்றிருக்கிறார். நீங்கள் என் இளைய சகோதரர் போன்றவர்'' என்று சற்று நிறுத்தினாள். தீர்ப்பை வெளி யிட்ட நீதிபதியின் முன் நிற்கும் குற்ற வாளியைப் போல் அமர்ந்திருந்தேன்.

அவள் மறுபடியும் பேசத் தொடங் கினாள். ''இனியாகிலும் நேர்மையுடன் நடக்கக் கற்றுக் கொள்ளுங்கள். அறை யில் அமர்ந்து படிக்கும் உங்களுக்கு இந்த வீட்டின் மேல் ஏன் நோட்டம்?'' என்று கேட்டு, ''இந்த வழியாய்ப் போகலாம்'' என்று வாசற்புறத்தைக் காட்டினாள்.

என் உடையெல்லாம் வியர்த்து ஈரமாகி விட்டது. அவளை நிமிர்ந்து பார்க்கத் தைரியமில்லாது அவள் காட்டிய வழியில் திரும்பி நடந்தேன்!






சென்னை ஐலண்டு மைதானத்தில் நடைபெறும்
இந்திய செஞ்சிலுவைச் சங்க
பொருட்காட்சியிலுள்ள

**ஸ்டாண்டர்டு மோட்டார்**

காட்சி மண்டபத்திற்கு
விஜயம் செய்யுமாறு உங்களை அழைக்கின்றோம்

காட்சி மண்டபம் நெ. 1 & 2

ஸ்டாண்டர்டு மோட்டார் ப்ராடக்ட்ஸ் ஆப் இந்தியா லிட்.
சென்னை





# தனிப்பெருந் தலைவன்

## காட்சி 5.

*[தியோகோவின் விருப்பப்படியே ரோடரிகோ ஷிமேனுவின் தந்தையைப் பழி வாங்கி விட்டான். ஆனாலும் தியோகோவின் உள்ளம் பரிதவித்துக் கொண்டுதானிருந்தது.]*

**தி:** பூரணமான சந்தோஷம் எப்பொழுதும் ஏற்படுவதில்லை. வெற்றியிலும் துயரம் வந்து கலக்கிறது. திருப்தியேற்படும்போது ஏதாவது கவலையும் வருகிறது. என் மனத்திலும் இப்பொழுது அப்படியேயிருக்கிறது. சந்தோஷத்தில் மூழ்கியிருக்கிறேன். ஆனால் ஓர் பயமும் நடுக்குகிறது. என்னை அவமதித்த எதிரி இறந்து தீர்ந்தான். ஆனால் எனக்காகப் பழி வாங்கின புத்திரனைக் காணக் கிடைக்கவில்லை. என் சக்திக்கு இயன்ற மட்டும் ஊரெல்லாம் அலைந்து தேடினேன்; பயனில்லை. எந்த இடத்திலும், எந்த நிமிஷத்திலும் அவனைக் கண்டு விட்டேன். கட்டியணைப் போகிறேன் என்று ஆசை வந்து கொண்டிருக்கிறது; ஆனால் நிழலையே கட்டிக் கொண்டு நிற்கிறேன். இப்படி ஏமாறிய என் மனத்தில் பயத்தை இரு மடங்காக்கும் அனுமானங்கள் எழுகின்றன. அவன் ஓடிப் போனதாக அடையாளம் இல்லை; ஆகையால் கோமேசின் நண்பர்களும் பரிவாரங்களும் அவன் மேல் ஆக்கிரமித்து விட்டார்களோ என்னவோ! அவர்களின் எண்ணிக்கையை நினைத்தால் என் மனம் பதறுகிறது. ரோடரிகோ இன்னும் உயிருடன் இருக்கிறானா? அல்லது சிறையில் தள்ளப்பட்டானா? ஆ! என் கண் முன் இது — இன்னும் ஏமாற்றமா, அல்லது என் ஆசை இறுதியில் நிறைவேறிற்றா? ஆமாம், அவன் தான் சந்தேகமில்லை; என் பிரார்த்தனைகள் பலித்தன; பயம் தீர்ந்தது; துயரம் நீங்கியது.

## காட்சி 6.

*தியோகோ, ரோடரிகோ]*

**தி:** ரோடரிகோ! ஈசுவர கிருபையால் உன்னை மறுபடியும் பார்க்கக் கிடைத்தது.

**ரோ:** ஐயோ!

**தி:** என் உற்சாகத்துடன் உன் பெருமூச்சைக் கலக்காதே. இதோ, கொஞ்சம் ஆசுவாசப்படுத்திக் கொண்டு, உன்னைப் புகழ்கிறேன். உன் பராக்கிரமத்தை மெச்சினேன். என்னைப் பின்பற்றினாய். நம் வம்சத்து வீரர்கள் அனைவரையும் நினைப்பூட்டினாய். உன் முதற் கைவரிசையே என் செய்கைகள் அனைத்துக்கும் சமானமாகிவிட்டது; இந்த அற்புதமான ஆற்றலினால் இளமையிலேயே என் போன்ற புகழை அடைந்து விட்டாய். என் முதுமைக்குத் தாங்குதூணாய் நின்றாய்; எனக்கு எல்லையற்ற மகிழ்ச்சியை அளித்தாய். வா, இந்தக் கன்னத்தில் எந்த இடத்தில் பட்ட அவமானத்தைத் துடைத்தாயோ அந்த இடத்தில் முத்தமிடு.

**ரோ:** உங்கள் கௌரவத்தை மீட்க வேண்டியது என் கடமை. உங்களிடம் பிறந்து உங்களிடம் வளர்ந்த நான் அது கூடச் செய்யாமலிருக்க முடியுமா? என் முதல் முயற்சியே உங்களுக்குத் திருப்தியளித்ததில் எனக்கு அளவிலா மகிழ்ச்சி. ஆனால் உங்கள் சந்தோஷத்தின் மத்தியில் என் மனப் போக்குக்கும் இடம் விடுங்கள். என் நிராசையை நினைத்துத் துயர்கொள்ள விடுங்கள். உங்களுக்கு நான் செய்த சேவையைப் பற்றிச் சற்றும் வருந்தவில்லை; ஆனால் அதன் பலனைப் பிரலாபிக்க விடுங்கள். என் காதலையும் எதிர்த்துப் பழி வாங்க ஆயுதம் எடுத்த இந்தத் தோள்கள் அதன் அதிசயச் செய்கையால் என் உயிரையும் பறி கொடுக்கச் செய்தன. உங்களுக்குச் செய்ய வேண்டிய கடமையை முற்றிலும் நிறைவேற்றினேன். அதைச் செய்வதில் நான் சர்வமும் இழந்தேன்.

**தி:** வெற்றியின் பலனைப் வேறு உயர்ந்த இடத்துக்கே நோக்கத்தைத் திருப்பு. நான் உனக்கு உயிர் கொடுத்தேன்; நீ எனக்குப் புகழ் கொடுத்தாய். உன் கம்பீரமான மனத்தில் சிறு சஞ்சலங்களுக்கு இடம் கொடுக்காதே. கௌரவம் ஒன்றே ஒன்றுதான்; ஆனால் பிரேமைக்குத் தகுந்தவர்கள் பலர் உண்டு. காதல் என்பது இன்பம் மாத்திரமே. ஆனால் கௌரவமோ கடமை.

**ரோ:** ஆ! என்ன சொல்லுகிறீர்கள்!

**தி:** நீ அறிந்து கொள்ள வேண்டியதை.

**ரோ:** கௌரவத்தை நிலைநிறுத்தினது என்மேல் பழி வாங்கினவாறுயே நிற்கிறது; அதற்குமேல், என் காதலைத் திருப்பிச் சபலபுத்தி வெளியிட வேண்டும் என்னும் வெட்கமான மார்க்கத்தைப் போதிக்கத் தயக்கமின்றி முன் வந்து விட்டீர்களே! யுத்தத்தில் பேடி போன்றவன் காதலில் வஞ்சகம் செய்பவன். அதில் என் சத்தியத்தை அலட்சியம் செய்யாதீர்கள்; என் கண்ணியத்தைக் காப்பாற்றுங்கள். எளிதில் அறுக்கக் கூடியதல்ல அந்த பந்தம்; ஆசை விட்டுப் போனாலும் இன்னும் ஆணையால் கட்டப்பட்டே நிற்கிறேன். ஷிமேனுவை அடைவதற்குமில்லை, விடுவதற்குமில்லை. ஆகையால் மரணத்தையே தேடுகிறேன்; அதுவே எனக்கு இதமான தண்டனை

எம்.வி.சுப்பிரமணியம் ஐ.ஸி.எஸ் (ரிடையர்டு)

டி: அப்படி நீயாகவே இறக்கச் சமயம் வந்து விடவில்லை; உன் அரசருக்கும் உன் தேசத்துக்கும் உன்னால் ஆகவேண்டியது எவ்வளவோ இருக்கிறது. நம் தேசத்து எதிரிகளான மோரர்களைப் பற்றிப் பேசியிருந்ததே. அவர்கள் கப்பற் படை ஆற்றுக்குள் பிரவேசித்து விட்டது; ஒரு மணி நேரத்தில் நகரத்தின் மதில்களை அணுகி விடும். இரவில் நிசப்தமாய் வந்து அகஸ்மாத்தாய்த் தாக்கிக் கொன்னை விடுவதாய் அவர்கள் உத்தேசம். அரசர் பந்தோபஸ்து கலைந்திருக்கிறது. மக்கள் பீதி பிடித்திருக்கிறார்கள். எங்கு பார்த்தாலும் அழுகையும் கண்ணீரும். பாக்கிய வசமாய் இந்த மத்தியில் எனக்கு ஒரு அநுகூலம் ஏற்பட்டிருந்தது. நம் வீட்டில் என் நண்பர்கள் ஐந்நூறு பேர்கள் கூடியிருந்தனர். ஒவ்வொருவரும் தனித் தனியாக என் அவமானத்தை அறிந்து அதற்குப் பழி வாங்க என் அனுமதியைக் கேட்க வந்து கூடியவர்கள். அதில் நீ அவர்களை முந்திக் கொண்டாய். அவர்கள் சக்தியை இப்பொழுது மோரர்கள் மீது திருப்பலாம். அவர்களுக்குத் தலைவனாகச் செல். அது உனக்குக் கௌரவம். அவர்கள் வேண்டுவதும் அதுதான். சென்று அந்தத் தேச விரோதிகளை முறியடி. நீ இறப்பதானால் அங்கு இறப்பதே அழகு; அப்படியொரு சந்தர்ப்பத்தை விடக்கூடாது; உன் மரணத்தால் அரசருக்கு நன்மை ஏற்படட்டும். ஆனால் வெற்றிமாலை சூடி உயிருடன் நீ திரும்ப வேண்டும் என்றே என் ஆசை. எனக்குப் பழி வாங்கியதோடு மட்டும் நிற்கக் கூடாது உன் புகழ். பகைவரை வென்றதால் அரசர் உன்னை மன்னிப்பார். ஷிமேனும் பேசாமல்வாய் மூடுவாள். அப்படி வெற்றி பொருந்தி வருவதுதான் அவள் இதயத்தையும் மறுபடியும் வெல்ல மார்க்கம் என்று அறி. ஆனால் பேசிக் கொண்டே நிற்கச் சமயமல்ல இது; நீ பறந்தோட வேண்டும். போர் புரிந்து அரசருக்கு வெற்றியைக் காண்பி. கோமேக இறந்த நஷ்டத்துக்கு ஈடு கொடுக்க நீ இருக்கிறாயென்று நிரூபி.



## அங்கம் 4

## காட்சி 1

[ஷிமேன், எல்வீரா]

ஷி. அது பொய் வதந்தி இல்லையே? நன்றாய்த் தெரியுமா, எல்வீரா?

எல்: சொன்னால் நம்ப மாட்டீர்கள்—ஆனால் அந்த இளம் வீரரின் தீரச் செயல்களைப் பற்றி மக்கள் ஒருமுகமாய் எப்படி வானளாவப் புகழ்கிறார்கள் தெரியுமா? மோரர்கள் அவர்முன் அவமானம் அடைவதற்கே தோன்றினார்கள்; துரிதமாய் வந்து இறங்கினார்கள். மூன்று மணிநேரம் சண்டை; நமது பக்கம் போர் செய்தவர்களுக்குப் பூர்ணமான வெற்றி; எதிரிகளின் இரண்டு அரசர்கள் கைதி ஆனார்கள். நமது பக்கத்துத் தலைவருக்கு முன் எவரும் எதிர் நிற்க முடியவில்லை.

ஷி: இந்த அற்புதமெல்லாம் இயற்றியது ரோடரிகோவேயா?

எல்: அவர் பராக்கிரமத்தின் பலன் தான் இரண்டு அரசர்கள் கைதானது; அவரே அவர்களை வென்றார்; அவரே அவர்களைக் கைப்பற்றினார்.

ஷி: எங்கிருந்து உனக்கு இந்தச் செய்தி யெல்லாம் கிடைத்தது?

எல்: மக்களிடமிருந்து 'விடுதலையளித்தவன்' 'குலதேவதை' என்று பலவாறாய்க் குதூகலத்துடன் எங்கு பார்த்தாலும் அவன் புகழையே கூறிக் கொண்டிருக்கிறார்கள்.

ஷி: அரசர் அபிப்பிராயம் எப்படியோ?

எல்: ரோடரிகோ இன்னும் அரசர் முன்பு ஆஜராகத் துணியவில்லை. கைதி அரசர்களை விலங்கிட்டு அரசர் முன் டியேகோ சமர்ப்பித்தார்; தேசத்தைக் காப்பாற்றிய ரோடரிகோவுக்கு மன்னிப்புக் கொடுத்துக் கிருபை செய்ய வேண்டும் என்று அரசரைக் கோரினார்.

ஷி: ரோடரிகோவுக்குப் போரில் காயம் ஒன்றும் இல்லையே?

எல்: அதைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. ஆ! அதைக் கேட்டு நிறம் மாறு



ஷிரீகனே! தைரியத்தை வரவழைத்துக் கொள்ளுங்கள்.

ஷி: தைரியத்தை மட்டுமல்ல! மங்கிப்போன கோபத்தையும் வரவழைத்துக் கொள்ள வேண்டும். அவன்மேல் அக்கறையிருக்கிறதென்று என்னை மறந்துகொள்வதா? அவனைப் போற்றுவதையும் அவனைப் புகழ்வதையும் என் மனம் ஒப்புக்கொண்டு விடுவதா? என் கௌரவம் மௌனமடைந்ததா.



என் கடமை சக்தியற்றுப் போயிற்று? என் காதலை விலக்கிக் கோபத்துக்கே இடம் கொடுக்க வேண்டும். அவன் இரண்டு அரசர்களை வென்றிருக்கலாம். ஆனால் என் தந்தையைக் கொன்றிருக்கிறான். எனக்கு அவன் பராக்கிரமத்தின் முதல் பலன் என் துக்கத்துக்காக உடுத்தியிருக்கும் இந்த ஆடைகள்; ஊரில் அவன் பெருந்தன்மையைப் பற்றிப் பேசலாம். இங்கு இவை பேசுவது அவன் குற்றத்தைப் பற்றியே. எனக்கு அவன் பிரதம வெற்றியின் பரிசாகிய இந்த ஆடைகள் என் அன்புக்கு எதிராய் என் கடமையை எடுத்துக் காட்டிக் கொண்டிருக்கட்டும்.

*(அப்போது அரசகுமாரி அங்கு வருகிறாள்)*

எல்: உங்கள் வேகத்தைக் கொஞ்சம் தணியுங்கள்; அரசகுமாரி வருகிறாள்.

## காட்சி 2

*(அரசகுமாரி, ஷிமேனு, லேயோனோரா, எல்விரா)*

அர: ஷிமேனு! உனக்கு ஆறுதல் சொல்ல மட்டும் வரவில்லை; உன் கண்ணீருடன் என் பெருமூச்சையும் கலப்பதற்குத்தான் வந்தேன்.

ஷி: அம்மணி! என்னைத் தவிர ஒருவருக்கும் இப்பொழுது பெருமூச்சுவிட உரிமையில்லை. பிரஜைகளுக்கு ஏற்பட்ட பொதுச் சந்தோஷத்தில் நீங்கள் கலந்து கொள்ள வேண்டும். கடவுள் கொடுத்த பாக்கியத்தைச் சுவைக்க வேண்டும். ரோடரிகோ நம் எல்லோரையும் ஆபத்திலிருந்து விடுவித்தான்; அவன் தோள் பலத்தால் பொது மக்களுக்கு நன்மை ஏற்பட்டது. ஆனால் எனக்கு மட்டும்தான் அது இன்னும் துக்கத்துக்குக் காரணமாய் இருக்கிறது. ஊரைக் காப்பாற்றினான். அரசருக்குச் சேவை செய்தான். ஆனால் எனக்கு மட்டும்தான் அவன் தோள்கள் சர்வநாசத்தை உண்டாக்கி விட்டன.

அர: என் ஷிமேனு, என்ன இருந்தாலும் அவன் அற்புதச் செயல்கள் புரிந்தது உண்மையேயல்லவா?

ஷி: வெறுப்பான அந்தச் செய்தி ஏற்கெனவே என் காதையும் எட்டியிருக்கிறது; காதலில் துர்ப்பாக்கியன். ஆனாலும் யுத்தத்தில் வெற்றி வீரன் என்ற பேச்சே எங்கும் பரவியுள்ளது.

அர: மக்கள் சொல்வதில் நீ வெறுக்கத்தக்கது என்ன இருக்கிறது? அவர்கள் புகழும் வீரன் முன்பு உனக்கு உகந்தவனாக இருந்தான்; உன் இதயத்துள் நின்றான்; உன் எண்ணத்தில் வாழ்ந்தான். அவர்கள் புகழ்ச்சி உன் காதலனைக் கௌரவிக்கிறது அல்லவா?

ஷி: அவனை எல்லோரும் புகழ்வது நியாயமே; ஆனால் அது எனக்கு ஒரு விதத்தில் துன்பத்தைத் தருவதாகவே இருக்கிறது. அவனைப் புகழேணியின் உச்சியில் தூக்கி வைக்க என் கவலையும் அதிகமாகிறது. அவன் மதிப்பு உயர உயர என் நஷ்டத்தின் பளுவும் உயருகிறது. அவனைக் காதலிக்கும் என் மனத்துக்கு இவ்வளவு குரூரமான துயரம்? அவன் மதிப்பு புலப்படப் புலப்பட என் காதலும் வளருகிறது. ஆனால் இப்பொழுதும் என் கடமைக்குத்தான் அதைவிடப் பலம் அதிகம். என் காதலை உதறி விட்டு, அவனை மரண தண்டனை வரை தொடரப் போகிறேன். நான் அவனைக் காதலிப்பது எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் அவன் மரணம் அடைவதும்.

அர: நீ கடமையில் காட்டும் ஆர்வம் மிகவும் மெச்சத் தக்கது. அந்தப் பெருந்தன்மையை நோக்கி அரசரைச் சூழ்ந்



தவர் எல்லோரும் நீ காதலைப் பறி கொடுக்க இருப்பதற்கு வருந்தினர். உன் தைரியத்தைப் பாராட்டினர். ஆனால் நான் உனக்கு ஆப்தமாய்ப் புத்திமதி சொல்வேன், கேட்பாயா?

**ஷி** : நீங்கள் சொல்வதைக் கேட்காமல் இருப்பது அபராதமாயிற்றே.

**அர** : முன்பு நியாயமாயிருந்தது; இப்பொழுது அப்படி இல்லை. ரோடரிகோவே இப்பொழுது நம் அனைவருக்கும் காப்பு; அவன் வழிபாட்டுக்குரியவன்; எல்லோருக்கும் நல்லவன். காஸ்தில் தேசத்துக்கு அவனே அரண்; மோரர்களுக்குத் திகிலைக் கொடுப்பவன். உன் தந்தைக்குப் பிறகு ரோடரிகோவே இந்த நிலையில் ஆண்மை வீரனாக நிற்பவன் என்று அரசருக்கும் அபிப்பிராயம். இன்னும் விட்டுச் சொல்கிறேன் — ரோடரிகோவின் மரணத்தைத் தேடுவதில் நீ தேசநாசத்தைத் தேடியவள் ஆவாய். தந்தைக்குப் பழி வாங்குவதற்காகத் தேசத்தைப் பலி கொடுத்தல் தகாது. அது எங்களுக்கெல்லாம் தண்டனை கொடுப்பதாகும். நாங்கள் உனக்கு என்ன குற்றம் செய்தோம்? தவிரவும், உன் தந்தையைக் கொன்றவனை நீ மணம் செய்து கொள்ள வேண்டும் என்ற கட்டாயமும் இல்லை. காதலை விட்டுவிடு; ஆனால் அவன் உயிரையும் விட்டுவிடு. நீ அவனைக் காதலிக்கவும் வேண்டாம். கொன்று பழி வாங்கத் துடிக்கவும் வேண்டாம்.

**ஷி** : அவ்வளவு கருணை காட்டுவதற்கு எனக்கு உரிமையில்லையே! என் கடமைக்கு எல்லை வகுக்க முடியாது. அவன் மேல் அன்பு இருந்துகொண்டேயிருக்கலாம்; அவன் மக்களுக்குப் பெரியவனாயிருக்கலாம், அரசரின் நன்மதிப்பைப் பெற்றவனாயிருக்கலாம், வீரர்கள் பலர் சூழ நிற்கலாம் — ஆனால் நான் அவன் மேல் நடவடிக்கையைத் தொடருவது நிற்காது.

**அர** : கடமையை நினைத்துக் காதலனையும் தொடர்வது பெருந்தன்மைதான்; ஆனால் பொதுநன்மைக்காகத் தீய காரியத்தை விட்டுவிடுவது இன்னும் மேல். நான் சொல்வதை நம்பு, நீ உன் அன்பைத் தியாகம் செய்வதே போதும்; உன் அன்பை இழப்பதே அவனுக்குப் பெருந் தண்டனை. தேச நன்மையை உத்தேசித்து அத்துடன் நிறுத்து. தவிரவும், நீ நினைத்ததை அரசர் ஒப்புக் கொள்வார் என்பது என்ன நிச்சயம்?

**ஷி** : என் வேண்டுகோளை அவர் நிராகரிக்கலாம்; அதற்காக நான் மௌனமாயிருக்க முடியாது. செய்வதைச் செய்துதான் ஆகவேண்டும்.

**அர** : ஷிமேனு! நான் சொன்னதை இன்னும் நன்றாய்ச் சிந்தித்துப் பார். போய் வருகிறேன். சாவகாசமாய் நினைத்து ஒரு முடிவுக்கு வா.

**ஷி** : இறந்த என் தந்தையை நினைத்து, இனி யோசிப்பதற்கு ஒன்றுமேயில்லை. ஏற்கனவே யோசித்துத்தான் நான் முடிவுக்கு வந்திருக்கிறேன். என்னுடைய முடிவு ஒரே முடிவுதான். அது இனிமேல் என்றுமே மாறாது. மாற விடவும் நான் தயாராயில்லை.

(தொடரும்)

## கோவையில் ஒரு நடன விருந்து

ஒரு ஆங்கிலேயப் பெண்மணி பரதநாட்டியம் பயின்று அதில் தேர்ச்சியடைந்திருக்கிறாள் என்று யாராவது சொன்னால் 'பொழுதுபோக்குக்காகப் பயில்வார்போலும்' என்று அசட்டையாக எண்ணத் தோன்றும். ஆனால் ஆங்கிலேயக் குடும்பத்திலேயே பிறந்து, அந்தச் சூழ்நிலையிலேயே வளர்ந்து ஒரு இந்தியரை மணந்து நம் தமிழகத்துக்கு வந்த ஸ்ரீமதி ஜுலீன் ராமசாமியின் பரதநாட்டியம் சமீபத்தில் கோவையில் தாகூர் கலைக்கூடத்தில் நடைபெற்றதைக் கண்டவர்கள் இந்த எண்ணத்தை முற்றிலும் மாற்றிக்கொள்ள வேண்டியிருந்தது. 'என்னால் முடியும்' என்னும்படி ஸ்ரீமதி ஜுலீனின் பரதநாட்டியக் கச்சேரி அமைந்திருந்தது. சுத்தமான பரதநாட்டிய பாணியில் அலாரிப்பு, ஜதி ஸ்வரம், சப்தம், வர்ணம் முதல் நிருத்த நிருத்தியங்களுட்பட, பதங்கள் ஜாவளிகள் வரையில் அபிநய பாவப் பொலிவுடன் விஸ்தாரமாக நீடித்த நிகழ்ச்சி சபையோரைப் பரவசத்தில் ஆழ்த்தியதுடன் பிரமிக்கவும் வைத்தது. அந்நிகழ்ச்சிக்குத் தலைமை வகித்த திரு சி. பி ராமசாமி அய்யர் ஸ்ரீமதி ஜுலீனின் நடனத்தை வியந்து பாராட்டினார்.



# தக்ஷிண ரெயில்வே

## டெண்டர் நோட்டீஸ் நெ. S. 51/VI

ஒரு ஆண்டு காலத்திற்கு 1-7-59 முதல் 30-6-60 வரையில் ரெயில்வேக்குத் தேவையான உடைகளைத் தைத்து சப்ளை செய்ய சீலிட்ட டெண்டர்கள் தக்ஷிண ரெயில்வே, கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ் ஆபீஸில் (அயனாவரம் போஸ்ட், சென்னை-23) 28-4-59 பிற்பகல் 3 மணி வரை ஏற்றுக் கொள்ளப்பட்டு, 29-4-59 பகல் 11 மணிக்கு கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ் அவர்களால் பார்வை யிடப்படும்.

டெண்டர் பாரத்தை பிரதி ஒன்றுக்கு ரூ. 10/- விதம் ரொக்கமாகவோ மணியார்டர் மூலமாகவோ செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம். வேறு எவ்வகையிலும் அனுப்பப்படும் தொகை அங்கீகரிக்கப்படமாட்டாது.

டெண்டருக்கான ஜாமீன் தொகை ரூ. 1,000/-த்தையும் சீப் காஷியர், தக்ஷிண ரெயில்வே சென்னை-3, என்ற விலாசத்துக்கு 24-4-59க்குள் அனுப்பி வைக்க வேண்டும்.

டெண்டர் பாரங்கள் 23-4-59 பிற்பகல் 3 மணிக்குப் பிறகு கொடுக்கப்படமாட்டாது.

கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ் ஆபீஸ்
சென்னை 23

கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ்



# படித்துப் பாருங்கள்

## பிரபஞ்சமும் டாக்டர் ஐன்ஸ்டினும்

விஞ்ஞான மேதை டாக்டர் ஐன்ஸ்டின் இறந்து போவதற்குச் சில நாட்களுக்கு முன்னால் அவரை ஒரு பத்திரிகை நிருபர் பேட்டி கண்டு கேட்டார்: "உங்களுடைய ஒப்புமைத் தத்துவத்தைப்பற்றிப் (Theory of relativity) பேரறிஞர்கள் பிரமாதமாகச் சொல்கிறார்கள். எனக்குப் புரியவில்லை. என்னைப் போன்ற விஞ்ஞான அறிவு அதிகமில்லாதவனுக்குப் புரியும்படியாக அதை விளக்க முடியுமா?"

ஐன்ஸ்டின் புன்னகை புரிந்து கூறினார்: "வெப்பம் மிகுந்த ஒரு நாளில் கொழுந்து விட்டு எரியும் தீக்கு மிக அருகில் நீ உட்கார்ந்திருந்தால் உனக்கு எப்படி இருக்கும்? ஒவ்வொரு விநாடியும் ஒரு மணி நேரமாகத் தோன்றுமல்லவா? ஆனால் அதே சமயத்தில் உன் காதலி உன் அருகில் உட்கார்ந்திருக்கிறாள் என்று வைத்துக்கொள். அப்போது எப்படி இருக்கும்? ஒவ்வொரு மணி நேரமும் ஒரு விநாடியாகச் சென்று விடுமல்லவா? அதுதான் என்னுடைய ஒப்புமைத் தத்துவம்" என்றாராம்.

பத்திரிகை நிருபரைத் திருப்திப்படுத்த இப்படிச் சொன்னாரே ஒழிய ஐன்ஸ்டினுக்கு இம்மாதிரி விஷயங்களைச் 'சுலபப் படுத்திக்' கூறுவது பிடிப்பதில்லை என்பது இந்தப் புத்தகத்துக்கு அவர் அளித்திருக்கும் முன்னுரையிலிருந்து நன்கு தெரிகிறது. அவர் சொல்கிறார்:

"நுட்பமான விஞ்ஞான விஷயம் ஒன்றைச் சாதாரண மக்களுக்குப் புரியும்படி எழுதுவது கடினம் என்பதை அந்த முயற்சியில் ஈடுபட்டிருக்கும் அனைவரும் அறிவர். தெளிவற்ற உபமானங்களை மாத்திரம் மேலெழுந்தவாரியாகக் கூறிவிட்டு விஷயத்தை மறந்து விடுவது ஒரு வகை. இதனால் வாசகர்களுக்குப் பிரஸ்தாப விஷயத்தைப் பற்றிய பொய்த் தோற்றமே ஏற்படுகிறது. எடுத்துக் கொண்ட விஷயத்தைப் பண்டித முறையில் எழுதுவது மற்றொரு வகை. இதைப் படிக்கும் வாசகர்கள் அதை பரிந்து கொள்ள முடியாததோடு மேற்கொண்டு தொடர்ந்து படிக்கும் ஊக்கத்தையும் இழந்து விடுகிறார்கள்......லிங்கன் பர்னெட்டின் இப்புத்தகம் ஜனரஞ்சக விஞ்ஞான இலக்கியத்தில் ஒரு சிறந்த படைப்பு. ஒப்புமைத் தத்துவத்தின் முக்கிய கொள்கைகள் மிகச் சிறந்த முறையில் இந்தப் புத்தகத்தில் விளக்கப்பட்டுள்ளன..."

டாக்டர் ஐன்ஸ்டின் அவர்களே இப்படி இப்புத்தகத்தைப் பற்றி எழுதிய பிறகு நாம் சொல்வதற்கு என்ன இருக்கிறது?

தமிழிலே திரு என். சுப்பிரமணியம் எம். ஏ. பி. டி. நன்றாக மொழிபெயர்த்திருக்கிறார். விஞ்ஞான அறிவை அளிக்கும் புத்தகங்கள் அதிகமாகத் தமிழில் வராத காரணத்தால் பல கலைச் சொற்களை அருகே கொடுக்கப்பட்டிருக்கும் ஆங்கிலப் பதங்களைப் படித்துத்தான் புரிந்து கொள்ள வேண்டியதாக இருக்கிறது. அதன் பிறகுதான் தமிழில் அதற்குத் தரப்பட்டிருக்கும் சொற்கள் பொருத்தமாகவே அமைந்திருப்பதையும் உணர முடிகிறது! இருந்தபோதிலும் மிகக் கடினமான விஞ்ஞான விஷயங்களைத் தமிழிலும் செய்ய முடியும் என்பதற்கு இப்புத்தகம் ஓர் அத்தாட்சி.

வெளியிடுவோர்: பேர்ல் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிட். பம்பாய் - 1 விலை: ரூ. 0-75.

## ருஷ்யக் கதைகள்

ஒரு பேரப்பிள்ளையின் முகத்தில் அவனுடைய தாத்தாவின் சாயலை எவ்வளவு குறைவாகக் காணலாமோ அவ்வளவு குறைவாகத் தான் மொழிபெயர்ப்புக் கதைகளில் மூலத்தின் அழகையும், ஆழத்தையும் காண முடிகிறது. அந்தக் கதைகள் பிறந்த மொழியைப் பேசுகிறவனும், அந்த மொழி வழங்குகிற பிரதேசத்தில் வாழ்கிறவனும், அந்தக் கதைகளை உணர்ந்து அனுபவிக்கிற மாதிரி இன்னொரு மொழியில் பெயர்த்துப் படிக்கிறவன் அனுபவிக்க முடிவதில்லை. டெலிபோனில் மனைவியோடு பேசுகிறவன் அடைகிற திருப்தியைவிட நேரில் சந்தித்துப் பேசுகிற திருப்தி அதிகமாகத்தானே இருக்க முடியும்?

ஆனால் சில திறமையான ஆசிரியர்கள் எந்த மொழியில் பெயர்த்துப் படித்தாலும் நன்றாக இருக்கும்படி எழுதி, மொழியையும், பிரதேசத்தையும் கடந்து தங்கள் எண்ணங்களைப் பதித்து விடுகிறார்கள்.

பதினேழு ருஷ்யக் கதைகளின் மொழிபெயர்ப்பாகிய இத்தொகுதியில் நாலைந்து கதைகள் மேலே கூறிய வகையில் சிறப்பெய்துகின்றன. புஷ்கின் எழுதிய 'மணமகள்' என்ற கதையும், ஆன்டன் செகாவின் சிந்தனையைத் தூண்டும் கதையான 'பந்தயமும்' திருடர்களைப் பற்றி ரசமாகச் சொல்லும் அலெக்சாண்டர் குப்ரினின் 'திருடர்' என்ற கதையும், மாக்ஸிம் கார்க்கியின் உள்ளத்தை உருக்கும் 'ஒண்டிக் கட்டை' என்ற கதையும், 'இவான் துர்கனேவ்' 'டாஸ்டாவெஸ்கி' ஆகியோர் கதைகளும் தரமானவை. மற்றவைகளும் படிக்க ஏற்றவையே. மொழிபெயர்ப்பும் நன்றாக இருக்கிறது.

மொழிபெயர்த்தவர்: கா. பாஸ்கரன், கிடைக்குமிடம். தமிழகம் 59, பிராட்வே, சென்னை - 1. விலை ரூ. 1-50.

## பரதநாட்டியப் போட்டியில் நான் முதற் பரிசைப் பெற்றேன்—போர்ன்-விடாவுக்கு எனது நன்றி



நான் பரதநாட்டியக் கலையில் நன்கு திகழவேண்டுமென்ற ஆர்வத்துடன் நாட்டியம் பயின்றேன். ஆனால் பலஹீனத்தினால் நாட்டிய அப்பியாசம் செய்ய முடியாமல் சக்தியற்று இருந்தேன். சக்திக்கு தினமும் போர்ன்-விடா அருந்தும்படி எனது குரு சொன்னார். அப்படியே செய்ய விரைவில் முன்னைவிட அதிக சக்தியையும் பலத்தையும் அடையப் பெற்று தினமும் வெகு நேரம் நாட்டிய அப்பியாசம் செய்ய இயன்றது. பின்னர் நாட்டிய விழாவில் போட்டியிட்டு முதற்பரிசைப் பெற்றேன். போர்ன்-விடாவுக்கு எனது நன்றி. அதிக சக்திக்கும் பலத்திற்கும் தினமும் போர்ன்-விடா அருந்துங்கள்.








For Strength and Vigour

**BOURN-VITA**

MADE BY

Cadbury's

மூன்றும் அத்தியாயம்

# கர்மதேனு

ஓய்வாகக் குலுங்கி நின்ற வண்டியிலிருந்து இறங்கி வந்த இளைஞனைச் சிறிது நேரம்தான் நின்று நிதானித்துப் பார்த்தார் பாரிஸ்டர் பரமசிவம். அடுத்த கணமே அவன் யாராக இருக்கக் கூடும் என்று தெரிந்து கொண்டு விட்டார். அந்தக் கண்களின் ஆழ்ந்த பார்வையை அவர் மறக்கவேயில்லை. சற்று முன் நிகழ்ந்தவைகளைச் சட்டென்று நினைவிலிருந்து விலக்கி ஒதுக்கிவிட்டு, "வாருங்கள் தம்பி, வாருங்கள்!" என்று வாய் நிறைய வரவேற்றார்.

அந்த இளைஞன் பாரிஸ்டரின் வரவேற்பைக் கண்டு சிறிது தயங்கி நின்றான்.

"என்ன தம்பி, தயக்கம்! சிங்கப்பூரிலிருந்துதானே வருகிறீர்கள்? முத்தையாவின் தம்பி மகன்தானே?" என்று சர்வ நிச்சயமாகக் கேட்டார் பாரிஸ்டர்.

இதைக் கேட்டதும் அவன் அப்படியே அசந்து போய் விட்டான். கூச்சமும் குறுகுறுப்பும் உந்த, "நான் வருவது கூட உங்களுக்குத் தெரிந்திருக்க முடியாதே. என்னை எப்படி அடையாளம் தெரிந்தது?" என்று ஆச்சரியத்தோடு கேட்டான் அவன்.

பாரிஸ்டர் முகத்திலே புன்னகை மலர்ந்தது. பல காலம் பழகிய கண்டனைப் போல் அவர் அவனுடைய தோளிலே கையைப் போட்டுக் கொண்டு, "இதென்ன தம்பி, பிரமாதம்? யாரை மறந்தாலும் கண்ணபிரானை மறக்க முடியுமா?" என்று அன்பொழுகக் கூறி, அவனை ஹாலுக்குள் அழைத்துச் சென்றார்.

"ஒருகால் பெரியப்பாதான் உங்களுக்குக் கேபிள் கொடுத்திருந்தாரோ என்று பார்த்தேன்!" என்றான் கண்ணபிரான்.

"அப்படியானால் முத்தையா வரவில்லையா?"

"இல்லை; நான் மட்டும்தான் புறப்பட்டு வந்திருக்கிறேன். உங்களையெல்லாம் பார்த்துவிட்டு வருவதற்காகவே என்னை அனுப்பினார் பெரியப்பா!"

பாரிஸ்டருக்கு இது அதிக மகிழ்ச்சியைக் கொடுத்தது. அவன் தனியாகப் புறப்பட்டு வந்திருப்பது, அரிய பொருள் ஒன்று எதிர்பாராமல் அகப்பட்டதுபோல் இருந்தது அவருக்கு.

"அப்படியானால் எப்பொழுது வந்தீர்கள்? நேரே இங்கேயே வந்து இறங்கியிருக்கலாமே!" என்று கூறியவாறே கால் பக்கமாக இருந்த பொத்தானை அழுத்தினார் அவர்.

அழகும் குளிர்ச்சியும் நிறைந்த அந்த ஹாலில் எல்லாம் விலையுயர்ந்த பொருள்களாகவே காணப்பட்டன. குஷன் சோபாக்கள், கண்ணாடி புதைத்த மேஜைகள், தந்தச் சிற்பங்கள் எல்லாமே அந்த ஹாலை அழகுற அலங்கரித்திருந்தன. இடது பக்கத்திலே அவருடைய பெரிய தந்தை முத்தையாவின் வர்ணப் படம்கூட ஒன்று மாட்டப் பட்டிருந்தது. வலது பக்கத்தில் ஆறேழு வய



துச் சிறுமியின் இயற்கை வண்ணமுடனப் படங்கள் அழகாகக் காணப்பட்டன. அந்த அழகுச் சிறுமியின் வண்டுக் கண்கள் சிரித்தன; வரிசைப்பற்கள் வரவேற்புக் கூறின.

"அவள்தான் எங்கள் குழந்தை—உஷா! நாட்டிய அரங்கேற்றத்தின் போது எடுத்த படங்கள். நானும் சொர்ணமும் சிங்கப்பூருக்கு வந்துவிட்டு வந்தோமே, அப்பொழுது

பிறந்தவன்!" என்று அவனுடைய பார்வைக்கு விடையளிப்பது போல் கூறினார் பாரிஸ்டர்.

இப்படித் தனக்கு ஒரு வரவேற்புக் கிடைக்கும் என்று கண்ணபிரான் எதிர்பார்க்கவேயில்லை. பாரிஸ்டருடைய வெற்றியின் ரகசியமே அவருக்கு இருந்த சில அபூர்வப் பண்புகள்தான். நினைவில் வைத்திருக்க வேண்டியவர்களை எத்தனை வருஷங்களுக்கு முன்பு பார்த்திருந்தாலும் எந்த அவசரத்தில் அறிமுகமாகியிருந்தாலும் அவர் தெரிந்து கொண்டு விடுவார். அதுபோலவே நினைவில் வைத்திருக்க வேண்டாதவர்களைக் காலையில் பார்த்திருந்தால்கூட மாலையில் மறந்து போய் விடுவார். மணிக்கணக்காகப் பேசிக் கொண்டிருந்து விட்டு, மறுபடியும் புதிதாக ஊர், பெயர் எல்லாவற்றையும் விசாரிக்கத் தொடங்கி விடுவார். அதாவது வந்தவனை நெஞ்சுக்குக் கீழே தள்ளி, நினைவுக் கதவைத் திறந்துவிட அவர் விரும்பவில்லை என்றுதான் அதற்குப் பொருள். இந்தக் குணம் அவருக்கு இயற்கையாகவே அமைந்திருந்தது.

அற்பமான விஷயமாக இருந்தாலும், அவருடைய நினைவில் மட்டும் இருந்து விட்டால் அது அவசியப்படக் கூடியது என்று நிச்சயமாகச் சொல்லி விடலாம். மற்றவை எத்தனை பெரிய விஷயமாக இருந்தாலும் அவர் நினைவிலேயே தங்கியிருப்பதில்லை. அவர் ஏற்றுக் கொள்ளும் வழக்குகளை நடத்தும்போது இந்தக் குணச் சிறப்பு இன்னும் ஓங்கி நிற்கும். வழக்குக்கு அநுகூலமான விவரங்கள் மட்டுமே அடுக்கடுக்காக அவர் கண்ணெதிரே வந்து நிற்கும். பாதகமானவை எதுவும் அவர் பக்கமே எட்டிப் பார்ப்பதில்லை. தேன் வறண்ட மலர்களை வண்டுகள் எப்படி உணருகின்றனவோ, அத்தகைய உள்ளுணர்வு, அதிசயமான சக்தி அவருக்கு இருந்தது.

விலையுயர்ந்த பொருள்கள் நிறைந்த இந்த ஹால், தோட்டமும் தோப்பும் சூழ்ந்த இந்த அழகிய பங்களா, இவை வருவதற்குக் காரணமாக இருந்த வருவாய், பெயர், புகழ் எல்லாமே இந்த அதிசயமான சக்தியின் காரணமாகவே அவருக்குக் கிடைத்திருந்தன. சட்ட ஞானத்தைவிட இந்தச் சக்திதான் அவருக்குப் பெரிதும் உதவியது; அரிய பெரிய வெற்றிகளையெல்லாம் அநாவசியமாகத் தேடித் தந்தது. சக்தியிலே சிவம் கலந்திருப்பது போல், அவருடைய உள்ளுணர்விலே ஞாபகசக்தியும் ஞாபக மறதியும் ஐக்கியமாகியிருந்தன. இந்த இரண்டுமே அவருக்கு இரு கண்களாக விளங்கின. ஒரு பொருளை ஒற்றைக் கண்ணால்கூடப் பார்க்கலாம்; ஆனால் இரண்டு கண்களாலும் பார்ப்பதுபோல் ஆகுமா?

ஆகவே அவர் கண்ணபிரானை அடையாளம் கண்டுகொண்டு விட்டதில் அதிசயப்பட ஒன்றுமேயில்லை. அவனைத்



தெரிந்து கொள்ளாமல் போயிருந்தால்தான் ஆச்சரியப்பட்டிருக்க வேண்டும். அவருடைய கட்சிக்காரர்களிலேயே காமதேனுவைப் போன்ற முத்தையாவின் தம்பி மகனை மறப்பது என்று வந்து விட்டால், அப்புறம் அவருக்குத்தான் என்ன பெருமை இருக்கிறது?

முத்தையா உண்மையில் காமதேனுவைப் போன்றவர்தான். மலேயாவின் கோடீசுவரர்களில் ஒருவரான அவர் அள்ளி அள்ளி வழங்கினாலும் குறையாத செல்வம் படைத்தவர். அப்படிப்பட்டவருடைய ஆஸ்திகள் அனைத்தும் கண்ணபிரானையே இனிச் சேரப் போகின்றன. நினைவு வைத்திருக்க வேண்டிய ஒருவனை மறந்து விட்டு, அதற்காகப் பின்னால் வருந்தினார் என்ற பேச்சே பாரிஸ்டருக்கு வந்தது கிடையாது.

அதிலும் கண்ணபிரானை அவர் முதன் முதலில் பார்த்தபோது, அவனுக்கு முத்தையாவின் தம்பி மகன் என்ற பெருமை மட்டும்தான் இருந்தது. அத்தனை செல்வத்தையும் கட்டியாள முத்தையாவுக்குச் சொந்த மகன் ஒருவன் கானை

யைப் போல் இருந்தான்; அந்த மகனுக்கு அன்பு நிறைந்த ஒரு மனைவியும் இருந்தாள். அந்தச் சொத்துக்கள் ஒருநாள் தனக்கு வரப்போகின்றன என்று கண்ணபிரான் கனவுகூடக் கண்டிருக்க மாட்டான். அப்படிப்பட்ட நிலைமை இருந்த போதே அவர் அவனைப் புள்ளி போட்டு வைத்திருந்தது உண்மையிலேயே ஆச்சரியம்தான். அந்த உள்ளுணர்வை அவ



ருக்கு இருந்த அபூர்வ சக்தி என்றுதான் சொல்ல வேண்டும். முத்தையாவின் மகன் விமானம் ஓட்டிச் சென்றபோது விபத்தில் சிக்கி இறந்து போய் விட்டான். அப்போது அவன் மனைவி நிறைமாதக் கர்ப்பிணியாக இருந்தாள். கணவன் இறந்து விட்டான் என்ற செய்தி கேட்ட அதிர்ச்சியில் அவள் பேச்சு மூச்சற்று விழுந்து விட்டாள். அப்புறம் ஒரு வாரம் வரையில் அவளுக்கு நினைவு வரவும் இல்லை; பிறகு உயிரோடும் இருக்கவில்லை. வயிற்றுப் பிள்ளையாவது இருந்திருக்கக் கூடாதா? முத்தையாவுக்கு அதுதான் பெரிய வருத்தம். தந்தி கிடைத்ததும் விபத்து நடந்த இடத்துக்கு அவர் கண்ணபிரானையும் அழைத்துக் கொண்டு போயிருந்தார். திரும்பி வந்து பார்த்தால் இங்கே பெரும் வயிற்றெரிச்சல் காத்திருந்தது.

பாரிஸ்டரும் அவர் மனைவியும் அந்தத் துக்கத்தை விசாரிக்கத்தான் சிங்கப்பூருக்குப் போயிருந்தார்கள். இடிந்து போய் உட்கார்ந்திருந்த முத்தையாவுக்கு அது எத்தனையோ ஆறுதலாக இருந்தது. மகா விவேகியான அவர் பாரிஸ்டரைக் கட்டிக் கொண்டு, பச்சைக் குழந்தையைப் போலத் தேம்பித் தேம்பி அழுதார். முதலில் மனைவியையும் பிறகு தம்பியையும் இப்பொழுது மகனையும் அவனுடைய மருமகளையும் வயிற்றுச் சிசுவையும்கூட இழந்து நிற்கும் அவருக்கு ஆறுதல் சொல்ல யாரால்தான் முடியும்? பாரிஸ்டர் மனைவியிடம் அவர், "பெற முடியாததை யெல்லாம் பெற்றேன்; இப்பொழுது எல்லாரையும் வாரிக் கொடுத்து விட்டுத் தனிமரமாக நிற்கிறேன்!" என்று கதறி யழுதார். அந்தத் தடவை அவர்களைக் கப்பலேற்றி விடத்தான் கண்ணபிரான் வந்திருந்தான். அதற்குப் பிறகு இப்பொழுதுதான் அவனை அவர் மூன்றாம் தடவையாகப் பார்க்கிறார்.

வேலைக்காரி பொன்னி பலகாரத் தட்டைக் கொண்டு வந்து மேஜையின்மீது வைத்தாள்.

"இதெல்லாம் எனக்கு இப்பொழுது ஒன்றுமே வேண்டாம்!" என்று அவன் முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

"நாங்களும் சுத்த சைவம்தான், தம்பி! சும்மா எடுத்துக் கொள்!" என்று வேடிக்கையாக வற்புறுத்திக் கூறினார் பாரிஸ்டர்.

ஆனால் கண்ணபிரானோ முத்தையாவைப் போல் ஒட்டுதலாக இருக்க மாட்டான் என்று தோன்றியது. அவனுடைய வயதுக்குத் தகுந்த கலகலப்பு அவனிடம் காணப்படவில்லை. எதற்கும் நாசூக்கான புன்னகையே அதிகம் என்பது போல் நிறுத்திக் கொண்டான். செல்வந்தர் வீட்டுச் செல்வங்கள் ஒரு கணக்குக்கு மேல் சிரித்துப் பேசிப் பழகி விடக் கூடாது என்று எந்தக் 'கிளப்'பிலாவது கற்றுக் கொண்டு வந்திருப்பானோ என்று தோன்றியது பாரிஸ்டருக்கு.

ஒரு வகையில் வெளி நாடுகளுக்குச் செல்லும் இளைஞர்கள் வேடிக்கை, விளையாட்டுப் பேச்சுக்களிலோ விவகாரங்களிலோ கலக்காமல் உறுதியாக இருப்பது அவசியம்தான். ஆனால் நன்மை-தீமை தெரியாமல் எல்லாவற்றுக்கும் கண்களை மூடிக் கொள்வது சரியல்ல. "குதிரைக்குக் கண்ணை மறைப்பதுபோல், நாமும் கண்களை மறைத்துக் கொள்ள வேண்டியதுதான்! அதற்காக நம்முடைய பாதையைக் கூடப் பார்க்க முடியாதபடி கண்களை மறைத்துக் கொண்டு விடக் கூடாது!" என்பார் முத்தையா. அவருக்கும் இவனுக்கும்தான் எத்தனை வித்தியாசம்!

முத்தையா இன்னும்கூட இளம் வயதில் புறப்பட்டுப் போனவர்தான். ஒரே அரை வேஷ்டியுடனும் தொளதொள வென்று யாரோ போட்டுக் கொள்ளக் கொடுத்த

சட்டையுடனும்தான் குமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன் அக்கரைச் சீமைக்குக் கப்பல் ஏறினர். கஞ்சிக்கும் பஞ்சமாக ஊரிலேயே கிடந்து வதங்குவதை விட, கண்காணுத இடத்திலாவது போய் எப்படியோ பிழைத்துப் போகட்டும் என்று கண்ணில் நீர் துளிக்க, துறட்டையனுர் கோயில் சாம்பலே எடுத்து, அவருடைய நெற்றியிலே நீற்றினுள் அவருடைய தாய். முகத்தைத் திருப்பிக் கொண்டு முந்தானையால் துடைத்துக் கொண்டாள். அதற்குப் பிறகு அவர் அந்தத் தாயின் முகத்தைத் திரும்பி வந்து பார்க்கவேயில்லே.

அந்தத் தாய் துணியில் முடிந்து கொடுத்த ஒரணுவுடன் முத்தையா துணிச்சலாகக் கப்பல் ஏறி விட்டார். ரப்பர்த் தோட்டத்துக் கூலி என்ருல் என்ன என்று தெரிந்துகொள்ள முடியாத வயது. அந்த அடிமைத்தனத்தை ஒரு வருஷம் பல்லேக் கடித்துக்கொண்டு கழித்தார். அப்புறம் அங்கிருந்து தப்பிச் சென்று சிங்கப்பூருக்கே போய்ச் சேர்ந்தார். எடுபிடி வேலேகள் செய்து, வாயைக் கட்டி, வயிற்றைக்கட்டி, கடைசியில் சொந்தமாக ஒரு பசுவை வாங்கி வைத்துக் கொண்டார். தெரிந்தோ, தெரியாமலோ அதற்குத் துரதிருஷ்டம்பிடித்த தன் தாயின் நினைவாக, 'லக்ஷ்மி' என்று பெயரிட்டார். அது உண்மையிலேயே லக்ஷ்மியாகத்தான் இருந்திருக்க வேண்டும். சில வருஷங்களிலேயே ஒரு பசு இருந்த இடத்தில் பத்து சீமைப் பசுக்கள் சேர்ந்து விட்டன. ஒருவருமே வாங்கத் துணியாத உபயோகமற்ற இடலே ஏக்கருக்கு ஐம்பது வெள்ளி வீதம் கணக்குப் போட்டு, ஏழுரை ஏக்கரை அவர் தலேயில் யாரோ சுமத்தி விட்டார்கள். கஷ்டப் பட்டுச் சேர்த்த வெள்ளியை ஏமாந்து போய் வீணுக்கி விட்டதாகத்தான் முத்தையாவும் எண்ணினுர்; மற்றவர்களும் பரிகாசம் செய்தார்கள். ஆனுல் ஐந்தாறு வருஷங்களிலே ஊர் அமைப்பு மாறி விட்டது. அந்த ஏழரை ஏக்கர் நிலத்தில் ஒவ்வொரு மனேயும் நாலாயிரம் ஐயாயிரமாக மதிப்புயர்ந்து விட்டது. மாடுகளேக் கட்ட வாங்கிய பொட்டைத் திடல் நகரத்தின் முக்கிய மார்க்கெட் பகுதியாக மாறிவிட்டது. தோட்டக்கூலி முத்தையா, பால்கார முத்தையாவாகி, பணக்கார முத்தையாவாகி விட்டார். அடிமைக் கூலியாக வந்த முத்தையா மேலும் இரண்டே ஆண்டுகளில் இரண்டு ரப்பர்த் தோட்டங்களுக்கு அதிபதியாகி விட்டார். கெட்டெழுத்து முத்தையா தொட்டதெல்லாம் பொன்னுக விளேந்தது. ஊரிலிருந்த ஒரே தம்பி படிப்பதற்காக அவ்வப்போது தம் தாய்க்கு மொத்தமாகப் பணம் அனுப்பி வந்தார். அந்தத் தாய் இறந்து போனபோதுகூட அவர் தாய்நாட்டுக்குப் போகவில்லே. ஆனுல் அப்புறம் போய்த் தம்பியை அழைத்துக் கொண்டு, தாமும் அங்கேயே ஏழைப் பெண்ணுகத் தேடி மணந்து கொண்டு வந்து சேர்ந்தார். தம் மனேவியுடைய உறவினர்களுக் கெல்லாம் பணமாகவும் அனுப்பி, நிலமாகவும் வாங்கித் தந்து உதவினர். சில வருஷங்கள் கழித்து அவருக்கு ஒரு மகன் பிறந்தபோது, அவருக்கு மலேயாவிலும் சென்னேயிலும் பல வகையான ஆஸ்திகள் ஏற்பட்டிருந்தன. அந்தச் சந்தர்ப்பத்தில்தான் தம்பிக்கும் ஒரு பெண்ணேப் பார்த்துக் கல்யாணம் செய்து வைத்து, தனி ஜாகையும் அமர்த்தித் தந்தார். தோட்டங்களிலும் தொழில் துறைகளிலும் போட்ட செல்வம் இனேத்துப் பெருகி ஒரு கணக்குக்குள் அடங்கவே யில்லே. எல்லாவற்றையும் அவருடைய உடன் பிறந்த தம்பிதான் மேற்பார்வை செய்து வந்தார்.

கொஞ்ச நாட்களில் ஊருக்கு ஊர் வியாபாரக் கிளேகள் ஏற்பட்டன. தொழிலே முன்னிட்டுப் போய்த் தங்க வேண்டிய இடங்களில் எல்லாம் அவர் பங்களாக்கள் வாங்கிப் போட்டிருந்தார். சென்னேயிலே இரண்டு பங்களாக்கள் இருந்தன; வேலேக்காரர்கள் இருந்தார்கள். சென்னேயில் ஒன்றும் உதகையில் ஒன்றுமாகப் பங்களாக்கள் பேசி வாங்கும்போதுதான் பாரிஸ்டருக்கு முத்தையாவின் தொடர்பு ஏற்பட்டது. அப்போதே அவருடைய பெரிய வரவு செலவைக் கண்டு பாரிஸ்டர் பிரமித்துப் போயிருக்கிருர். எவ்வளவு இருந்தால் என்ன? எங்கே, என்ன இருக்கிறது என்று அவர் தம்பியோ மற்றவர்களோ கணக்குகளேப் பார்த்துத்தான் சொல்ல வேண்டும். ஆனுல் முத்தையாவுக்கு மட்டும் எல்லாம் வாய்க் கணக்குத்தான். சிலர் அவரை வெறும் அதிருஷ்டக்காரர் என்றுதான் எண்ணினுர்கள். பாரிஸ்டரோ அவரை ஒரு மேதை என்றும் கருதினுர்.

பள்ளிக்கூடத்தையே மிதித்தறியாத அவர் பேச்சிலே அநுபவத்தின் சுவை இருக்கும்; நூற்றுக்கு நூறு மனிதத் தன்மையும் மரியாதையும் இருக்கும்; அன்பும் பரிவும் கலந்த கனிவு இருக்கும். சிரிப்பும் கிண்டலும் இருக்கும்; சிந்தையைத் தூண்டும் கருத்துச் செறிவும் இருக்கும்.

அவர் என்ருல் அன்போடு கொண்டு வைத்த பலகாரத் தட்டைப் பாராமல் முகத்தைத் திருப்பிக் கொள்வாரா?

ஆயினும் பாரிஸ்டர் நம்பிக்கையைக் கைவிடவில்லே. "பலகாரம் எடுத்துக் கொள்ளாவிட்டால் போனுல் போகிறது. சாப்பாட்டுக்காவது கட்டாயமாக வந்து விடுங்கள், தம்பி!" என்ருர்.

"ஆகட்டும்!" என்று சொல்லி விட்டுச் சற்றைக்கெல்லாம், "கொஞ்சம் வேலே இருக்கிறது. போய்விட்டுப் பிறகு வருகிறேன்!" என்று விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டான் கண்ணபிரான்.

சொர்ணும்பாளேயும் உஷாவையும் அவனுக்கு அறிமுகப்படுத்தி வைக்கவில்லேயே

என்று பாரிஸ்டருக்கு இருந்தது. பிறகு தான் வரப் போகிறானே என்று அவர் தேற்றிக்கொண்டார்.

ஆனால் சாப்பிடும் வேளைக்கு அடையாற்றிலிருந்த அவர்களுடைய பங்களாவிலிருந்து டெலிபோன் செய்தி வந்தது. "சொல்லிவிட்டு வந்தபடி சாப்பிட வர முடியவில்லை. இன்னொரு சமயம் ஆகட்டும்!" இந்தச் செய்தி பாரிஸ்டருக்கு மிகுந்த ஏமாற்றத்தை அளித்தது.

## நான்காம் அத்தியாயம்

# புள்ளிமான்

முதன் முதலாக உண்டான அபிப்பிராயத்தை நல்லதென்றோ, சரியான அபிப்பிராயம் என்றோ எடுத்துக்கொள்ள பாரிஸ்டர் விரும்பவில்லை. கண்ணபிரான் முத்தையாவைப் போல் இல்லை என்பது உண்மைதான்; ஆனால் ஒருவரைப் போல் ஒருவர் இருக்க வேண்டும் என்று என்ன கட்டாயம்? பழகிவிட்டால் அவரைவிட இவன் இன்னும் அருமையாகக் கூட இருக்கலாம்; இல்லாவிட்டாலும் ஒன்றும் மோசமில்லை; அவனைச் சரியான வழிக்கு இழுத்துத் திருப்புவது அவருக்கு ஒரு பெரிய காரியமல்ல.

ஆகவே அவர் தம் மனைவியைப் பார்த்து, "முன்பின் பழகாததால் கூச்சப்படுகிறான். எல்லாம் போகப் போகச் சரியாகி விடும்!" என்று கூறினார். மனைவியைச் சாக்கிட்டு இப்படி ஒரு சமாதானத்தைக் கூறினாலும், கண்ணபிரானிடம் பழகுவது, புதுக் குதிரையிடம் பழகுவது போல்தான் இருக்கும் என்று அவருடைய உள்ளுணர்வு கூறியது.

"சாப்பிட வர முடியவில்லை!" என்பதற்கு அடுத்தபடியாக, "மன்னித்து விட வேண்டுகிறேன்!" என்று மரியாதைக்காவது ஒரு வார்த்தை வரும் என்று அவருடைய காது எதிர்பார்த்தது. ஆனால் 'டக்' கென்று ரிஸீவரைக் கீழே வைத்து விட்ட ஓசைதான் கேட்டது.

'பாவம்; அப்படி என்ன வயதாகிவிட்டது? அநுபவம், வெளிப் பழக்கம் எல்லாம் வேண்டாமா?' என்று அவர் தமக்குத் தாமே கூறிக் கொண்டார்.

"உஷாவின் படத்தை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான் என்றீர்களே, அதற்குமேல் ஒன்றுமே சொல்லவில்லையா?" என்றாள் சொர்ணம்பாள்.

"இல்லை."

"நன்றாய் இருக்கிறது; நன்றாய் இல்லை என்று எதுவுமே பேச்சு இல்லையாக்கும்!"

பாரிஸ்டர் பெண்களின் எண்ணம் போகிற விதத்தைக் கண்டு பெருமூச்சு விட்டார். இதற்கெல்லாம் பதில் சொல்லிக்கொண்டிருக்க அலுப்பாக இருந்தது.

"ஆள் கொஞ்சம் அழுத்தம்தான் போலிருக்கிறது!"

"ம் ... அப்படி ஒன்றும் ... இருக்கட்டும்; போகப் போகத்தானே தெரியும்?"

"குணம் எப்படியிருந்தாலும், குருட்டு அதிர்ஷ்டம் என்னமோ இருக்கிறது! பாடுபட்டுத் தேடி வைக்க, யாருக்கோ அது போய்ச் சேருவது என்றால், குணம் இருந்து என்ன? இல்லாவிட்டால்தான் என்ன?" என்றாள் சொர்ணம்பாள்.

"அதற்குள் அவசரப்பட்டு ஒரு முடிவு கட்டிவிடாதே. எப்படியும் இன்று இரவு சாப்பிடுவதற்கு வரச் சொல்கிறேன், பாரேன்!" என்று சவால் விடுவதுபோல் கூறினார் பாரிஸ்டர்.

சொர்ணம்பாள் பரமசிவத்துக்கு எப்போதுமே தன் கணவருடைய சபதத்தில் அசைக்க முடியாத நம்பிக்கை உண்டு. ஒன்றைச் சொன்னால், சொன்னபடி அதைச் செய்து முடிக்கும் திறமை அவருக்கு இருந்தது. அதனால்தான் அவருடைய வாயால் வேறு ஒரு சபதத்தை வரவழைக்க அவள் எண்ணினாள். அதற்காகவே சுற்றி வளைத்து அசட்டுக் கேள்விகளாகக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

அவளுடைய எண்ணத்தைக் கிட்டத்தட்ட பரமசிவமும் அறிவார். முத்தையாவின் அத்தனை செல்வமும் கண்ணபிரானுக்குப் போய்ச் சேரப் போவது அவளுக்கு அநியாயமாகத் தோன்றியது. அவன் அவருடைய சொந்தத் தம்பி மகன் தான் என்றாலும், வயிற்றில் பிறந்த மகனைப் போல் அவ்வளவையும் அடைவது அவளுக்கு வயிற்றெரிச்சலாகத்தான் இருந்தது. எத்தனை ஆண்டுகளாகப் பாரிஸ்டர் அவருடைய குடும்ப ஆலோசகராக இருந்து வந்திருக்கிறார்! எத்தனை அரிய யோசனைகளையெல்லாம் அவ்வப்போது சொல்லியிருக்கிறார்! பாரிஸ்டருடைய சட்ட ஞானத்தின் உதவிமட்டும் இல்லாமல் இருந்திருந்தால் இத்தனை செல்வத்தையும் சேதமாகாமல் கட்டி வளர்த்திருக்க முடியுமா? அதை கேற்று முளைத்த கண்ணபிரான் நோகாமல் அடைவது என்றால், பல ஆண்டுகளாக உண்மையிலேயே பாடுபட்ட பாரிஸ்டருக்கு ஒரு பங்கு வரக்கூடாதா? எல்லாம் முத்தையா தேடிய செல்வம்தானே! அவர் விரும்பினால் யாருக்கு வேண்டுமானாலும் பிரித்துக் கொடுக்கலாமே!

ஆனால் இந்த ஆசையை இவ்வளவு வெளிப்படையாகச் சொல்ல அவளுக்கு மனம் துணியவில்லை. "உனக்கு இருப்பது போதாதா?" என்று பாரிஸ்டர் பரமசிவம் முகத்தில் அடிப்பது போல் கேட்டு விடுவார். முன்பு ஒரு சமயம் அப்படிக் கேட்டிருக்கிறார். ஆனால் இப்போது?

இப்போது அவருடைய கருத்து சிறிது மாறியிருக்கும் என்று அவன் நம்பினன். மாறியிரா விட்டால் மாற்ற வேண்டும் என்று கூட அவன் வந்து விட்டான். காலையில் மிஸஸ் தேம்ஸிடம் போய்விட்டு வந்ததிலிருந்து எல்லாமே பதினைந்து வருஷங்களுக்குப் பிறகு நடப்பது போலிருந்தது அவனுக்கு. இதை உணர்ந்துதான் பாரிஸ்டர் இதற்கு ஒரு வழியைக் கண்டுபிடித்திருந்தார். அதன்படி நடந்தால் முத்தையாவின் சொத்தில் தனியாகப் பங்கு எதற்காக? எல்லாமே கண்ணபிரானிடம் இருக்கலாம். அவனிடம் இருந்தாலும் அவ்வளவும் உஷாவுடையதாகத்தான் ஆகும். உஷாவை அவனுக்கு மணம் செய்து வைத்து விடுவதைத் தவிர வேறு சிறந்த வழி ஏது?

கண்ணபிரானுக்கு உஷா என்ன கசந்து விடுவாளோ? இதை மனத்தில் வைத்துக் கொண்டுதான், "உஷாவின் படத்தைக் கண்ணபிரான் கண் கொட்டாமல் பார்த்தான்!" என்று சொல்லி வைத்தார்.

பத்து வயதுகூட நிரம்பாத உஷாவின் கல்யாண விஷயத்தை இப்போதே முடிவு செய்துவிட வேண்டும் என்றால் முடியுமா? அப்படி அவசரப்படும்படி இப்போது என்ன வந்து விட்டது?

முத்தையாவுக்கு வயதாகி விட்டது உண்மைதான். அதனால் அவரை எதிர்பார்த்துக் கொண்டிருப்பது கூட அவ்வளவு சரியில்லை. தனியாக வந்திருக்கும் கண்ணபிரானைச் சரியான வழிக்குக் கொண்டுவருவது இனித் தம் பொறுப்புத்தான் என்று அவர் எண்ணினர். அது அவருக்கு ஒரு பெரிய காரியமல்ல. இளைஞர்களை அவர்கள் போகும் வழியில் விட்டுத்தான் இருப்ப வேண்டும். வந்த அன்றைக்கே வெகு நாட்கள் பழகிய முத்தையாவோடு அவனை ஒப்பிட்டுப் பார்த்துச் சங்கடப்படலாமா?

உஷா கான்வென்டுக்குப் போயிருந்தாள். ஸ்ரீமதி சொர்ணம்பாள் சாப்பிட்ட சாதத்தையெல்லாம் வாந்தி யெடுத்து விட்டு, களைப்பு மிகுதியால் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தாள். பாரிஸ்டருக்கு அன்று கோர்ட்டில் வேலையில்லை; ஆயினும் அவர் குப்பனை அழைத்து, வண்டியை எடுத்து வரச் சொன்னர்.

"கோர்ட்டுக்குத்தானே?" என்று சந்தேகத்துடனேயே கேட்டான் குப்பன்.

"இல்லை; அடையாற்றுப் பங்களாவுக்கு!" என்றார் பாரிஸ்டர்.

கதீட்ரலிலிருந்து புறப்பட்ட வண்டி மௌண்ட்ரோடு வழியாகச் சென்று, அடையாறு செல்லும் சாலையில் வேகமாகத் திரும்பியது.

குப்பன் டிரைவருக்கு டிரைவராகவும், வீட்டுக்கு வேலைக்காரனுகவும், பாரிஸ்டருக்கே சில சமயம் யோசனை சொல்லித் தரும் ஆசானுகவும் பலவித நிலைகளில் பணி புரிந்து வந்தான்.

"ஏண்டா, குப்பா! காலையில் குழந்தை அழுது விட்டதோ?" என்று பேசத் தொடங்கினர் பாரிஸ்டர்.

"ஆமாங்க......விட்டுட்டுப் போகாத புள்ளெயெ விட்டுட்டுப் போனு...அதுவும் அம்மாளுக்கு என்னமோ ஏதோன்னு அது அப்படியே கலங்கிப் போயிட்டுது!" என்றான் குப்பன்.

"உனக்கு விஷயம் என்னவென்று தெரியுமோ?"

"தெரியுங்க. அதைக் கேட்டதிலிருந்து நெஞ்சு வெடந்து துன்னுதுங்க......உஷா கிட்டே உண்மையைச் சொன்னதும் அது என்னமாக் குதிச்சுது, தெரியுமா? நெத்தியிலே பட்ட காயத்தைக் கூட மறந்துட்டு அப்படிக் குதிச்சுது!"

பெருமூச்சு விட்டார் பாரிஸ்டர்.

குப்பன் பாதையைப் பார்ப்பதை விட்டு விட்டு, பக்கவாட்டிலே திரும்பி அவரைக் கடைக்கண்ணால் கவனித்தான்.

அறிவைக் கொண்டு சதுரங்கம் ஆடும் அந்த வழக்கறிஞர் மனித உணர்ச்சியே மரத்தவர் என்றுதான் குப்பன் எண்ணியிருந்தான். ஆனல் பொங்கி வரும் உணர்ச்சியின் பெருக்கைத் தடுக்க மாட்டாமல் அவருடைய உதடுகள் இலேசாகத் துடித்ததைக் கண்டு அவன் கண்களை அவனுல் நம்பவே முடியவில்லை. இத்தனை ஆண்டுகளில் பாரிஸ்டர் கண்கள் கலங்கியதை அவன் இன்றுதான் கண்டான்.

அதற்கு மேல் அவனும் பேசவில்லை; அவரும் பேச்சுக் கொடுக்கவில்லை.

சோலைக்கு நடுவே அமைந்த பங்களா ஒன்றினுள் வண்டி நுழைந்தது. 'போர்டிகோ'வில் வந்து நின்ற வண்டியை நோக்கித் தோட்டக்காரன் ஓடி வந்தான். பாரிஸ்டரைப் பார்த்துப் பணிவோடு கும்பிடு போட்டு, "சின்ன எசமான் இல்லீங்களே!" என்றான்.

"எங்கே?"

"காலையில் கிளம்பிப் போனவருதான்; இன்னும் வரலே!"

அவன் சொல்லி வாய் மூடுவதற்குள்ளாகப் பின்னால் காலையில் பார்த்த வண்டி வந்து ஓசைப்படாமல் நின்றது. பாரிஸ்டர் பரமசிவம் அதை எட்டிப் பார்த்தார். புள்ளி மானைப் போல் ஏந்திழைப் பாவை ஒருத்தி அதிலிருந்து விரைவாக இறங்கினள். அவளைத் தொடர்ந்து கண்ணபிரானும் இறங்கி வந்தான். பாரிஸ்டரை அங்கே சற்றும் எதிர்பாராத அவன் முகம் சட்டெனச் சுண்டியது.

"போன் செய்தேனே!"

"சொன்னபடி சாப்பிட வரமுடியவில்லை என்றுதானே?"

"ஆமாம்; உள்ளே வரலாமே!" என்று திரும்பிப் பார்த்து விட்டுச் சிறிது தயக்கத்தோடு அழைத்தான் கண்ணபிரான்.

பாரிஸ்டர் புன்னகை அரும்ப, "இல்லை; கொஞ்சம் வேலை இருக்கிறது. அப்புறம் ஆகட்டும்!" என்றார்.

குப்பன் அந்த மிடுக்கை விட்டுக் கொடுக்காதவன் போல் வண்டியை முடுக்கினன். (தொடரும்)



புது தில்லி திரு எச். ஏ. சுவாமி அவர்களின் புதல்வர் திரு ஹரிஹரனுக்கும் செள. சுந்தரிக் கும் நாமக்கல்லில் விவாகம் நடைபெற்றது.



பாலவிநாயகர் பஸ் சர்வீஸ் உரிமையாளர் திரு எம். வேணுகோபால் முதலியார் புதல்வர் திரு சுப்பிரமணியத்துக்கும் செள. ஜயலக்ஷ் மிக்கும் விமரிசையாகத் திருமணம் நடந்தது.

# வாழ்க



இம்பீரியல் புகையிலை கம்பெனியைச் சேர்ந்த திரு எஸ். எஸ். வரதனுக்கும் செள. ஜானகிக் கும் திருமணம் நடந்தேறியது.



ஹெல்த் இன்ஸ்பெக்டர் திரு ந. கோவிந்த ராஜுலுவுக்கும் செள. உமாராணிக்கும் விவா கம் சிறப்பாக நடைபெற்றது.



திரு வி. சுப்பிரமணிய பிள்ளை அவர்களின் புதல்வி செள. தனலக்ஷ்மிக்கும் திரு ஏ. இரத்தின வேலுக்கும் திருமணம் நடந்தது.



திரு ஏ. எஸ். பாரதன் அவர்களின் புதல்வர் திரு ராஜுபாரதன் செள. ஸ்ரீஜானகிப் பங்க ஜத்தை மணம் புரிந்து கொண்டார்.



மணி டியுட்டோரியல் கல்லூரி பிரின்ஸ்பால் திரு என். எஸ். மணி அவர்களின் புதல்வி சௌ பட்டம்மாளுக்கும் திரு எம் பி. வெங்கட ராமனுக்கும் விவாகம் நடைபெற்றது.



கும்பகோணம் பத்திரிகை ஏஜண்டு திரு கே. ராகவாச்சாரியாரின் புதல்வி சௌ. கமலாவுக் கும் ஸ்ரீ ராமவரதனுக்கும் திருமணம் சிறப் பாக நடைபெற்றது.

# மணமக்கள்



திரு ஜயராமன் அவர்களின் சகோதரி சௌ. பத்மாவுக்கும் திரு நாராயணனுக்கும் விவாகம் சிறப்பாக நடந்தேறியது.



கொச்சின் ஷாவாலஸ் கம்பெனியைச் சேர்ந்த திரு கே. எஸ். சுப்பிரமணியம் அவர்கள் சௌ. சுவர்ணத்தை மணம் செய்துகொண்டார்.



கிளாரினட் வித்வான் திரு என். ராதா கிருஷ்ண நாயுடு அவர்களின் புதல்வி சௌ. ஆண்டாளுக்கும் திரு பாண்டுரங்கனுக்கும் விவாகம் நடைபெற்றது.



கிளாரினட் வித்வான் திரு என். ராதா கிருஷ்ண நாயுடு அவர்களின் புதல்வி சௌ. லக்ஷ்மிக்கும் திரு ஞானசேகரனுக்கும் விமரிசை யாகத் திருமணம் நடந்தேறியது.

பாண்டிமாதேவி

நா. பார்த்தசாரதி

அத்தியாயம் 2

## வெள்ளணி விழா

குமார பாண்டியன் இராசசிம்மனும், சக்க சேனாபதியும், ஏறி உட்கார்ந்திருந்த மரக்கிளை பூகம்பம் ஏற்பட்டு ஆடுவது போல் ஆடியது! ஒரு யானைக் கூட்டமே சுற்றி மொய்த்துக் கொண்டு ஆட்டினால் மரம் பிழைக்குமா? அவர்கள் ஏறக்குறையத் தங்கள் உயிரின்மேல் வைத்திருந்த முழு நம்பிக்கையையும் இழக்கத் தொடங்கிய சமயத்தில்தான் விசிதபுரத்துச் சாலையில் அந்த ஒளி உதயமாயிற்று.

கையில் தீபங்களோடு ஒரே மாதிரி மஞ்சள் உடை அணிந்த பௌத்த மதத் துறவிகளின் பெருங் கூட்டமொன்று அந்தச் சாலையிலிருந்து வந்து கொண்டிருந்தது. ஒன்றுக்கொன்று உயர்வு தாழ்வு ஒலி வேறுபாடின்றி ஒரேவிதமான தொனியில் அந்தத் துறவிகள் சேர்ந்து பாடிக்கொண்டு வந்த பௌத்த சமய சுலோகங்கள் அந்தக் காடு முழுவதும் சாந்தி உணர்வை அள்ளிப் பரப்புவது போலிருந்தது. அமைதி, அமைதி என்று பெருங் குரலெடுத்து முழங்கிய அந்த இனிமை முழக்கம் கருணைமயமாக ஒலித்தது. உயிரினங்களின் வெறித்தனங்களையெல்லாம் அடக்கிக் கட்டுப்படுத்தித் தன் வசமிழக்கச் செய்து முடிவற்ற பேரமைதியில் ஆழ்த்தும் ஆற்றல் அந்த இன்னொலியில் இருந்தது போலும்.

“ஐயோ! பாவம்; இத்தனை பிட்சுக்களும் வந்து இந்த யானைக் கூட்டத்தில் மாட்டிக்கொண்டு திண்டாடப் போகிறார்களே” என்று மெல்லிய குரலில் இராசசிம்மன் சக்க சேனாபதியின் காதருகில் சொன்னான். சக்கசேனாபதி அதைக் கேட்டுப் பலமாகச் சிரித்தார்.

“ஏன் சிரிக்கிறீர்கள்?”

“பார்த்துக்கொண்டே இருங்கள்; என் சிரிப்பின் காரணம் உங்களுக்குப் புரியும்!”

விளக்கொளியும், கீத ஒலியும், பிட்சுக்களின் கூட்டமும், அருகில் நெருங்க, நெருங்க, அங்கே ஒரு அற்புதமான மாறுதல் ஏற்பட்டது. யானைகளின் பிளிறல்கள் சிறிது சிறிதாகக் குறைந்து முடிவில் ஒலியற்று ஓய்ந்தன. மரங்கள் ஆட்டப் படவில்லை; கிளைகள் முறிக்கப்படவில்லை. ஒலி ஓசைகளையெல்லாம் அடக்கிக் கொண்டு நிற்கும் ஒரு பேரமைதி தானாகத் திடீரென்று அந்தக் காட்டின்மேல் கவிவது போல் இருந்தது. குமாரபாண்டியன் வியப்புடன் கீழே பார்த்தான். மந்தைமந்தையாகச் சாலையை அடைத்துக் கொண்டு நின்ற யானைக் கூட்டம் மெதுவாக அடங்கி ஒடுங்கி விலகிக் காட்டுக்குள் புகுந்து மறைவது தெரிந்தது. யானைகள் நடந்து போவதற்குரிய முரட்டுத்தனமும், கூப்பாடும் சிறிதாவது இருக்க வேண்டுமே? இருளில் வாயும், உணர்வுமில்லாத கருங்குன்றுகள் சில எதன் போக்கிலே கலைப்பட்டு விலகிச் செல்வது போல் மெல்ல மறைந்தது யானைக் கூட்டம். புத்த பிட்சுக்கள் அந்த இடத்தை அணுகும் போது சாலை வெறிச்சோடி, தூய்மையாக இருந்தது.

“சக்க சேனாபதி! இது என்ன விந்தை?” என்று வியப்பு மேலிட்ட குரலில் கேட்டான் இராசசிம்மன்.

“விந்தையுமல்ல; தந்திரமுமல்ல! புலன் உணர்வுகளை வென்ற தூய்மைக்கு உயிர்களின் மரியாதை. அன்பும், கருணையும் நிறைந்த குரல்கள் ஆயிரக்கணக்கில் ஒலிக்கும்போது அந்த ஒலி வெள்ளத்தில் மிருகத்தன்மை தேய்ந்து நெகிழ்ந்து விடுகிறது. தவத்துக்கு மட்டுமே உள்ள வலிமை இது.”



"ஆச்சரியமான நிகழ்ச்சிதான்!"

"இப்போதே நாமும் கீழே இறங்கி இந்தப் புத்த பிட்சுக்களைத் தொடர்ந்தே அனுராதபுரம் போய் விடுவது நல்லது. இவர்கள்கூட அரசருடைய நாண்மங்கலத்துக்காக அனுராதபுரம் போகிறவர்களாகத்தான் இருக்க வேண்டும். வாருங்கள். இறங்கி விசாரிக்கலாம்."

சக்க சேனாபதியும், இராசசிம்மனும் கீழே இறங்கினார்கள். அவர்களுடைய குதிரைகள் மரத்தின் கீழிருந்து சிறிது தொலைவு தள்ளி மூலைக் கொன்றாக நின்று கொண்டிருந்தன. புத்தபிட்சுக்கள் அவர்களிருவரும் நின்று கொண்டிருந்த இடத்துக்கு மிக அருகில் வந்து விட்டனர். சாலையில் நெடுந் தூரத்துக்குத் தெரிந்த பிட்சுக்களின் வரிசையைப் பார்த்தபோது ஆயிரம் பேருக்குக் குறையாமல் இருக்கும் போல் தோன்றியது.

"இளவரசே! இவர்கள் எல்லோரும் விசிதபுரத்து மகா பௌத்த சங்கத்தைச் சேர்ந்த பிட்சுக்கள். இதோ; கூட்டத்தில் எல்லோருக்கும் முன்னால் கையில் கவடியோடு நடந்து வருகிறாரே, இவர்தான் மகா பௌத்த சங்கத்தின் தலைவர் தத்துவ சேன அடிகள். வாருங்கள்...! உங்களை அவருக்கு அறிமுகப்படுத்தி வைக்கிறேன்"— குமார பாண்டியனின் கையைப் பற்றி அழைத்துக் கொண்டு பிட்சுக்களின் கூட்டத்துக்கு முன்னால் சென்றார் சக்க சேனாபதி.

மரத்தடி இருட்டிலிருந்து யாரோ இருவர் வேகமாகத் தங்களை நோக்கி வந்து கொண்டிருப்பதைப் பார்த்ததும், சாலையில் முன்னேறிக் கொண்டிருந்த பிட்சுக்களின் கூட்டம் தயங்கி நின்றது. சக்கசேனாபதியும், குமாரபாண்டியனும், தத்துவசேன அடிகளுக்கு முன்னால்போய் வணங்கி நின்றார்கள்.

"நான் என் கண்களுக்கு முன்னால் காண்பது உண்மைதானா? விடிந்தால் அரசருடைய நாண்மங்கல விழாவுக்கான ஏற்பாடுகளைக் கவனிக்க வேண்டிய ஈழ நாட்டுப் படைத் தலைவர் காட்டில் காட்சியளிக்கிறாரே?"— என்று கலகலவென்று சிரித்தவாறே சக்கசேனாபதியை நோக்கிக் கேட்டார் பிட்சுக்களின் தலைவரான தத்துவசேன அடிகள்.

"அடிகளே! கடந்த சில நாட்களாகத் தென்பாண்டி நாட்டில் சுற்றிக் கொண்டு இருந்துவிட்டு இன்றுதான் இலங்கை மண்ணிலேயே கால் வைத்தேன். இதோ என் அருகே நிற்கும் இளைஞர் குமார பாண்டியர் இராசசிம்மன் ஆவார்" என்று தொடங்கிக் காட்டில் வந்து கொண்டிருக்கும்போது யானைகள் குறுக்கிட்டதால் தங்களுக்கு ஏற்பட்ட துன்பம் முதலாக எல்லாவற்றையும் கூறினார் சக்கசேனாபதி. குமாரபாண்டியனை அன்புடன் அருகில் அழைத்துத் தட்டிக் கொடுத்து ஆசி கூறினார் அடிகள். அவருடைய கருணை நிறைந்த மலர்ந்த முகத்தைப் பார்க்கும்போது அனுராதபுரத்துக் காட்டில் அங்கங்கே கண்ட புத்தர் சிலைகளின் முகங்களையெல்லாம் ஒன்றுசேர்த்துப் பார்ப்பதுபோலிருந்தது குமாரபாண்டியனுக்கு.

"பரவாயில்லை! நீங்கள் இருவரும் விரும்பினால் எங்களுடனேயே அனுராதபுரத்துக்கு வரலாம். நாண்மங்கல விழாவுக்காக நாங்களும் அனுராதபுரம்தான் போகிறோம். கூட்டமாகப் போகும்போது வனவிலங்குகளின் தொல்லை இருக்காது!" என்று கூறி விட்டுச் சிரித்தார் அவர். அந்தத் துறவியின் மலர்ந்த முகத்தில் சிரிப்புத் தோன்றி மறையும் அந்த ஒரு கணம் எதிரே இருந்து காண்பவர்களின் கண்களில் ஒரு புனிதமான ஒளியைக் காட்டி மறைந்தது. தூய வெள்ளை நிறத்துப் பூ ஒன்று மலர்ந்த வேகத்தில் மறைந்து விடுவது போன்றிருந்தது, அந்தச் சிரிப்பு. இராசசிம்மன் கையில் இருந்த வலம்புரிச் சங்கைச் சற்று வியப்புடன் பார்த்தார் அடிகள்.

"இது நல்ல பயன்களைத் தரும் உயர்ந்த சாதி வலம்புரிச் சங்காயிற்றே! உங்களுக்கு எங்கே கிடைத்ததோ?"— என்று குமார பாண்டியனை நோக்கிக் கேட்டார் அவர். அவன் துறவிக்கு மறுமொழி சொல்லத் தயங்கிக் கொண்டே சக்க சேனாபதியின் முகத்தைப் பார்த்தான்.

"அடிகளே! குமார பாண்டியர் இந்தச் சங்கின்மேல் மிகவும் ஆசைப்பட்டு இரண்டாயிரம் பொற்கழஞ்சு



களை வாரிக் கொடுத்து இதை வாங்கியிருக்கிறார். யானைக் கூட்டத்துக்குப் பயந்து கொண்டு மரத்தில் ஏறும்போதுகூட இதைக் கீழே போட்டுவிட்டு ஏற மனம் வரவில்லை இவருக்கு. இதையும்இடுப்பில்கட்டித் தொங்க விட்டுக் கொண்டு ஏறினாரே, பார்க்கலாம்!" என்று பிட்சுக்களின் தலைவருக்கு மறுமொழி கூறிவிட்டு ஓரக் கண்களால் குறும்புத்தனமாகக் குமார பாண்டியனைப் பார்த்தார் சக்கசேனாபதி. இராசசிம்மன் அந்தப் பார்வைக்கு நாணி எங்கோ நோக்குவது போல் தலையைக் குனிந்தான். குதிரைகளை அவரவர் பக்கத்தில் நடத்திச் செலுத்திக்கொண்டே அவர்களும் பிட்சுக்களோடு பயணத்தைத் தொடர்ந்தார்கள். பிட்சுக்களின் பிரயாணக் காலத்தில் பாடிக் கொண்டு சென்ற கீதங்களை அவர்களும் சேர்ந்து பாடினார்கள். அருள் நிறைந்த மனிதர்களோடு நடந்து சென்ற அந்தப் பயணத்தில் பொழுது கழிந்ததே தெரியவில்லை.

கிழக்கு வெளுக்கத் தொடங்கும் புலர் காலை நேரத்தில் அவர்கள் அனுராதபுரத்துக்



குள் நுழைந்தார்கள். அந்தப் பெரும் நகரம்தான் அன்றைக்கு வைகறையிலே எவ்வளவு கோலாகலமாக இருக்கிறது! எங்கு பார்த்தாலும் புது மணல் பரப்பிய அலங்காரப் பந்தல்கள். வாழையும், பாளையும், கமுகும், மாவிலையும் கட்டிய திருத்தோரணங்கள். செவிகள் நிறைய இடைவிடாமல் கேட்கும் மங்கல வாத்தியங்களின் இனிய ஒலிகள். நகரம் முழுவதும் பூக்களின் நறுமணமும் அகிற்புகை வாசனையும் பரவின. தெருக்களெல்லாம் ஒரே கூட்டம். முகபடாம் அணிந்த யானைகள், நன்றாகச் சிங்காரம் செய்து கொண்ட பெண்கள், குழந்தைகள், ஆண்கள், தாம் அணிந்திருக்கும் மஞ்சள் நிற ஆடையின் காரணமாக அவ்வளவு கூட்டத்திலும் தனியாகத் தெரியும் பிட்சுக்கள் - எல்லாக் காட்சிகளும் சேர்ந்து கொண்டு அந்த ஊரை அன்றைக்குக் கந்தர்வ நகரமாக மாற்றியிருந்தன.

பௌத்த விஹாரங்களிலெல்லாம் ஒளிச் சுடர்கள் பூத்தது போல் தீபாலங்காரம் செய்திருந்தார்கள். பிட்சுக்களின் கீத ஒலிகள் 'அரசருக்கு நீண்ட ஆயுளைக் கொடுக்குமாறு' வேண்டிக் கொண்டிருந்தன. தெரு ஓரங்களிலும், பௌத்த விஹாரங்களுக்கு அருகிலும், வண்ணக் காடுகள் முளைத்துப் படர்ந்து, மலர்ந்தது போல் பூக்களை மலைமலையாகக் குவித்திருந்தார்கள். பொன் நிற உடலும் மின்னென இடையும், புன்னகை இதழ்களும் அன்ன நடையுமாகத் தேவலோகத்துக் காட்டிய சுந்தரிகளைப்போல் இளம் பெண்கள் இரண்டு உள்ளங் கைகளிலும் மலர்களை ஏந்திக்கொண்டு புத்தர்பெருமானை வழிபடச் சென்று கொண்டிருந்தார்கள்.

அக நகரத்துக்குள் நுழையும் எல்லை வந்தவுடனே பௌத்தத் துறவிகள் விடை பெற்றுக்கொண்டு சென்றார்கள். அவர்களுடைய மடம் புறநகரத்தில் இருந்ததால் அங்கே போய் நீராடல் முதலிய காலைக் கடன்களை முடித்துக் கொண்டு அதன் பின் அரசரைக் காண வருவதாகக் கூறிச் சென்றார் தத்துவசேன அடிகள். குமார பாண்டியரும், சக்கசேனாபதியும், தங்கள் குதிரைகளில் ஏறிக் கொண்டு அரசரைக் காண விரைந்தார்கள். வீதிகளில் கூட்டமாக இருந்தவர்களில் அடையாளம் புரிந்து கொண்டு சிலரும், புரிந்து கொள்ளாமற் சிலரும், குதிரையில் செல்லும் அவர்களை வியப்போடு எதிரிட்டு நோக்கினார்கள். நன்றாக ஒளி பரவாத அந்த மெல்லிருள் நேரத்தில் நகரத்தின் அலங்கார ஒளிகள் அங்கங்கே இருந்த ஏரிகளின் நீர்ப் பரப்பில் பிரதிபலித்தன. நகரின் கிழக்கே தொலைவில் மிஹிந்தலைக் குன்றத்தின் உச்சியில் பெரிதாக எரிந்து கொண்டிருந்த சோதியைக் காணும் போது குமார பாண்டியனுக்கு ஏதேதோ முன் நினைவுகள் உண்டாயின. பழைமையான காலத்தின் சுவடுகளும், கலைச் சுவடுகளும் படிந்த பௌத்த நாகரிகத்தின் கம்பீரத்தைக் காட்டும் அந்த நகரத்தின் வீதிகளில் குதிரையில் சென்ற போது சோர்வை விரட்டும் உற்சாகமும், சுறுசுறுப்பும் வந்து விட்டாற் போலிருந்தது இராசசிம்மனுக்கு.

அவர்களுடைய குதிரைகள் அரச மாளிகையின் அண்மையில் திரும்பிய போது முற்றிலும் யானைத் தந்தத்தினால் இழைத்துச் சித்திர வேலைப்பாடுகள் செய்யப்பட்ட அழகிய பல்லக்கு ஒன்று எதிரே வந்தது. பூம்பட்டுத் திரையை விலக்கிக் கொண்டு அந்தப் பல்லக்கிலிருந்து ஒரு செந்தாமரை முகம் வெண்முல்லைச் சிரிப்போடு கருங்குவளைக் கண்களை விழித்துக் குமார பாண்டியனைப் பார்த்தது. "அடேடே! 'கனகமாலை'யல்லவா? நீ எப்போது இவ்வளவு பெரிய பெண்ணாக வளர்ந்தாய்?" என்று பல்லக்கிலிருந்து தலைநீட்டிய அந்தப் பெண்ணை விசாரித்துக் கொண்டே குதிரையை நிறுத்திக் கீழே குதித்தான் இராசசிம்மன்.

"ஓ! இளவரசி பௌத்த விஹாரத்துக்கு வழிபாடு செய்வதற்குப் புறப்பட்டு விட்டாற் போலிருக்கிறது" என்று புன் சிரிப்புடன் அந்தப் பெண்ணை நோக்கிக் கூறியவாறே சக்கசேனாபதியும் கீழே இறங்கினார்.

காணும் கண்களை மயங்கி அறிவிழக்கச் செய்யும் அபூர்வ எழில் நிறைந்த அந்த இளம் பெண், மேட்டிலிருந்து பள்ளத்துக்குத் தாவும் புள்ளி மானைப் போல் பல்லக்கிலிருந்து துள்ளிக் குதித்துக் கீழே இறங்கினாள். அவள் கையில் ஒரு பூக்கூடை இருந்தது. பனித்துளி நீங்காத புது மலர்ச்சியோடு கூடிய தாமரைப் பூக்கள் அந்தக் கூடையில் நிறைந்திருந்தன. நிலவின் குளிர்ச்சியும், கதிரின் ஒளியும், பூவின் மலர்ச்சியும், கருவண்டின் துறுதுறுப்பும் பொருந்திய தன் காவிய நயனங்களால் தலையை ஒரு பக்கத்தில் நளினமாகச் சாய்த்துக் குமாரபாண்டியனை நோக்கி முறுவல் பூத்தாள் அந்தப் பெண். சிவந்த வாயிதழ்களுக்கு நடுவே வரிசையாக முல்லை மலர்ந்தது. அந்தச் சிரிப்பில், அந்தப் பார்வையில், இங்கிதமான நளினத் தலையசைப்பில், இளம் பெண்ணுக்கே உரிய நாணத்தின் கனிவு துடித்தது.

"சக்கசேனாபதி! காசிப மன்னரின் பெண் கனகமாலைதானா என் முன்னே நிற்கிறாள்? இவ்வளவு நாணமும், வெட்கமும் வாய்திறந்து பேச முடியாத கூச்சமும், இவளுக்கு எங்கிருந்து வந்தன?" என்று கேட்டான் குமாரபாண்டியன்.

"சேனாபதித் தாத்தா! குமாரபாண்டியருக்காக அரசர் அரண்மனையில் காத்துக் கொண்டிருக்கிறார். விரைவாக அவரை அழைத்துக் கொண்டு செல்லுங்கள்" என்று குமாரபாண்டியனின் முகத்தை நேருக்கு நேர் பார்த்துக் கொண்டு பேச



வெட்கப்படுகிறவளைப் போல் சக்கசேனபதியிடம் கூறினாள் கனகமாலை.

மதமதவென்று வளர்ந்து கனிந்து நிற்கும் அந்தப் பெண்மையின் செழிப்பு இராசசிம்மனின் கண்களைக் கூசச் செய்தது. தன் கையிலிருந்த பூக்கூடையை அவர்கள் இருவருடைய கையிலும் கொடுத்துத் திருப்பி வாங்கிக் கொண்டாள் அவள். கோவிலுக்குப் புறப்பட்டுச் செல்லும்போது எதிரே தங்களுக்கு வேண்டிய மனிதர்களைச் சந்தித்தால் பூக்களை அவர்கள் கையில் கொடுத்துத் திருப்பி வாங்கிக் கொள்வது ஒரு மரியாதையான வழக்கம். குமார பாண்டியன் பூக் கூடையைக் கையில் வாங்கிக் கொண்டு திருப்பிக் கொடுப்பதற்கு முன் ஒரு குறும்பு செய்தான்.

"கனகமாலை! இந்த நாண நாடகங்களெல்லாம் என்னிடம் வேண்டாம். நான் உனக்கு அந்நியனில்லை. என்னிடம் வாய் திறந்து பேசினாலொழிய, கூடை திரும்பக் கிடைக்காது" என்றான்.

"ஆகா! அதற்கென்ன? இப்போது பூக்கூடையைத் திருப்பிக் கொடுங்கள். கோவிலுக்குப் போய்விட்டு அரண்மனைக்குத் திரும்பியதும் உங்களிடம் வட்டியும் முதலுமாகப் பேசித் தீர்த்து விடுகிறேன்" என்று தலையைக் குனிந்து கொண்டு வெட்கத்தோடு பதில் கூறினாள் அவள். குமார பாண்டியன் சிரித்துக்கொண்டே பூக் கூடையை அவளிடம் திருப்பிக் கொடுத்தான். அவள் துள்ளிக் குதித்துப் பல்லக்கில் ஏறி உட்கார்ந்து கொண்டாள். பல்லக்குப் புறப்பட்டது. அவர்கள் குதிரைகளும் அரச மாளிகையை நோக்கி முன்னேறின. சக்கசேனபதி இராசசிம்மனை நோக்கிக் கேட்டார்: "இளவரசே! நீங்கள் முதன் முறையாக இலங்கைக்கு வந்திருந்தபோது இந்தப் பெண்ணுக்குச் சிறிது காலம் தமிழ் இலக்கியங்களைக் கற்பித்தீர்களே, நினைவிருக்கிறதா?"

"நன்றாக நினைவிருக்கிறது! ஆனால் இவ்வளவு மாறுதலை எதிர்பார்க்கவில்லை" என்றான் இராசசிம்மன்.

"பெண்கள் பருவ காலத்தில் கல்யாண முருங்கை மரம் போல் மிக வேகமாக வளர்வது இயல்பு, இளவரசே!" என்று கூறி நகைத்தார் சக்கசேனபதி.

அரச மாளிகையின் வாசலில் காசிப மன்னர் பிறந்த நாளுக்குரிய வெள்ளணித் திருக்கோலத்துடன் அமைச்சர்கள், பிரதானிகள் புடைசூழ இராசசிம்மனைக் கோலாகலமாக வரவேற்றார். அவன் குதிரையிலிருந்து இறங்கியதுமே ஓடி வந்து அன்போடு அணைத்துத் தழுவிக் கொண்டார் ஈழநாட்டு மன்னர். "இராசசிம்மா! நீ இன்று வந்தது மிகப் பொருத்தமான வரவு. என்னுடைய பாக்கியம்" என்று பெருமிதத்தோடு கூறினார். அவன் தங்குவதற்கான ஏற்பாடுகளெல்லாம் பிரமாதமாகச் செய்யப்பட்டிருந்தன. அதன்பின் அன்று முழுதும் குமார பாண்டியனுக்குத் தன்னை நினைத்துப் பார்க்கவே நேரமில்லை. வெள்ளணி விழாவின் உற்சாகத்தில் மூழ்கிப் போனான் அவன். காசிப மன்னர் அநுராதபுர நகரத்திலுள்ள ஒவ்வொரு பௌத்த விகாரத்துக்கும் அவனையும் உடன் அழைத்துக் கொண்டு சென்று வழிபாடு செய்துவிட்டு வந்தார். கலைஞர்களுக்கும், புலவர்களுக்கும் பிறந்தநாள் பரிசளிப்புக்களை வழங்கினார். அந்த ஆரவாரங்களுக்கு நடுவே குமாரபாண்டியனுக்கு அவரிடம் அதிகம் பேச நேரமில்லை. அவருக்கும் குமார பாண்டியனிடம் விரிவாக எதையும் விசாரித்துத் தெரிந்து கொள்ள அவகாசமில்லை. கனகமாலை இரண்டொரு முறை அவனைச் சந்தித்தபோது புன்முறுவல் புரிந்தாள். இப்படியாகக் குமாரபாண்டியன் அந்த நாட்டில் கால் வைத்த முதல் நாள் உல்லாசமாகக் கழிந்தது.

## அத்தியாயம் 3

# கனகமாலையின் புன்னகை

இந்தக் கதையில் திடீரென்று எழிலோவியமாக வந்து தோன்றிக் குமார பாண்டியனையும், நமது நேயர்களையும் வியப்பில் ஆழ்த்தியிருக்கும் 'கனகமாலை' என்னும் பேரழகியைப் பற்றி இங்கே சிறிது விவரித்துச் சொல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது.

வரலாற்றுப் பெருமை வாய்ந்த பழைய ஈழநாடு மூன்று பெரும் பிரிவுகளாக இலங்கியது. தென் கிழக்குப் பகுதி 'உரோகணை ரதம்' என்றும் நடுப்பகுதி 'மாயா ரதம்' என்றும், வடபகுதி இராச ரதம்' என்றும் பெயர் பெற்றிருந்தன. வடக்குப் பகுதியாகிய இராசரத நாட்டில் தான் அநுராதபுரம், பொலன்னறுவை முதலிய நகரங்கள் கலைவளம் நிறைந்த ஊர்கள் எல்லாம் இருந்தன. தென் கிழக்குப் பகுதியாகிய உரோகணை ரதத்திலிருந்த சிற்றரசன் ஒருவனின் புதல்வியைக் காசிப மன்னர் தம் இளமையில் காதலித்து மணம் புரிந்து கொண்டிருந்தார். அவளிடம் அவருக்குப் பிறந்த பெண்தான் கனகமாலை. காசிப மன்னரின் உள்ளத்தில் அந்தப் பெண்ணின் மேல் தனிப்பட்ட பாசமும் உரிமையும் உண்டு. அவருடைய செல்வப் பெண் கனகமாலை.

கனகமாலைக்குப் பத்து வயது நடந்து கொண்டிருந்தபோதுதான் முதல் முறையாகக் குமாரபாண்டியன் இலங்கைக்கு வந்திருந்தான். அப்போது காசிப மன்னருடைய வேண்டுகோளின்படி சிறிது காலம் கனகமாலைக்குத் தமிழ் கற்பித்தான் அவன். கனகமாலைக்கு நினைவு

அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது

சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள்!

## கால்கேட் டூத் பிரஷ்

---



புத்துணர்ச்சி அளிக்கும் வஸந்த
மலர்களின் நறுமணம்!

காஷ்மீர் பொக்கே டால்கம் பௌடரின்
வாசனை வஸந்தகால மலர்களின் மணத்துடன்
புத்துணர்ச்சியையும், ஆனந்தத்தையும்,
மனோரம்மியத்தையும் அளிக்கிறது!
உங்கள் வசீகரத்தையும்,
மென்மையையும்
பண்படாமல்
காக்கிறது!




## காஷ்மீர் பொக்கே

டால்கம் பவுடர்

ஆண்கள் விரும்பும் நறுமணத்துடன்

ஒரு கால்கேட்-பாமாலிவ் தயாரிப்பு

மலராத பேதைமைப் பருவம் அது. இரண்டாவது முறையும், அதன் பின்பும், அவன் ஈழநாட்டுக்கு வந்தபோது கனக மாலையைச் சந்திக்கமுடியவில்லை. அப்போதெல்லாம் தன் தாயோடு கனகமாலை உரோகண தேசத்துக்குச் சென்று தங்கியிருந்ததால் குமாரபாண்டியன் அவளைக் காண முடியாமற் போயிற்று. மீண்டும் இப்போது பருவச் செழுமை கனிந்த கன்னிகையாக அவளைத் தன்முன் கண்டபோது அவனுக்கு அளவிடங்காத வியப்பு ஏற்பட்டது. அவன் ஏறக்குறைய மனத்துக்குள்ளேயே மறந்து போய் விட்ட அழகிய உண்மை ஒன்று, 'நான் வளமாக வளர்ந்து எழில் கனிந்து நிற்கிறேன்' என்று முன்வந்து நினைவூட்டுவது போலிருந்தது, கனகமாலையை மீண்டும் சந்தித்தது. சிரிப்பும், விளையாட்டும், கேலியும், கும்மாளமுமாகப் பொலன்னறுவையின் அரண்மனையில் அந்தச் சிறுமிக்குத் தமிழ் சொல்லிக் கொடுத்த பழைய நாட்களை நினைத்துப் பார்த்தான் அவன். அந்த நினைப்பு ஆறுதலாக, இனிமையாக, நிறைவுடையதாக அவன் மனத்தில் விளங்கியது. வெள்ளணி விழா முடிந்த மறுநாள் மாலையில்தான் இராசசிம்மனும், காசிபமன்னரும் தனியே சந்தித்து விரிவாகப் பேசுவதற்கு நேரம் வாய்த்தது. தென்பாண்டி நாட்டு நிலைமையை அவருக்கு விளக்கிச் சொன்னான் இராசசிம்மன். வடக்கேயிருந்து பகையரசர்கள் பாண்டி நாட்டின் மேல் படையெடுக்க நேரம் பார்த்துக் கொண்டிருப்பதையும் அவரிடம் குறிப்பிட்டான் அவன். எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்து விட்டு அவர் கூறலானார்:

"இராசசிம்மா! இது வரையில் நீ கூறியவற்றை யெல்லாம் கேட்டேன். தென்பாண்டி நாட்டின் உண்மையான நிலை இப்போது எனக்குப் புரிகிறது. இம்மாதிரிப் பகைவர் படையெடுப்பு ஏற்படும் நிலை வந்து முடிவு எப்படி எப்படி ஆகுமோ என்று பயந்துதான் தென் பாண்டி நாட்டு அரசுரிமைப் பொருள்களையும் உங்களுடன் இங்கேயே எடுத்துக் கொண்டு வந்து விடும்படி சக்க சேனாபதியிடம் நான் கூறியனுப்பினேன். வெற்றியோ, தோல்வியோ, விளைவு எப்படி இருந்தாலும் நாம் நம்முடைய பொருள்களைத் தற்காப்பாக வைத்துக் கொண்டு விட வேண்டும்" - காசிப மன்னர் இப்படிக் கூறிக்கொண்டு வந்தபோது குமார பாண்டியன் குறுக்கிட்டுச் சொன்னான்:

"என் உயிரினும் மேலான மதிப்புக்குரிய பொருளை நான் இன்னும் பாதுகாக்கவே இல்லை, காசிப மன்னரே! இந்தப் பொற் சிம்மாசனத்தையும், வீரவாளையும், சுந்தர முடியையும், பாதுகாப்பாக இங்கே கொண்டு வந்து விட்டதற்காக நான் பெருமைப்பட்டுக் கொள்வது பெரிதன்று. என் அன்னையைக் காப்பாற்ற வேண்டும். நான் பிறந்த குடியின் மானத்தையும், மதிப்பையும் காப்பாற்ற வேண்டும். அவைகளைக் காப்பாற்றிப் பாதுகாக்காத வரையில் நான் பெருமைப்படுவதற்கே தகுதியற்றவன்."

"உன் மனக்குறை எனக்குப் புரிகிறது, இராசசிம்மா! இப்போது சொல்கிற வார்த்தைதான். நீ என்னை உறுதியாக நம்பலாம். தென்பாண்டி நாட்டுக்கோ, உன் அன்னைக்கோ, ஒரு சிறு துன்பம் பகையரசர்களால் ஏற்படுகிறதென்று தெரிந்தாலும் உனக்கு உதவியாகச் சக்க சேனாபதியின் தலைமையில் ஈழ மண்டலப் பெரும்படை முழுவதையும் கடல்கடந்து அனுப்பி வைப்பதற்கு நான் எந்த விநாடியிலும் தயாராக இருக்கிறேன். அதற்காக நீ கவலைப்படாதே!" என்று உறுதியின் அழுத்தம் ஒலிக்கும் குரலில் காசிப மன்னர் மறுமொழி கூறியபோது குமார பாண்டியனுக்கு நம்பிக்கை ஏற்பட்டது.



அதன் பின் இடையாற்றுமங்கலம் நம்பி, தளபதிவல்லாளதேவன் என்று தென்பாண்டி நாட்டு அரசியலில் தொடர்புடைய முக்கியமானவர்களை யெல்லாம் பற்றிக் காசிப மன்னர் அவனிடம் விசாரித்தார். பேசிக்கொண்டிருக்கும் போது அவன் கையிலிருந்த வலம்புரிச் சங்கை அவரும் பார்த்தார். சிரித்துக் கொண்டே, அதைப் பற்றி அவரும் விசாரித்தார். அதைக் கையில் வாங்கிப் பார்த்து வியந்தார். வருகிற வழியில் ஒரு தீவில் விலைக்கு வாங்கியது என்பதற்கு மேல் அதிகமாக அவரிடம் ஒன்றும் சொல்லிக் கொள்ளவில்லை அவன். அவரும் அதற்குமேல் அதைப் பற்றித் தூண்டிக் கேட்கவில்லை. அவர்கள் இருவரும் இவ்வாறு பேசிக் கொண்டிருந்த போது ஓட்டமும், நடையுமாகத் துள்ளிக் கொண்டு கனகமாலை அங்கு வந்தாள். தந்தை மட்டும்தான் அந்த இடத்தில் இருப்பாரென்ற எண்ணத்தில் சுதந்திரமாகத் துள்ளிக் குதித்து வந்த கனகமாலை குமார பாண்டியனும் அங்கிருந்ததைப் பார்த்தவுடன் வெட்கமடைந்தாள்.

"கனகமாலை! குமாரபாண்டியர் உனக்குத் தமிழ் சொல்லிக் கொடுத்ததெல்லாம் நினைவு வைத்துக் கொண்டிருக்கிறாயா? எல்லோருக்கும் சாதாரணமான ஆசிரியர்கள்தான் கற்பிப்பதற்குக் கிடைப்பார்கள்

உனக்கோ தமிழ்மொழிபுரக்கும் பாண்டி நாட்டு இளவரசரே ஆசிரியராகக் கிடைத்தார். இவரை விட்டுவிடாதே. இன்னும் என்னென்ன கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டுமோ, அவ்வளவையும் இவர் இங்கிருக்கும்போதே கேட்டுத் தெரிந்து கொண்டுவிடு" என்றார்.

"இந்தச் சில ஆண்டுகளுக்குள் நானே அடையாளம் கண்டுபிடிக்க முடியாதபடி வளர்ந்து விட்டாளே, என் மாணவி! அந்த நாட்களில் நான் ஒன்றைச் சொல்லிக் கொடுப்பதற்கு முன் ஒன்பது கேள்விகளைக் கேட்டுத் திணறச் செய்த உங்கள் பெண் இப்போது என் முகத்தைப் பார்த்துப் பேசுவதற்கே வெட்கப்படுகிறாள்."

"இவரிடம் பேசுவதற்கு வெட்கமென்ன அம்மா? இவர் நம் வீட்டு மனிதர்மாதிரி. அந்த நாளில் தமிழ்ச் சுவடியும் கையுமாக நான் கூப்பிட்டாலும் என்னவென்று கேட்காமல் சதாகாலமும் இவரையே சுற்றிக் கொண்டிருப்பாய் நீ. இப்போது திடீரென்று என்ன வந்துவிட்டது, உனக்கு? நீ கூடக் கலகலப்பாக இவரிடம் பழகாவிட்டால் இவருக்கு வந்த இடத்தில் எப்படித்தான் பொழுதுபோகும்?"

"சுத்தப் பொய் அப்பா; இவர் சொல்வதை நீங்கள் நம்பவே நம்பாதீர்கள். நான் ஒன்றும் இவரோடு பேச மாட்டேனென்று சொல்லவில்லை. பௌத்த விஹாரத்துக்கு வழிபாடு செய்யப் போய்க் கொண்டிருந்தபோது இவரும் சேனாபதித் தாத்தாவும் குதிரையில் வந்து கொண்டிருப்பதைப் பார்த்தேன். அப்போதே நடுத்தெருவில் நின்று கொண்டு இவரோடு எப்படி அப்பா பேச முடியும்? இவரானால் அங்கேயே தெருவில் நின்று கொண்டு என்னைக் கேள்வி கேட்டுத் துளைத்தெடுத்துவிட்டார்" என்று பொய்க் கோபத்தின் சாயல் திகழும் முகத்தோடு படபடப்பாக மறுமொழி கூறினாள்.

"ஆ! இப்போதுதான் உன்னைக் கனகமாலை என்று ஒப்புக்கொள்ள முடிகிறது. துடுக்குத்தனமான பேச்சும், சுறுசுறுப்பும் உள்ள பெண் திடீரென்று ஊமையாக நின்றால் யாருக்குத்தான் கோபம் வராது?" என்று அவளைப் பார்த்துக் கூறிவிட்டுச் சிரித்தான் இராசசிம்மன். கனகமாலைக்கு அவனுடைய முகத்தை நேருக்கு நேர் பார்ப்பதற்குக் கூச்சமாக இருந்தது. ஆனாலும் பார்க்க வேண்டுமென்று ஆசையாகவும் இருந்தது. இராசசிம்மனுக்குக் கனகமாலையிடம் ஏற்பட்ட கவர்ச்சியைக் காதல் என்று சொல்வதற்கில்லை. அது ஒரு வகைக் கவிதைக் கவர்ச்சி. இரசிகனுக்குச் சுவையான பாடல் கிடைத்தால் ஏற்படுகிற நிறைவு போல் கனகமாலையின் களினப் புன்னகையில் அவன் காவியச் சுவையைக் கண்டான். தத்துவசேன அடிகளோடு உரையாடும் போதும், சக்கசேனபதியோடு பேசும்போதும், காசிப மன்னரோடு பழகும் போதும், மரியாதையும், கௌரவமும், அவனைப் பொறுப்புள்ளவன் என்று நினைவூட்டிக் கொண்டே இருந்தன. ஆனால் கனகமாலையின் புன்னகை என்னும் கவிதையைச் சுவைக்க நேரும்போதெல்லாம் அவன் சிறு குழந்தையாகி அந்தக் காவிய அழகில் மயங்கித் தன் பொறுப்புக்களையும், கவலைகளையும் மறந்து விடுகிறான். அந்த மறதி மயக்கம் அப்போதையச் சூழ்நிலையில் அவனுக்குத் தேவையாக இருந்தது. அனுராதபுரத்துக்கு வந்தபுதிதில் இரண்டொருநாட்கள் தான் அவனும், கனகமாலையும், ஒருவரையொருவர் காணமலும், பேசாமலும் நாணம்திரையிட்டிருந்தது. பின்பு அந்தப் பெண்ணாகவே அவனிடம் வலுவில் கலகலப்போடு பழகத் தொடங்கி விட்டாள். பழையபடி தமிழ்ச் சுவடிகளும் கையுமாக அவனைச் சுற்றி வரத் தொடங்கினாள். அந்தக் கனவுக் கன்னிகையோடு மிகிந்தலைக்குன்றின் உச்சிவரையில் ஏறிச் சுற்றினான். அனுராதபுரத்து ஏரிகளில் படகில் ஏறிக்கொண்டு மிதந்தான். சிம்மகிரிக் குகை ஓவியங்களைப் போய்ப் பார்த்தான்.

"நீங்கள் ஏன் எப்போதும் இந்தச் சங்கைக் கையில் வைத்துக் கொண்டே சுற்றுகிறீர்கள்?" என்று ஒருநாள் கனகமாலையும் அவனைக் கேட்டுவிட்டாள்.

"கனகமாலை! இந்தச் சங்கில் நான் என்றென்றும் மறக்க முடியாத் ஒரு இனிய நினைவு மறைந்திருக்கிறது. இது என் கையில் இல்லாவிட்டால் மனம் ஏழையாகி நினைவுகள் சூனியமாகி விட்டது போல் ஒரு பெருங் குறைபாட்டை உணர்கிறேன் நான்" என்றான் உருக்கமாக.

வெள்ளணிவிழா முடிந்த சில நாட்களில் அவர்கள் எல்லோரும் பொலன்னறுவைக்குப் பயணமானார்கள். அங்கே குமாரபாண்டியனின் நாட்கள் கனகமாலைக்குத் தமிழ் கற்பிப்பதிலும், அவளுடைய அமுதத்தன்மை நிறைந்த காவியச் சிரிப்பில் தன் கவலைகளை மறந்து விடுவதிலும் கழிந்துகொண்டிருந்தன. வனங்களிலும், மலைகளிலும், அந்தக் கவிதைப் பெண்ணோடு சுற்றினான் அவன். அப்படிச் சுற்றுவது அவனுக்குப் பெருமையாக இருந்தது. ஒருநாள் மாலை கனகமாலையும், அவனும் ஒரு பௌத்த விஹாரத்துக்குப் போய் வழிபாடு செய்துவிட்டு இருட்டுகிற நேரத்துக்கு அரண்மனைக்குத் திரும்பி வந்தார்கள். அப்படி வந்த சிறிது நேரத்துக்கெல்லாம் சக்கசேனபதி அவசரமாக ஓடி வந்து, "இளவரசே! நான் அன்று 'தமனன் தோட்டத்து'க் கப்பல் துறை ஊழியர்களிடம் எச்சரித்துவிட்டு வந்தது நல்லதாகப் போயிற்று. நேற்றுத் தமிழ் நாட்டைச் சேர்ந்த கப்பல் ஒன்றை அங்கே தடுத்து நிறுத்தியிருக்கிறார்களாம். அதில் சந்தேகப்படத்தக்க ஆட்களும் இருக்கிறார்களாம். தகவல் வந்திருக்கிறது" என்று இராசசிம்மனிடம் கூறினார். (தொடரும்)

# உங்கள் வீட்டிற்கெனவே ...

## இணையற்ற
## தூள் தேயிலை

வீட்டு உபயோகத்திற்கு, நித்தமும் உத்தமமானதையே விரும்பும் உங்களுக்காகவே உருவாக்கிய உயர்ந்த ப்ரூக் பாண்ட் ஏ-ஒன் தூள் தேயிலை. மெத்தவும் சிக்கனமானது! ஒரு பவுண்டு தூளுக்கு அதிக கோப்பைகள் சிறந்த தேநீர் அளிக்கவல்லது.






**ப்ரூக் பாண்ட்**
**A-1 ஏ-ஒன்**
**தூள் தேயிலை**




இடிந்து சரிந்து தரை மட்டமாகக் காத்திருக்கும் பழைய குடிசை ஒன்றின் திண்ணையில் உட்கார்ந்தபடியே, கேளம்பிக் குருப்பு எதிரேயுள்ள நீர்ப்பரப்பை ஆற்றாமையுடன் பார்த்துக் கொண்டிருந்தான். வயல்வெளிகள் காயல் தேக்கங்களாகத் தென்பட்டன. இடவப்பாதிக் குட்ட நாட்டின் புன்செய் நிலங்களெல்லாம் இப்படி நீரில் மூழ்கி விட்டன. நாட்டுக்காரர் யாவரும் தத்தம் இருப்பிடத்தை விட்டு அசையவில்லை. எங்கும் ஒடுக்கமும் முடக்கமும் தான். கங்குகரை தெரியாமல் அகன்று கிடக்கும் ஆற்றில் செல்லும் தோணிகளின் தள்ளுகோல் சத்தம் மட்டும் அடிக்கடி கேட்டுக் கொண்டிருந்தது.

தடை இல்லாமல் பொழிந்த பெருமழையின் விளைவு இது. ஆடி மாதம் முடியப் போகிறது; இன்னும் வானம் தெளியக் காணோம்; வெள்ளப் பெருக்கும் குறையக் காணோம். நாட்டுக்காரர்களுக்கு வெறுப்புத் தட்டி விட்டது. சாதாரணமாக வேண்டப்படுகிற மழை இப்படிக் கங்கு கடந்து பொழிந்தால்? இந்தப் பிரளயப் பரப்பு வடிந்த பிறகல்லவா ஓணம்* விழாவுக்கான ஏற்பாடுகள் தொடங்கியாக வேண்டும்? ஆண்டு முழுவதும் காத்திருந்து வரவேற்கிற ஒரேயொரு உயரிய பண்டிகை அது. இப்படி முடக்கமும் தவிப்புமாகக்

---

* ஓணம் - தீபாவளியைப் போல் மலையாள நாட்டில் ஆவணி மாதத்தில் சிறப்பாகக் கொண்டாடப்படும் ஒரு பெரிய பண்டிகை.

சீரழிந்து போனாலும். இதைவிட வேறு என்ன நஷ்டம் இருக்கிறது?

கேளம்பிக் குருப்பு இதைப் பற்றி ஒன்றும் கவலைப்படவில்லை. கிழத்தனம், காலம் குறுகி வருவதை நினைவுபடுத்தத் தொடங்கி விட்டது. சாமான் செட்டெல்லாம் உள்ளவர்களுக்குத் தானே பண்டிகை திருவிழாவெல்லாம்? அந்த வசந்தம் போய்ப் பல வருஷங்களாகி விட்டன; கேளம்பியின் குடிசை இப்போது மக்கிப் போன வெறுங்கூடு; இவனுக்காக அதுவும், அதற்காக இவனும் என்று வாழும் வாழ்க்கை. அன்றாட வயிற்றுப் பாட்டுக்கே அல்லல்படும் அந்த வறியவனுக்கு, மகாபலியை எதிர்கொண்டு அழைத்து 'ஓணம்' கொண்டாட வேண்டிய நிர்ப்பந்தம் கிடையாது.

குழி விழுந்த கண்களும், ஒட்டிய தாடைகளும், உந்தி நிற்கும் எலும்பும், வறண்டு சுருங்கி விட்ட தோலுமாகக் குடிசையின் வெளித்திண்ணையில் குந்தியிருக்கும் இந்தக் கிழவனும், ஒரு காலத்தில் யாரையும் கவரத்தக்க மேனி வளமையுடன் பொலிவோடிருந்த போது இதே ஓணத்தை மிக விமரிசையாகக் கொண்டாடியிருக்கிறான். எதிரிலிருக்கிற இதே நதிக் கரையில், மற்றவரை விட உயரமான மேட்டில் நின்று கொண்டு, எல்லாரையும் விட உரத்த குரலில் மகாபலிச் சக்கரவர்த்தியை 'மாவேலிக்கூவல்' இசைத்து, வரவேற்றிருக்கிறான். அன்றோ, எத்தனையோ பேர்கள் இந்த மனிதனைப் பார்த்துப் பொறாமைப் பட்டிருக்கிறார்கள். இதே ஓணத்தன்று இதே கேளம்பிக் குருப்பை ஆற்றங்கரைக்கு அழைத்துப் போகக் கிராமத்து வாலிபர்கள் எல்லாரும் குழுமியிருப்பார்கள்.

கேளம்பிக்கு, அன்று ஒரேவொரு அலுவல் தான். 'சுண்டன் வள்ளம்' (நீண்ட தோணி) விளையாட்டில், ஒன்னும் மணியம் (கட்சித் தலைமை) பொறுப்பை ஏற்றுக் கொள்வது வழக்கம். இந்தக் கலையில் கேளம்பிக்குச் சரி நிகர் சமானமாக வேறு யாரும் துணிந்து வர முடியாது. குட்டநாடு முழுவதிலுமே அவன் புகழ் ஒப்பற்றதாக இருந்தது. நாலு பேர்கள் நின்றால்கூட எடுப்பாயிராத அந்த நீண்ட ஓடத்தில், கேளம்பிக் குருப்பு வந்து நின்றுவிட்டால் பார்ப்பவர்கள் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டுமென்று ஆசைப்படுவார்கள். அவன் பொறுப்பேற்கிற தோணி, நூலிட்ட கணக்காக நேரே பாயும். ஆற்றின் வேகப் பெருக்கு எவ்வளவு இருந்தாலும் சரி. கேளம்பியின் தோணி கணக்கமோ பிணக்கமோ செய்த தென்பதே கிடையாது! நாட்டுக்காரர்களெல்லாரும் பெருமையாகச் சொல்லுவது வழக்கம் ''கேளம்பிக் குருப்பா ஒன்னும் மணியம்? அப்போ, ஓடம் துப்பாக்கி ரவை மாதிரிப் பாயுமே!''

'வள்ளம் களி'ப் போட்டி நடக்கிற போதெல்லாம், கேளம்பியின் ஓடத்துக்குத்தான் முதல் பரிசு. இந்த ஒப்பற்ற திறனுக்காகக் குட்டநாட்டுக்காரர்கள் அவனுக்கு அளித்த கௌரவப் பெயர்தான் 'ஒன்னும் மணியம் கேளம்பி' என்பது.

ஓடம் செலுத்தும் இந்தக் கலை யாரும் வசமாக்கக் கூடிய எளிய சாதனை அல்ல. அசாதாரணமான வலுவும், புத்தியுக்தியும் நிறையப் பெற்ற வாட்டசாட்டமான ஆண்பிள்ளைதான் இக்கலையில் பேரெடுக்க முடியும். போட்டிக் காலங்களில், இந்த ஒன்னும் மணியம் பொறுப்பேற்பவன் பாடு மிக ஆபத்தானது. தண்டுகோல்கள் கொண்டு மிக வேகமாகத் துழச்சல் காரர்கள் ஓடத்தைப் பாய்ச்சும் போது, மணியம் (சுக்கான் பிடிப்பவன்) மிக மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். மற்ற ஓடங்களோடு முட்டாமலும் வேகப் பாய்ச்சலில் கரைப் பக்கம் ஒதுங்கி விடாமலும் ஓடத்தை நேரே செலுத்த வேண்டியவன் மணியக்காரன்தான். நதியின் நீரோட்டத்தை எதிர்த்துச் செல்லும் போது, எதிர்க் காற்றும் வேறு சேர்ந்து கொண்டு விடும்; அப்போது மணியக்காரன் பிரதாப் பிரயத்தனம் செய்து தான் ஓடத்தைச் சரியாகச் செலுத்த வேண்டியிருக்கும். கேளம்பிக் குருப்பு பேரெடுத்தது இத்தகைய காரியத்தில்தான்.

அப்போதெல்லாம், குருப்புக்கு எந்தப் பொருளும் தட்டில்லாமல் கிடைத்துக் கொண்டிருந்தது. இருபது பறை நெல் விளையக் கூடிய நிலமிருந்தது. மேலும் ஆண்டு தோறும், மூன்று நாலு தடவைகளாவது 'வள்ளம் களி'ப் போட்டி நடைபெறும். பிறகு சம்பக்குளம் ஆற்றில், மூலத்திருநாளன்று புகழ்பெற்ற ஓடப் போட்டி உண்டு. இதற்கெல்லாம், கேளம்பிக் குருப்புதான் ஒன்னும் மணியம். நாட்டுக்காரர்கள் இராஜோபசாரத்துடன் அவனைப் பல நாட்களுக்கு முன்பாகவே அழைத்துப் போய் விருந்தாளியாக வைத்திருப்பார்கள். இந்த வகையில் ஆண்டில் ஐந்தாறு மாதங்கள் வெளியூர் வாசம் அவனுக்கு நிச்சயம். தின்பதும் குடிப்பதும், கொம்மாளம் அடிப்பதுமாக அந்த வாலிபன் தன் வாழ்க்கையை ஓர் உற்சவமாகவே ஆக்கிக் கொண்டிருந்தான். இந்த உற்சவம் ஒரு நாள் திடீரென்று கொடியிறங்கி முடிவைக் கண்டு விடுமென்பதைக் குருப்பு அப்போது எண்ணிப் பார்த்ததில்லை.

வந்த சங்கடமும் எதிர்பாராத விதத்தில் தான் வந்து சேர்ந்தது. தந்தை இறந்தார். குடும்பப் பொறுப்பு முழுவதும் கேளம்பியின் தலைக்கு வந்தது. வயதான தாயும், பருவமான தங்கையும் கேளம்பியின் ஆதரவை அண்டி வாழ்பவர்களாகி விட்டார்கள். ஒன்னும் மணியத்துக்குக் கூப்பிடுபவர்களிடம், கூலியாக நெல்லும் பணமும் கேட்கத் தொடங்கினான் அவ்வளவுதான். அழைப்புக்கள் குறையத் தொடங்கின. கிடைத்த கூலி வேலைகளில் இறங்கத் தலைப்பட்டான். வயிறு வளர்த்தாக வேண்டுமே!

தங்கைக்கு வரன் தேடி அலையாக அலைந்தான் கேளம்பி. ஏழையோ பாழையோ ஓர் ஆண்பிள்ளை என்று கிடைத்தால் போதுமென்ற தவிப்பு அவனுக்கு அதிகரித்தது. கடைசியில், ஒரு வரன் வந்து சிக்கியது. அவனுக்குக் கொஞ்சம் பணம் தேவையாக இருந்தது. ஒரு கடை வைக்க வேண்டும் என்று ஆசைப்பட்டான் பையன். கேளம்பிக்கு அது நியாயமாகப் பட்டது. ஒரே ஆதரவான பரம்பரை நிலத்தை அடமானம் வைத்து, மூத்த தங்கையின் கலியாணத்தை நிறைவேற்றி வைத்தான். தாய்க்கு அபாரமகிழ்ச்சி. ''மகனே! ஒரு கவலை தீர்த்தப்பா! அடுத்த படியாக, நீ ஒரு நல்ல பெண்ணைப் பார்த்துக்

கலியாணம் செய்து கொண்டு விடு. நீங்கள் சந்தோஷமாக வாழ்கிறதைக் கண்ணாலே பார்த்து விட்டுச் செத்தேனானால், மனசு நிம்மதிப்படும்.'' என்று நாள் தவறாமல் சொல்லி வந்தாள் தாயார்.

''வேண்டாம் அம்மா! நாம் இப்படியே நிம்மதியாகக் காலத்தைக் கழித்துவிடுவோம்'' என்று தட்டிக் கழித்து விடுவான் கேளம்பி. அடமானம் வைத்திருக்கிற நிலத்தைத் திருப்பிய பிறகுதான் கலியாணம் என்றே அவன் தனக்குள் முடிவு செய்திருந்தான். ஓய்வு ஒழிவு இல்லாமல், கிடைத்த கூலி வேலைக்கெல்லாம் சென்று பாடுபட்டான். தாயார் அடிக்கடி வேதனை தாளாமல் அங்கலாய்ப்பாள்: ''மகனே! இப்படி உடல் வருத்தம் தெரியாமல் பாடுபடுகிறாய். ஒரே அடியாய்ப் படுக்கையிலே தள்ளிவிட்டால், என்னப்பா செய்வது? யாருக்காக வேண்டி நீ இப்படிக் கஷ்டப்படுகிறாயோ?''



'' அம்மா! நாம் இரண்டு பேரும் கஷ்டமில்லாமல் வாழ வேண்டித்தான் இந்தப்பாடெல்லாம். எனக்கொன்றும் வராது அம்மா, கவலைப் படாதீர்கள்.''

''எதுக்கும், நீ ஒரு நல்ல பெண்ணைப் பார்த்து.....''

'' அதெல்லாம் பிற்பாடு பார்த்துக் கொள்ளலாம், அம்மா!''

இப்படியே சொல்லிச் சொல்லி, நாலைந்து வருஷங்களைக் கடத்தி விட்டான் கேளம்பிக் குருப்பு. கொஞ்சம் நெல்லும் சேர்ந்தது. ஆனால், அது அடமானத் தொகையின் வட்டித் தொகைக்குத் தான் சரியாக இருந்தது. மேலும், வீட்டுச் செலவு வேறே வளர்ந்து கொண்டிருந்தது. மணமான தங்கையோ, பிரசவம், நாள் கிழமை, ஓய்வு என்று வந்து போய்க் கொண்டிருந்தாள். இப்போது இரு குழந்தைகளுக்குத் தாயாராகி விட்டாள். கேளம்பியின் இந்தத் தாரான மனப் பான்மை தாயாருக்கே உறுத்தியது. ''மகனே! வருகிற வரும்படியை யெல்லாம் உடன்பிறந்தவளுக்காகவே செய்து விட்டால், நாளைக்கு உனக்கு ஒரு நோய் - நொடி என்று வந்து படுத்து விட்டால், அரை வயிற்றுக் கஞ்சிக்காவது தோது செய்துகொள்ள வேண்டாமா?'' என்று எச்சரித்து வந்தாள்.

''என்னம்மா, இப்படிச் சொல்லுகிறீங்க! அவள் யாரு. அந்நிய மனுஷியா? எனக்கு இருக்கிறது அவள் ஒரே தங்கைதானே; அவளுக்கு நான் செய்யாமல், வேறு யார் செய்வதற்கு இருக்கிறார்கள்?''

'' அது சரி: ஆனால், 'தனக்குத்தானும், வீட்டுக்குத் தானும்தான் துணை'ன்னு வசனம் இல்லையா? நான் கண்ணை மூடின பிறகு, உன் பாடு எப்படியாகுமோ?.....மகனே! இதை நினைக்கிறபோதுதாண்டா, என் நெஞ்சு ஒடிஞ்சு போகுது. ஒரு நல்ல பெண்ணைப் பார்த்து.....'' என்று கண் கலங்கக் கூறினாள் கேளம்பியின் தாயார்.

''தொடங்கியா பிடிச்சா! அம்மைக்கு வேறு பேச்சே பேசத் தெரியாது. பெரியவங்க வைத்துப்போன நிலம் பிறத்தியான் கையிலே கிடக்கிறபோது, பெண்டாட்டி தேடிக் கொண்டா போவது?'' கேளம்பிக் குருப்பு மேலே பேச வழியில்லாமல், தாயை மௌனியாக்கி விடுவான்.

வருஷங்கள் கரைந்து கொண்டே போயின. 'ஒன்றாம் மணியம்' என்று புகழ் பெற்ற கேளம்பி, இப்போது, ஒன்றாம்தரமான சாகுபடிக்காரன் என்ற புகழ்ச்சியையும் பெற்றான். ஓணத்திருவிழாக் காலத்தில், சொந்த வட்டாரத்தில் நடைபெற்ற 'வள்ளம் களி'யில் ஒன்றாம் மணியமாகப் பொறுப்பேற்றான். மற்ற இடங்களுக்கு அவன் அழைத்தாலும் போவதில்லை. விவசாய வேலைக்கே நேரம் சரியா இருந்தது.

கேளம்பியின் கடின உழைப்புக்கள் வீண் போகவில்லை. அடமானத் தொகையில் கால் வாசியை அடைத்து விட்டான். இந்தச் சமயத்தில் தான், ஒன்றன் பின் ஒன்றாக, இரு பேரிடிகள் அவனைத் தாக்கி நிலைகுலைய வைத்து விட்டன; விதியின் கொடிய கரங்கள் புரிந்த கொடுமை!

தன் ஒரே மகனுக்கு ஒரு மனையாட்டி வந்து, வீடு பொலிவு பெறுவதைப் பார்க்கக்கொடுத்து வைக்காமல் அவனைப் பெற்றவள் இறந்து போனாள். அவளது ஏக்க ஆசை நிராசையாகவே அவிந்து விட்டது. தாய் மரித்த பதினாறும் நாள், பக்கவாதம் தாக்கி விழுந்து விட்டான் குருப்பு.

ஆறுமாதங்களுக்குப் பிறகுதான், எழுந்து நடமாடும் நிலைக்குக் கேளம்பி வர முடிந்தது. அப்போதும், பிறர் சகாயம் இல்லாமல் நடக்க முடியாது.

அயல்வாசிகள் அநுதாபத்துடன் முடிந்த உதவிகளைச் செய்து வந்தார்கள். மேலும், இரு மாதங்கள் நோயாளியாகவே வாழ்ந்து

தொடர்ச்சியான ஆறு விளம்பரங்களில் இரண்டாவது இது.

# கயிறின் கதை





மனைவி: ராமச்சந்திரா! நான் ஏன்தான் பிறந்தேனோ?

கணவன்: பிறந்ததில் என்ன தப்பு? வளர்ந்ததிலேதான் தப்பு!

---

விட்டுப் பழையபடி பயிர்த் தொழிலிலேயே இறங்கினான். புன்செய் நிலங்களில் அவன் பாடுபடத் தொடங்கியபோதுதான் தெரிந்தது: 'இது முந்திய கேளம்பிக் குருப்பு இல்லை, அவனுடைய சவம்தான்,' என்பது.

நிலத்தை மீட்டுவிடலாமென்கிற நம்பிக்கை அற்று விட்டது அவனுக்கு. யாரிடமும் பிச்சைக்குப் போய் நிற்காமல், வயிற்றைக் கழுவிக் கொண்டிருந்தால் போதும் என்கிற ஒரே இலட்சியம்தான் அந்த மனிதனுக்கு. வழக்கப்படி, விடியற்காலையில் எழுந்து வேலை தேடிப் போவான். சாகுபடிக் காலங்களில் தட்டில்லாமல் வேலை கிடைக்கும். நாற்றுக் கட்டுக்களுக்குக் காவல் இருப்பது; நடவு சரியாக நடக்கிறதா என்று கண்காணிப்பது, களத்து மேட்டுக்கு மேற்பார்வையாகப் பணிபுரிவது என்று பல சல்லிசான வேலைகளையே நாட்டுக்காரர்கள் கேளம்பிக்குக் கொடுத்து வந்தார்கள். இப்படியே நாட்கள் ஓடின.

ஒரு சின்னஞ்சிறு குடிசையில்தான் கேளம்பிக் குருப்புக்கு இப்போது வாசம். சுகமோ, சுகக்கேடோ — எல்லாம் அந்தக் குடிசைதான் அவனுக்குப் புகல். பக்கத்துக் குடிசைக் கிழவி வேலிப்பக்கம் வந்து நின்று கொண்டு, ''கஞ்சி தண்ணீர் வைச்சுத் தரட்டுமா?'' என்று ஆதரவோடு கேட்கும்போதெல்லாம், ''வேண்டாங்க, அம்மா! நானே வைத்துக் கொண்டேன்'' என்று பதில் சொல்லி விடுவான்.

நல்ல வீடாக இருந்ததுதான். இப்போது இப்படிக் கிலமாகி, ஒட்டைக் குடிசையாகி விட்டது. முன்பக்கத்துத் திண்ணையில், உட்கார்ந்தபடியே கேளம்பி கடந்ததையும் நடப்பையும் சேர்த்தும் பிரித்தும் பார்த்து உள்ளம் சாம்புவான். பாவம்! ஆசைகளைப் பலியிடுவதற்காக அவனது ஏலாமை அசை போட்டுக் கொண்டிருக்கும். இயன்ற வரையில் பாடுபட்டும், செம்மைப்படாத தன் வாழ்வு இப்படித் தாறுமாறாகி விட்டதன் காரணத்தை ஆராய்கிறானோ என்னவோ? அப்படி முடங்கிக் குந்தி இருப்பான். அநேகம் ஓடங்களைப் போட்டிக் காலங்களில் சேர்க்க வேண்டிய இடத்தில் சேர்த்து, நாட்டுக்காரர்களின் பாராட்டுதலைப் பெற்று வந்த மனிதனுக்குத் தன் வாழ்க்கைத் தோணியை ஏதாவதொரு இலட்சியப் பாதையில் செலுத்தி நிம்மதியான ஓர் இடத்தில் கொண்டு போய்ச் சேர்க்க முடியவில்லையே என்ற கழிவிரக்கம் மனத்தைக் குன்ற வைக்கிறதோ?

கேளம்பி நல்ல செயலாக இருந்தகாலத்தில் பல வகைகளிலும் உதவி பெற்றுச் சென்ற சகோதரிகூட, இப்போது ஒதுங்கியே இருந்தாள். அவள் நிலைமை எப்படியோ என்று தான் சமாதானம் செய்து கொண்டான் கேளம்பி. அவன் வாழ்க்கை இலட்சியம் ஒன்றுதான். 'பிறரிடம் கைநீட்டிக் கூனிக் குறுகி நின்று கொண்டு யாசகம் செய்யக் கூடாது. கடைசி வரையில் உழைத்தே வயிறு வளர்த்துவிட வேண்டும்.'

எத்தனையோ நாட்கள் முழுப் பட்டினி கிடந்திருக்கிறான்; ஆனால் தன் லட்சியத்தை விட்டுப் பிறழவில்லை.

இப்போது ஏற்பட்டிருக்கிற வெள்ளப் பெருக்கு; மற்றவர்களைவிடக் கேளம்பிக் குருப்பைத்தான் அதிகமாக வதைக்கிறது. சாதாரணமாக, மழை பொழிந்து நீர் நிரம்பி விட்டால், இதே குட்ட நாட்டில் செந்நெல் பயிரிடுவது வழக்கம். இந்த ஆண்டோ விதைத்தவருக்கெல்லாம் படுநஷ்டம். 'பஞ்சக்கர்க்கடம்' (ஆடிமாதத்துப் பஞ்சம்) என்பதைச் சரியாகக் கண்டு கொண்டது இந்தத் தடவை தான். வெளித் திண்ணையில் குந்திக்கொண்டு, கேளம்பி பலப்பல பேய்க் கனவுகள் கண்டான்: 'தற்கொலை செய்து கொண்டு விட்டால் என்ன? ஊழிப் பிரளயமாகச் சூழ்ந்திருக்கிற இந்த நீர்ப்பரப்பில் தன் பழைய வாழ்வைத் தொலைத்து விட்டால் என்ன?....' என்றெல்லாம் தீர்மானித்ததுண்டு. 'போய் விட்டால் யாருக்கு என்ன நஷ்டம்? உடன் பிறந்தவள். இரத்த பாசத்தினால் ஒப்பாரி வைத்து அழுவாள்; நெருக்கமுள்ள நாட்டுக்காரர்கள் 'பாவம்! கஷ்ட காலம்! நல்ல மனிதன்....' என்று அங்கலாய்ப்பார்கள்.

ஒருவிதமாக, ஆடிப்பீடை வடிந்தது. பொன் விளைக்கும் 'சிங்க' மாசமாகிற ஆவணி தொடங்கியதுமே, வெள்ள நீரெல்லாம் வடிந்து, குட்ட நாடு பழைய பொலிவைப் பெற்று விட்டது. நாலைந்து நாட்களாக, வீட்டுக்குள்ளேயே முடங்கிக் கிடக்கவேண்டிய கட்டாயம் விலகி விட்டதால், உற்சாகத்துடன் ஜனங்கள் நடமாடினார்கள். ஓணம் பண்டிகை நெருங்கி விட்டது. ஏற்பாடுகள் தடபுடலாக இருந்தன.

திருவோணமும் வந்து சேர்ந்தது. எல்லா வீடுகளிலும் உள்ளும் புறமும் பூக்கோலத்தாலும் வண்ணக் கோலத்தாலும் அலங்கரிக்கப் பட்டிருந்தன. மகாபலியை வரவேற்க, சிறியவரும் பெரியவர்களும் ஆனந்த ஆரவாரத்துடன் 'பூவிளி' கூவி முகமன் தந்தார்கள். ஊர் பூராவும் இதே கோலாகலக் குரல்களின் எதிரொலிதான் ரீங்காரித்துக் கொண்டிருந்தது. வறுவல் பொரியல்களின் நறுமணத்தை ஏந்திக்கொண்டு ஓணக்காற்று, ஒய்யாரமாக ஓட்டம் புரிந்த வண்ணம் எங்கும் வியாபித்தது. ஓண விருந்து உண்டு, களிப்புடன் நாட்டுக்காரர்கள் யாவரும் ஓடம் விளையாட்டைக் காண நதிக்கரைக்கு வந்து சேர்ந்தார்கள்.

கேளம்பிக் குருப்பு, வழக்கம்போல் அன்றும் வெறும் கஞ்சியைக் குடித்து விட்டு, வெளித் திண்ணையில் வந்து உட்கார்ந்து கொண்டான். இந்தத் திருவோணத் திருவிழாவில் இப்படி அன்றுடங் காய்ச்சிக் கஞ்சியைமட்டும் குடித்து விட்டுக் கிடக்கவேண்டி வந்ததே என்ற ஆற்றாமை கேளம்பிக்கு இல்லை. அவனை விருந்தாக, நாலைந்து பேர்கள் வலிய வந்து அழைத்தார்கள். அவன் மனசு அதற்கு உடன்படவில்லை. தன் வீட்டு உப்புக் கஞ்சியில் இருக்கிற திருப்தி அதில் வருமா?

எதிரே, ஆற்றில் ஓடக்காரர்கள் இசைக்கும் 'வஞ்சிப் பாட்டு' (ஓடப்பாட்டு) கேளம்பிக் குருப்பின் காதுகளில் வந்து ஒலித்தது. முன்போ? அதே பாட்டொலி செவியில் படவேண்டியதுதான் தாமதம், கேளம்பி துள்ளிக் குதித்துக் கொண்டு தோணித்துறைக்கு ஓடுவான். வேட்டிக் கச்சை இறுக்கி விட்டுக் கொண்டு, ஆஜானுபாகுவாய், வெற்றியே உருவாகக் கம்பீரம் பொங்கி வழிய சகலருடைய கவனத்தையும் ஈர்த்துக் கொண்டு நடுநாயகமாக நிற்பான்! இப்போது அதெல்லாம் பழங்கனவுகளாகி விட்டன.

ஆனால் இன்றே ஓர் உத்வேகம் பொங்கியது கேளம்பிக்கு. ஒரு துண்டை எடுத்துத் தலையில் முண்டாக கட்டிக் கொண்டு ஓடத்துறையை நோக்கி விரைந்தான்.

அங்கே ஏதோ சச்சரவு கடுமையாக நடந்து கொண்டிருந்தது. அன்று நடக்கிற ஓடப் போட்டியில், ஒன்னும் மணியம் பொறுப்பை யார் நிர்வகிப்பது என்பது பற்றிக் கடும் வாக்குவாதம். இரு இளைஞர்கள் 'நான்-நீ' என்று அதற்குப் போட்டியிட்டார்கள். இரு கட்சிகள் பிரிந்தது: இருதரப்பாருக்கும் உரிமை கொண்டாட வழி இருந்தது. சமரசம் சாத்தியப்படுவதாகத் தோன்றவில்லை. ஊர் இப்படி இரண்டுபட்டால், விழா எப்படி நடைபெறும்? ஓடங்கள் துறையில், அப்படியே கிடந்தன. சச்சரவு தீரவில்லை.

கைகலக்கும் நிலைமைக்கு விவாதம் சூடேறியது. இந்தச் சமயத்தில்தான் கேளம்பிக் குருப்பு ஆற்றுத் துறைக்கு வந்து சேர்ந்தான். அவனைக் கண்டதும் கூட்டத்தில் ஓர் ஆள் உரக்க அறிவித்தான்: "இனிமேல் நமக்குள்ளே சச்சரவு வேண்டாம். இந்தா, ஒன்னும் மணியம் கேளம்பிக் குருப்பு மாமா வந்து விட்டார். 'பங்காயத்தை' (துழைக்கோலை) அவர் கையிலே கொடுங்கள்!"

இதைக் கேட்டதும் சில குறும்பர்கள், வாய் விட்டுச் சிரித்தார்கள். 'தடுமாறிக் கொண்டு தள்ளாடி நடக்கும் கிழவன் கேளம்பியா, இந்த நீண்ட ஓடத்தின் ஒன்னும் மணியம் பார்க்கப் போகிறான்?' என்ற இளக்காரமே அச்சிரிப்பில் எதிரொலித்தது.

கேளம்பிக் குருப்பின் நெஞ்சைத் துளைத்தது அந்த ஏளனச் சிரிப்பு. மிடுக்குடன் கையை நீட்டினான். துழைக்கோல் வைத்திருந்தவன் பேசாமல், வியப்பு பூரிக்கப் பணிவுடன் அதைக் கேளம்பியின் கையில் கொடுத்தான். பொறுப்பு கைக்கு வந்ததும் கேளம்பி கிழக்கு நோக்கி நின்று கொண்டு கை குவித்துக் கண் மூடிப் பிரார்த்தனை செய்தான். பிறகு, துறைக்குச் சென்று போட்டிக்கான ஓடத்தில் ஏறி நின்றான், ஒன்னும் மணியத்தின் நிலையில்!

## சிரிக்காதே!

முதல் விளம்பரம்: நூறு ரூபாய் நோட்டு ஒன்று இங்கே கண்டெடுக்கப் பட்டது. அதன் சொந்தக்காரர்கள் தயவுசெய்து டிக்கட் கொடுக்குமிடத்தில் வந்து 'க்யூ' வரிசையில் நின்று பெற்றுக் கொள்ளவும்.

இரண்டாவது விளம்பரம்: நோட்டுக்கு நிஜமான சொந்தக்காரரைக் கண்டுபிடித்துக் கொடுத்தால் ஐந்து ரூபாய் இனாம்!

❋

"என்னடா எதையும் உடனே மறந்து விடுகிறாய்."

"இல்லையே! நினைவு வைத்துக் கொண்டிருக்கிறேனே!"

"எங்கே! நினைவில் இருப்பதை ஒன்று சொல்லு?"

"அன்றைக்கு மண்டையில் நீங்கள் அழுத்திக் குட்டினதை நான் இன்னும் மறக்கல்லே சார்!"

❋

மூன்றுதரம் கிராமவாசி சினிமா டிக்கட் வாங்க வந்தான். நாலாவது தரம் வருவதைப் பார்த்து டிக்கட் கொடுப்பவர்: என்ன திரும்பத்திரும்ப டிக்கட் வாங்கறீங்க?

கிராமவாசி: மேலே ஒருத்தன் நான் கொடுக்கிற டிக்கெட்டைப் பாதிபாதியாகக் கிழித்துப்போடறான்!

❋

"நீங்க ராமன் டாக்டரானதைக் கண்டு கொஞ்சமும் ஆச்சரியப்படவில்லையே?"

"அவன் பள்ளிக்கூடத்திலே படிக்கும்போதே அவன் கையெழுத்து மோசமாகத்தான் இருந்தது!"

❋

"இன்னும் அவனை உனக்குத் தெரியவில்லையா? பள்ளிக்கூடத்தில் அவன் உன் கூடப் படித்தவன். முருகேசன் என்று பெயர். குட்டையா கட்டு மீசை வைத்துக் கொண்டிருப்பான்!"

"கட்டு மீசை வைத்துக் கொண்டு யாரும் என்னுடன் படிக்கவில்லையே!"

❋

கார் வழியில் ஒரு பொட்டைக் காட்டில் நின்றுவிட்டது. என்ஜினைத் திறந்து சொந்தக்காரர் தம் மனைவியிடம்: "இரு, என் மூளையை உபயோகித்துப் பார்க்கிறேன்!"

மனைவி: ஐயோ, வேண்டாம். இந்தச் சங்கடமான நிலைமையில் தயவு செய்து அதை மாத்திரம் உபயோகித்துவிடாதீர்கள்!

ஒரு தோணியில் ஓடம் தள்ளுகிற துழைச்சல் காரர்களும், 'வள்ளம்களி'ப் பாடல்கள் பாடுபவர்களும் போட்டிக்குத் தயாராக நிற்கும் ஓடத்தில் ஏறிக் கொண்டார்கள். ஆர்ப்பரிப்பு ஆரவாரங்கள் எதிரொலிக்க, ஓடம் துறையை விட்டு, ஆற்றில் விரைந்தது. கரையிலிருந்த ஜனங்கள் மகிழ்ச்சிப் பேரொலிகளாக ஆரவாரித்தனர். போட்டியிட வந்திருக்கும் மற்ற ஓடக்காரர்கள், ஒரு கிழவன் ஒன்றும் மணியம் இடத்தில் நிற்பதைக் கண்டு பிரமித்துப் போனார்கள்.

குட்டநாட்டின் பிரதிநிதிகளாகக் கேளம்பிக் குருப்பின் ஓடமும், எதிர்க்கட்சிக்காரப் பக்கத்து நாட்டு ஓடமொன்றும் போட்டா போட்டியுடன் முன்னே விரைந்தன. கரையோரங்களில் குழுமி நின்ற மக்கள் எக்காள விளிகளும் உற்சாகக் குரல்களும் எழுப்பிக் கொண்டிருந்தார்கள்.

"அய்யா போயே, அய்யய்யோ!
அய்யா போயே, அய்யய்யோ!!"

களக்குவிக்கும் இந்த மகிழ்ச்சிக் குரல்கள் திசையெங்கும் எதிரொலித்தன.

தன் தோணியை, ஆடாது அலுங்காது நூலிடை இட்ட மாதிரிக் கொண்டு செல்வதில், கேளம்பிக்குச் சிரமம் ஏதும் ஏற்படவில்லை. எங்கிருந்துதான் இதற்கான வலு வந்ததோ அவனுக்கு?

இரு ஓடங்களும் ஒரே வரிசையில் விரைந்து கொண்டிருந்தன. எதிர்க்கட்சி ஓடக்காரர்கள் துழைச்சலை வேகமாக்கினார்கள். குட்ட நாட்டுக்காரர்களும் சளைக்கவில்லை.

எதிர்க்கட்சி ஓடத்தின் ஒன்றும் மணியக்காரன், சட்டெனத் தன்னுடைய 'அடபங்காயம்' (தள்ளு கோல்) எடுத்து உந்தித்தள்ள ஆரம்பித்து விட்டான். சுக்கான் பிடிக்கும் ஒன்றும் மணியக்காரன் தள்ளுகோல் போடத் தொடங்கி விட்டால், ஓடம் அதி வேகமாகப் பாய்ந்து வெற்றி எல்லையை எட்டி விடும் என்பது பிரசித்தம். ஆனால், இக்காரியம் மிகமிக ஆபத்தானது. அசாதாரணமான வலுவும், கைத்திறமும் உள்ள மணியக்காரன் தான் இதைச் செய்ய முடியும். அந்த வட்டாரத்திலேயே கேளம்பிக் குருப்பு வெற்றி பெற்றதெல்லாம் இந்த அரிய திறமையினால்தான். வேறு யாரும் இப்படிச் செய்யத் துணிந்தது கிடையாது இதுவரைக்கும். அத்தகைய ஆபத்தான சாகஸச் செயலை ஒரு இள வயசுக்காரன் செய்யத் துணிவதென்றால், கேளம்பிக்குப் பொறுக்குமா?

கேளம்பி, ஒரு எக்காளக் குரல் கிளப்பி விட்டுத் தன்னுடைய அடபங்காயத்தை உயர உயர்த்திக் காட்டி, எதிரொலிக்குச் சவால் விடுத்து விட்டுப் பிறகு நதியில் செலுத்தித் துழையத் தொடங்கினான். ஒடுங்கிவிட்ட அவனுடைய சதைப்பற்றுக்கள் இறுகின; தசை நார்கள் புடைத்தெழுந்தன; இந்த அசகாய சாகஸச் செயலைக் கண்டு நடுங்கியது போல, இரத்தம் வெகு வேகமாக நரம்புக் குழாய்களில் பரவின; அவன் இதயமோ, 'வேண்டாம், வேண்டாம்!' என்று தடுப்பதுபோலப் படபடப்புடன் அடித்துக் கொண்டது.

கேளம்பிக் குருப்பு சுய உணர்வே இல்லாமல் ஆவேசம் வந்தவனைத் துழைக்கோலை அழுத்தி ஓடத்தைப் பாயவிட்டான். ஓடம் அசுர வேகத்தில் விரைந்து, எதிரியை பிரமிக்க வைத்து முந்திவிட்டது!

ஆனால்......

அதே வேகத்தில், சுக்கான் பிடி ஒடிந்து ஆற்றில் விழுந்து விட்டது. கூடவே கேளம்பியும் சாய்ந்து, நீர்ப் பிரவாகத்தில் அமுங்கி விட்டான். கையில் துழைக்கோலும் உடலோடு சிக்கிய சுக்கான் கட்டையுமாக அக்கிழவன் ஒன்றும் மணியத்தை நதி எங்கே எதற்காகக் கொண்டு சென்றதோ?

வெற்றிப் பெருமிதத்தில், ஓடத்திலிருந்தவர்கள் இதை முதலில் கவனிக்கவில்லை. கரையிலிருந்தவர்களின் கூக்குரல்களைக் கேட்டதும், பலர் திரும்பிப் பக்கத்தைப் பார்த்தார்கள். ஒன்றும் மணியத்தின் இடம் காலியாக இருந்தது. சுக்கானையும் காணோம். உடனே ஆற்றில் பாய்ந்தார்கள் பலர். பல சிறு தோணிகளும் விரைந்து வந்தன. நாள் முழுவதும் தேடியும் கேளம்பிக் குருப்பு கிடைக்கவே இல்லை.

பல நாட்கள் வரை இந்த முயற்சி நீடித்திருந்தது; பலனில்லை. அந்த நாளிலிருந்து, இன்று வரைக்கும், 'வள்ளம் களி'க் காலங்களில், எந்த ஒன்றும் மணியக்காரனும், துழைக்கோல் செலுத்தத் துணிவதில்லை.

# நரஸூ காபி

அருந்தி அதன்
ப்ரத்யேகமான
ருசியை
அனுபவியுங்கள்



நரஸூஸ்
மான்யுபாக்சரிங்
கோ. பிரைவேட் லிட்.
சேலம் & சென்னை

NC Z-23 ATM

---



## குடும்பத்தில் உள்ள ஒவ்வொருவருக்கும் நல்லது

கிருமி நாசினியான வேப்ப எண்ணெயிலிருந்து தயாரிக்கப்பட்டதும், மனோகரமான மணம் தருவதுமான மார்கோ மிக மெல்லிய சருமமுடையவர்களுக்கும் உத்தமமானது. மார்கோ சோப்பின் இளகும் சத்துநிறைந்த நுரை சரீரத்தின் நுண்துவாரங்களில் ஆழமாகப் புகுந்து சென்று, சருமத்திலுள்ள எல்லா அழுக்குகளையும் போக்கி சுத்தப்படுத்துகிறது. இதன் தயாரிப்பின் ஒவ்வொரு கட்டத்திலும் சோதிக்கப்பட்டுள்ள மார்கோ சோப் உங்களுக்கு அதிக சுகத்தையும், நாள் முழுதும் அதிகத் தூய்மை உணர்ச்சியையும் அளிக்கிறது.



# மார்கோ சோப்

குடும்பத்துக்கு உத்தமமான சோப்

தி கல்கத்தா கெமிகல் கம்பெனி லிட். கல்கத்தா-29

தென் இந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை-1

[ அமெரிக்காவில் உருக்குத் தொழிலில் நுணுக்கக் கல்வி பயின்று வரும் இந்திய மாணவர்களின் கல்வி முறைகளைப் பற்றி நியூயார்க் நகரில் வசிக்கும் திரு. பி. ஜி. கிருஷ்ணய்யா தாம் நேரில் கண்டபடி விவரிக்கிறார். — ஆசிரியர்]

# அமெரிக்காவில் இந்திய மாணவர்கள்

பி. ஜி. கிருஷ்ணய்யா

அமெரிக்காவைச் சேர்ந்த மேற்கு வெர்ஜீனியா பிராந்தியத்திலுள்ள பிரும்மாண்டமான ஒரு எஃகு உற்பத்திச் சாலையில் திறந்த உலை அடுப்புக்கெதிராகக் கைச்சட்டைகளை மேலே தள்ளிவிட்டுக் கொண்டு ஒரு இந்திய இளைஞன் வைத்த விழி எடுக்காது கவனித்துக் கொண்டிருந்தான். இந்தியக் கல்லூரியில் பொறியியலில் பட்டம் பெற்ற அவன், மேல் படிப்புக்காக அமெரிக்கா சென்று தொழிற் கல்வி நுட்பங்களைக் கற்று வருகிறான். அவன் பக்கத்தில் ஒரு அமெரிக்கத் தொழில் நிபுணர் உருக்கு உலை இயங்குவதைப் பற்றி விவரித்துக் கொண்டேயிருக்கிறார். ஒரே காலத்தில் 600 டன் இரும்பை எஃகாக மாற்றவல்ல இந்த உலையில் தீ ஜுவாலைகள் 2900° உஷ்ணத்தில் வீசிக் கொண்டிருக்கிறது. பேச்சுக்களின் மத்தியில் அவரும் அவருடைய இதர சிப்பந்திகளும் மேலும் மேலும் 'டோலோமைட்' என்னும் சுண்ணாம்புக் கற்களை அடுப்புக்குள் வாரி வாரி எறிந்து கொண்டிருந்தார்கள். இது எதற்காக அடுப்பில் போடப்படுகிறது? எவ்வளவு டன்கள் போட வேண்டும்? எந்த நிலையில் சேர்க்க வேண்டும்? அளவை நிர்ணயம் செய்வது எப்படி?—இப்படிப் பல்வேறு கேள்விகளுக்கெல்லாம் பதில் சொன்னபடியே வேலையும் நடக்கிறது.

இம்மாதிரி இந்தியக் கல்லூரிகளில் பட்டம் பெற்ற சுமார் மூந்நூறு இந்திய மாணவர்கள் அமெரிக்காவிலுள்ள எஃகுத் தொழிற்சாலைகளில் தொழில் கற்று வருகிறார்கள். தொழிலதிபர்களின் ஒத்துழைப்பு, செல்வந்தர்களின் தரும சிந்தனை, தனிப்பட்டவர்களின் கல்வி ஆர்வம்—இம்மூன்றும் இணைந்து அரசாங்கத்தின் உதவியின்றி, மற்றொரு நாடு முன்னேறுவதற்கு இன்றியமையாத இத் தொழில் நுட்ப அறிவைப் பரப்புகிறது.

இந்தியாவைத் தொழில் வளம் மிக்க நாடாக மாற்ற வேண்டுமானால், இந்தியாவுக்கு ஏராளமாக எஃகுப் பொருள் தேவை. உலகிலே கிடைக்கும் இரும்புக் கனிப் பொருளில் மிகவும் உயர்ந்தது என்று கருதப்படும் உலோகப் பொருளும், மாங்கனீசமும், நிலக்கரியும், சுண்ணாம்புக் கட்டிகளும் அபரிமிதமாக நம் நாட்டில் இருந்தாலும், இந்தியாவில் தற்போது உற்பத்தியாகும் எஃகு நிலைக்குப் பத்து பவுண்டு விகிதம்கூடத் தேறாது. அமெரிக்காவில் இது நிலைக்கு 1700 பவுண்டு அளவில் இருக்கிறது.

உற்பத்தியைப் பெருக்க மூன்று புதிய உருக்குத் தொழில் ஆலைகள் அமைத்து விட்டால் போதுமா? அவற்றை இயக்கத் திறமை வாய்ந்த எஞ்சினியர்களும், சூபரின்டெண்டுகளும், 'போர்மென்களும்,' சூபர்வைசர்களும், வேண்டாமா? இந்தியாவிலுள்ள தொழில் நுட்பக் கலாசாலைகள் வருஷவாரி சுமார் 3600 எஞ்சினியர்களைப் பட்டமளித்து அனுப்பி வைக்கின்றன. ஆனால் கல்லூரிப் படிப்பினால் மட்டும் தொழில் வளராது. 22,000 தொழிலாளிகளைச் சரிவரத் தொழிலில் ஈடுபடச் செய்யத் தொழிலறிவுதானே வேண்டும்?

இதைப்பற்றி 1955ல் இந்தியாவிலுள்ள போர்ட் ஆதார நிதி நிர்வாகத்தினரான திரு டக்ளஸ் என்ஸ்மிங்கர் மத்திய அரசாங்கத் தொழில் அமைச்சருடன் பேசிக் கொண்டிருந்த சமயத்தில்தான் ஒரு யோசனை தோன்றியது. அமெரிக்கத் தொழிலதிபர்களையே இந்த விஷயத்தில் உதவியளிக்கச் சொன்னால் என்ன? இதிலிருந்து படிப்படியாகப் பேச்சுவார்த்தைகள் நடந்து முடிவாக இந்திய இளைஞர்களுக்கு உருக்குத் தொழிலில் பயிற்சி அளிக்கும் கல்வித் திட்டம் வகுக்கப்பட்டது. இதைத் துவக்கி வைக்க போர்ட் நிதி நிர்வாகம் 17·85 லட்சம் டாலர்கள் (ஏறக்குறைய 85 லட்சம் ரூபாய்)நன்கொடை அளித்தது. கார்னிகி, இல்லினாய்,கேஸ், யங்ஸ் டௌன், யேலை நுணுக்கக் கலைக் கழகங்கள்—இவ்வைந்து ஸ்தாபனங்களும் படிப்புக்கான வசதிகளை அளிக்க ஒப்புக் கொண்டன. நாட்டில் பிரதானமான ஏழு உருக்குச்சாலைகள் அவரவர்கள் தொழிற்சாலையில் இந்திய இளைஞர்களுக்குத் தொழில் அநுபவம் பெற வாய்ப்புத் தந்து உதவ முன் வந்தன. அவர்களுக்கென்று தனிப்பட்ட போதனாமுறைகள் வகுத்து ஒரு வருஷ காலத்துக்குப் பயிற்சி யளிக்க ஏற்பாடு செய்யப்பட்டன.

"எங்களுடைய தொழில் நுட்பங்களை மற்ற நாட்டினர்களுடன்பகிர்ந்துகொள்ள அமெரிக்கர்கள் விரும்புவதில்லை என்ற அவச் சொல்லை போக்கிக் கொள்ள இது ஒரு நல்ல வாய்ப்பு" என்று யுனைடெட் ஸ்டீல் கம்பெனித் தலைவர் இத்திட்டத்தைப் பற்றிப் பெருமையாகப் பேசினார்.

இத்திட்டத்தின்படி 1957ல் ஆகஸ்டில் 115 இந்திய இன்சினியர்கள் அமெரிக்கா சென்றனர். அதே வருஷம் நவம்பரில் மேலும் 85 பேர்களும் 1958 ஏப்ரலில் மேலும் நூறு பேர்களும் சென்றிருக்கின்றனர். பெரும்பான்மையினர் முப்பது வயதுக்குட்பட்டவர்கள். இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் பரவலாக வசிப்பவர்கள். அவர்களுடைய மதக்

கோட்பாடுகளும் பழக்க வழக்கங்களும் மாறுபட்டவை. அமெரிக்கத் தொழிற்கூடங்களில் ஒவ்வொருவனும் ஒவ்வொரு துறையில் தனிக் கவனம் செலுத்துகிறான். சிலர் கல்கரி அடுப்பு நுட்பங்கள், சிலர் ஊதுஉலை தத்துவங்கள், சிலர் திறந்த அடுப்பு உருக்கும் முறைகள்—இப்படிப் பல அம்சங்களில் விசேஷ கவனம் செலுத்துகிறார்கள். படிப்பு முடிந்து இந்தியா திரும்பியதும், ஏதாவதொரு உருக்குச் சாலையில் ஐந்து வருஷங்கள் பணி செய்யக் கடமைப்பட்டவர்கள்.

இவர்கள் அமெரிக்காவை அடைந்ததும், ஒவ்வொருவனையும் ஒரு உருக்குச் சாலைக்கு அனுப்பி அதற்கு அருகிலுள்ள நுணுக்கக் கல்லூரியில் சேர்க்கிறார்கள். சாதாரணமாக அவர்கள் வாரத்தில் நான்கு நாட்கள் தொழிற்சாலையில் வேலை செய்கிறார்கள். கல்லூரியில் ஒரு நாள் பாடம் நடக்கும். பாடங்கள் அவர்களுக்கென்றே வகுக்கப்பட்டவை. உருக்கு ஆலை சம்பந்தப்பட்டதாக இருப்பதுடன் அமெரிக்க தேசத்தின் தொழில் வளர்ச்சியைப் பற்றி அவர்கள் புரிந்து கொள்வதற்கான இதர பாடங்களும் வகுப்பு அறையில் சொல்லித் தரப்படுகின்றன.

போர்ட் நிதி நிர்வாகத்தின் உதவியைக் கொண்டு இந்த இளைஞர்களின் வீட்டு வசதி, கல்லூரிச் சம்பளம், உணவுக்காக மாதச் செலவு சுமார் 108 டாலர்கள் (ஏறக்குறைய ரூ. 500), புத்தகம், உடை, முதலிய இதர செலவுகள் சமாளிக்கப்படுகின்றன. இந்தியாவிலிருந்து போக வரப் பிரயாணச் செலவுகளை இந்திய சர்க்கார் மேற்கொள்ளுகிறது. அந்தந்தத் தொழிற்சாலைகளில் ஏற்படும் செலவுகளை அந்தந்த உருக்கு ஆலைகள் ஏற்றுக் கொள்ளுகின்றன. யுனைடெட் ஸ்டீல் கம்பெனியார் மட்டும் ஊதுஉலை முறையில் பயிற்சிபெற விருந்த 20 இந்திய இளைஞர்களுக்கு உபயோகமாகும் பொருட்டு 96 பக்கமுள்ள ஒரு புத்தகத்தைத் தயார் செய்தளித்தார்கள். ஜோன்ஸ் அண்ட் லாக்லின் என்னும் கம்பெனியாரோ, தங்களிடம் பயிற்சி பெற்ற ஒரே ஒரு மாணவனுக்காக ஒரு விரிவான பாட திட்டத்தையே வகுத்துக் கொடுத்தனர்.

முதன் முதலாக ஓர் இந்திய இளைஞர் பயிற்சி பெறுவதற்காக வருகிறார் என்று தெரிந்தவுடனே, உருக்குத் தொழிலாளர் சங்கத் தலைவர் அந்தந்த வட்டார உருக்குச் சாலைத் தலைவருக்கு அறிக்கையொன்று விடுவார். "வருங் காலத்தில் தொழில் அதிபர்களாக விளங்கப் போகும் இந்த இளைஞர்கள் நம்முடைய தொழிற்சங்க நடவடிக்கைகளைப் பற்றியும் ஜனநாயக முறையில் அவை எவ்வாறு இயங்குகின்றன என்பது பற்றியும் தெரிந்து கொள்ள வேண்டும். ஆகையால் அவர்களுடன் பூரணமாக ஒத்துழைக்கவும்" என்று தாக்கீது விடுவார்கள். இதன் விளைவாக, பல இந்திய இஞ்சினீயர்கள் தொழிலாளர் யூனியன் கூட்டங்களுக்குச் சென்றிருக்கின்றனர்; பலர் யூனியன் பள்ளிக்கூடங்களுக்குச் சென்றனர்; பல உருக்குத் தொழிலாளர் மகாசம்மேளனத்துக்குக்கூடச் சென்றனர். நேரிடையாக அவை எவ்வாறு இயங்குகின்றன என்பதை உணருகின்றனர்.

தொழிலாளிகள் இந்திய இளைஞர்களை தங்கள் இல்லங்களுக்கு விருந்துகளுக்கும் வாராந்தர விடுமுறைகளுக்கும், உல்லாசப் பொழுது போக்குக்கும் அழைத்துச் செல்லுகின்றனர். அவர்களுடன் தேவாலயங்களுக்கும், நாடகங்களுக்கும், நடனங்களுக்கும், சினிமாக்களுக்கும் சென்று அவர்களுடைய நண்பர்களுடன் பழகும் வாய்ப்பும் கிடைக்கிறது. இந்திய இளைஞர்கள் அமெரிக்க வாழ்க்கைபற்றித் தெரிந்து கொள்ள எப்படி ஆவலுள்ளவர்களாக இருக்கின்றனரோ அப்படியே அமெரிக்கர்களும் இந்தியாவைப் பற்றி அறிய ஆர்வமுள்ளவர்கள். இரு சாராரும் கூடிப் பழகும் வாய்ப்புகளும் ஏராளமாகக் கிடைக்கின்றன.

தொழிற்கூடத்தில் இந்திய இளைஞர்களின் திறமையைப் பற்றி அமெரிக்கத் தொழிலாளிகள் மிகவும் உயர்வாக மதிக்கின்றனர். யந்திரங்களை அப்படியே படம் எழுதி விடுவதில் நமது மாணவர்களின் திறமை அபாரம் என்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். ஒருவருடைய நோட்டுப் புத்தகத்தில் நானே சுமார் ஆயிரம் குறிப்புப் படங்களைப் பார்த்தேன். ஒரு தொழிற்சாலையில் இரும்புத் திம்மைகளைப் பலகைகளாக உருக்கி அடிக்கும் விதத்தைப் பற்றி ஒரு அறிக்கை தயாரிக்கும்படி இந்திய மாணவரைக் கேட்டுக்கொண்டார்களாம். அவர் தயாரித்த யதாஸ்து முதல் தரமாக இருந்ததைக் கண்டு வியந்த அத் தொழிலதிபர் அதையே மற்றவர்களுக்கும், பயன்படும்படி எல்லோருக்கும் விநியோகம் செய்து தந்தாராம்.

இவர்கள் பயிற்சி பெற்று வரும் உருக்குச் சாலைத் தலைவர்களிடம் நான் ஒரு கேள்வியைக் கேட்டேன். "இந்த இளைஞர்கள் இந்தியா திரும்பியதும் தாங்கள் கற்றதைக் கொண்டு இந்தியாவின் உருக்குச் சாலைகளின் உற்பத்தியைப் பெருக்கி நாட்டுக்குத் தொழில் வளர்ச்சியை ஏற்படுத்திக் கொடுக்க இவர்களால் முடியுமா?" இதற்கு அவர்கள் சொன்ன பதில் எனக்குப் பரவசமுண்டாக்கியது.

"ஆரம்பத்தில் ஆராய்ச்சிகள் நடத்தத்தான் இவர்கள் உதவுகிறார்கள் என்று எண்ணினோம். ஆனால் பயிற்சி முடிவடையும்போது, தொழிற்கூடத்தில் முன்னின்று வேலை செய்யும் திறமையடைந்து விட்டதுடன், வேலைத் திட்டம் வகுக்கவும், மற்றவர்களுக்கு வேலையைப் பகிர்ந்து கொடுக்கவும் நிர்வகிக்கவும் சாமர்த்தியமடைந்து விட்டனர். ஒருநாள் எங்கள் தொழிற்கூடத்தில் அவர்களே முழுப் பொறுப்பேற்று வேலை செய்ததைப் பார்த்தேன். நாங்களே அவர்களை வேலையில் அமர்த்திக் கொள்ளத்தயார்" என்று அவர் சொன்னார்.

# அவள் வாழ்வில் ஒரு நாள்

ஏ.எஸ்.ராகவன்

மலைப் பாதை வளைந்து வளைந்து போய்க் கொண்டேயிருந்தது. விண் நோக்கிப் பறப்பது போன்ற உணர்வு ஏற்பட்டது அபராஜிதாவுக்கு. வாஸ்தவத்தில் அப்படிப் பறந்துவிட மாட்டோமா என்றுதான் அவள் ஏங்கினாள். இருபுறமும் சரிவான பள்ளத்தாக்குகள், மலையை மீறி வளர்ந்திருக்கும் நெடு மரங்கள், பார்க்கப் பார்க்க அழகு, புதுமை, அதிசயம், ஆனந்தம்! பசுமையின் சிங்காதனம்!

காரை நிறுத்தி விட்டு அபராஜிதா கீழே இறங்கினாள். அதற்கு மேல் கார் செல்லவும் முடியாது. பாதை ஒற்றையடியாக மெலிந்துபோகிறது அங்கிருந்து.

கீழே, கீழே, கீழே பள்ளத்தாக்கின் மடியில் சிறுவனைப் போல் சிற்றாறு ஒன்று நடை போடுகிறது. அதன் வெண்மை அந்தப் பசுமைக் காட்டில் பளிச்சென்று மின்னியது. அபராஜிதாவுக்கு அந்த ஆற்றின் மடியில், தான் நடை போட வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது.

இன்று ஒரு நாள் அவளுக்கு விடுதலை. அவளாகப் பெற்ற விடுதலை. காரில் ஏறித் தானே ஓட்டிக் கொண்டு ஒரு நூறு மைல் தாண்டி வந்து விட்டதில் மனத்துக்குத்தான் எத்தனை குதூகலம்! இங்கு யாரும் அவளைக் கண்டு கொள்ளப் போவதில்லை. அதை நினைக்கவே அவளுக்கு இன்பமாயிருந்தது.

காரைப் பூட்டி விட்டு அபராஜிதா சரிவில் இறங்க ஆரம்பித்தாள். மாற்று உடைகளை எடுத்து வரவில்லை. இப்படி ஒரு அருவியை நோக்கி ஓடி வருவோம் என்று அவள் எண்ணவுமில்லை. என்றாலும் தலை துவட்டிக் கொள்ள ஒரு துண்டு இருந்தது. அதோடு சாப்பிடுவதற்கென்று சில பலகார வகைகள் பையில் இருந்தன. அவை இருப்பது கூட அவளுக்குத் தெரியாது. பொன்னம்மா எடுத்து வைத்திருக்கிறாள். அவளுக்கு நன்றி கூற வேண்டியதுதான்.

சரிவில் இறங்குவது சுலபமாக இல்லை. ஆனால் இன்பமாக இருந்தது. குத்துக் குத்தாக நின்ற பாறைகளை ஏமாற்றிக் கொண்டு ஜாக்கிரதையாகக் கீழ்நோக்கிச் செல்ல வேண்டியிருந்தது.

அந்தப் பிரதேசத்தில் கண்ணுக்கு எட்டிய வரையில் பசுமைதான். மனித வாடையே இல்லை. இதுதான் அபராஜிதாவுக்குப் பெரும் ஆறுதல். இத்தனை நாட்களாக மனிதக் கும்பலிடையே அவள் வளர்ந்தவள். பொழுது விடிந்து பொழுது போனால் அந்தக் கும்பல் ஓயாது அவளைப் புகழ்ந்த வண்ணம் இருந்தது; அங்கு அமைதி இல்லை.

தரை இன்னமும் கண்ணுக்குத்தான் எட்டியது; காலுக்கு எட்டவில்லை.

இங்கிருந்து குதித்தால் என்ன?

இந்த எண்ணம் எழுந்ததும், குழந்தை போல் அவள் சிரித்தாள்.

சரியான பாதை இல்லை. முள்ளும் கல்லும் வழிமறித்தன. அவற்றிடையே அவள் நடக்கலானாள். மனம் பஞ்சு போல் பறந்தது. இந்த இன்பத்தை அவள் இதுவரையில் அனுபவித்ததில்லை. செயற்கை மயமான வாழ்வில் காலம் தள்ளிக் கைத்துப் போயிருக்கிறது மனம். ஏதோ ஒரு படத்துக்காக, மலை

மனிதக் கும்பலின் புகழ்ச்சியிலிருந்து விடுதலை பெற்று வெகு தூரம் போய்விடத் துடித்தாள் அவள். யாரும் அவளை இனம் கண்டு கொள்ள முடியாத இடத்துக்கு வந்தபோது, அவன் தோன்றினான். அவளை இன்னாரென்று தெரியாத வரையில் அவன் அன்பாக இருந்தான். தெரிந்த பின் பக்குவி விட்டான். ஆனால் அவளுக்கு.........

உச்சியிலிருந்து அவள் உருண்டு விழுந்தாள். விழுவது போலப் பாவனைதான். விழுந்ததென்னவோ பத்தடிக்குள்தான்.

நடை வீண் போகவில்லை. அருவியை அவள் அடைந்தே விட்டாள். பளிங்கு போலத்தான் தண்ணீர் ஓடியது. ஒரு வாய் குடித்ததில் உடலே குளிர்ந்தது. தேனை மயக்கும் தித்திப்பு. இத்தனை அதிசயங்களையும் ஆண்டவன் இந்தப் பள்ளத்தாக்கில் கொண்டு வந்து புதைத்து வைத்திருக்கிறானே!

அங்கே இறங்கி நீராட நினைத்தவள் அருவியின் பாதையை ஒரு முறை பார்த்தாள். தொலைவில் மலையின் மேலிருந்து அது குதித்து இறங்குவதைக் கண்டதும், இந்த இடத்தைவிட அந்த வீழ்ச்சியே நல்ல இடம் என்று தீர்மானித்துக் கொண்டாள். ஓரே துள்ளலும், ஓட்டமுமாக நடந்தாள், அந்த லட்சிய பூமியை நோக்கி.

அன்றாடம் வெந்நீரில் குளித்துப் பழகிய உடல் நெடுநேரம் அருவியின் வீழ்ச்சியைத் தாங்கக் கூடவில்லை. 'அம்மாடி, என்ன குளிர்ச்சி!' சீக்கிரமே கரைக்கு வந்து உடை தரித்துக் கொண்டாள். தலையைக் கோதி உலர்த்திய வண்ணம் அவள் வந்து நின்றாள்.

அபராஜிதாவின் அழகைப் பற்றிச் சொல்வது அழகுக்கு அழகு செய்வது போலத்தான். காட்டுச் சந்தனக் கட்டையின் ஒண்மையும், யானைத் தந்தத்தின் செழுமையும் கலந்த உடற் கட்டு. மானைப்போன்ற துள்ளல். அருவியைப் போன்ற கலகலப்பு. மலையைப் போன்ற கம்பீரம். இந்தப் பிரதேசத்தின் எளிமையினுள் அடங்கியிருக்கும் பேரதிசயம் போன்ற மனம். உண்மையில் அவள் இந்த வனத்தைச் சேர்ந்தவள். இப்போதுதான் அவள் இதை உணர்ந்தாள்.

இப்படி நின்ற அபராஜிதா முதன் முதலாக ஒரு மனித ஜீவனை அங்கே கண்டாள். மலையின் சரிவில் அந்த மனிதன் மெள்ள மெள்ள நடந்து வந்து கொண்டிருந்தான். அநாயாசமாக அவன் நடந்து வந்ததைக் கண்டதும் அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. சிறிது நேரம் மரங்களிடையே அவன் மறைந்து போனான். பின்னர் திடீரென்று அவளுக்கு வெகு அருகில் அருவியின் தலையில் அவன் காட்சி யளித்தான்.

அங்கிருந்தபடி அவளையே கண்கொட்டாமல் பார்த்தான் அவன்.

பார்வையில் அவளைக் கணித்துக் கொண்டவன் போல் அந்த மனிதன் இறங்க ஆரம்பித்தான். அபராஜிதா பயத்தினால் உரக்கக் கத்தியே விட்டாள். அந்த மனிதன் அருவியோடு அல்லவா உருள்கிறான்!

ஆனால் அவள் பயந்ததுபோல் எதுவும் நடைபெறவில்லை. அருவி அவனை ஏந்திக் கொண்டு கீழே குதித்தது. எய்த அம்பு போல் அவன் சிரித்துக் கொண்டு நிலை பிறழாமல் நின்றான். தலையிலும் முதுகிலும் விழுந்த நீரைத் தடுத்தபடியே அவளைப் பார்த்துச் சிரித்தான்.



என்னென்னவோ காட்சிகளைப் படமாக்குகிறார்களே, இந்தக் காட்சியை மட்டும் படமெடுத்தால் எத்தனை தத்ரூபமாக இருக்கும்! மனம் தனது பழைய தடத்தில் ஓடியது. அவளுக்கு வெட்கமாக இருந்தது, இந்த நினைப்பு. எதை மறக்க வேண்டுமென்று ஓடி வந்தாளோ, அதே நினைப்பா மீண்டும்?

குளித்து முடித்து விட்டு அவன் கரைக்கு வந்தான். தலையிலிருந்து தண்ணீர் சொட்டிக் கொண்டிருந்தது. அதற்கிடையே அவன் சிரித்துக் கொண்டேயிருந்தான்.

தன் துண்டை அவனிடம் நீட்டினாள் அபராஜிதா. 'வெடுக்'கென்று அதைப் பிடுங்கிக் கொண்டான் அவன். அந்த முரட்டுத்தனம் அவளுக்கு அருவருப்பாக இருந்தது. தலையைத் துவட்டி விட்டுத் துண்டை நீரில் நனைத்துத் துவைத்தான் அவன். துவைப்பதா? கோடரி கொண்டு பிளப்பதுபோல் பாறையைவெட்டினான்.

அபராஜிதா இதைப் பார்த்துக் கொண்டேயிருந்தாள்.

''ஏன்? நீ குளிக்க வில்லையா?'' என்று கேட்டான் அவன்.

அவள் சிரித்தாள். ''ஆயிற்று...தலை கூட இன்னும் சரியாக உலரவில்லையே!'' என்று கூறினாள்.

''வெறுமே காக்காய் முழுக்குப் போட்டால் தீர்ந்ததா? ஒரு நாழிகை குளித்தால்தான் உடம்பு பருக்கும்'' என்றான் அவன்.

அவளுக்குச் சுருக்கென்றது. கண நேரத்தில் அவள் குளித்து முடித்து விட்டாள் என்பது இவனுக்கு எப்படித் தெரிந்தது?

அவள் பேசவில்லை.

அவனே பேசினான்... ''உனக்குப் பசியாக இல்லையா?''

''பலகாரம் கொண்டு வந்திருக்கிறேன்'' என்று பையைக் காட்டினாள்.

அவன் உடனே உரிமையாக அந்தப் பையை எடுத்து அதிலிருந்த பொட்டணத்தை வெளியே எடுத்தான். சிரித்தபடியே அதைப் பிரித்தான். ''இது போதுமா?'' என்று கேட்டான், அவளைப் பார்த்தபடியே.

''போதுமாவா? இரண்டு வேளை உணவல்லவா அது?''

''இரண்டு வேளைக்கா? இதுவா?...சரிதான்!'' என்று உரக்கச் சிரித்தான் அவன். ''அதனால்தான் நீ மிகவும் மெலிந்து போயிருக்கிறாய். நிறையச் சாப்பிட வேண்டாமா? உடம்பு இப்படி இருந்தால் வேலை செய்ய முடியுமா?''

அபராஜிதா இதைக் கேட்டு உள்ளூறச் சிரித்துக் கொண்டாள். வாஸ்தவத்தில் இப்போது தன் உடல் சற்றுப் பருத்து விட்டதே என்று அவள் கவலைப்பட ஆரம்பித்திருந்தாள். நாட்டியத்துக்கு இந்தப் பருமன் கூடாதென்றும், இளைப்பதற்காக மருந்து சாப்பிட வேண்டும் என்றும் அவள் எண்ணிக் கொண்டிருந்தாள். ஆனால் இந்த மனிதனோ அவள் மெலிந்து காணப்படுவதாகக் கூறுகிறான்!

''அது சரி...நீ யார்?'' என்று கேட்டான் அவன். பொட்டணத்திலிருந்த பலகார வகைகள் அவன் கடைவாய்க்குக் கூடப் போதாது போலிருந்தன.

''நானா? என்னைத் தெரியவில்லையா?'' என்று திருப்பிக் கேட்டாள் அபராஜிதா.

''எனக்கு எப்படித் தெரியும்?''

அவனுக்குத் தன்னைத் தெரியாது என்பதில் அவளுக்குத் திருப்தி. இல்லாவிட்டால் அவனும் புகழத் தொடங்கி விடுவானல்லவா!

''நான் ஒரு பெண்'' என்றாள் அவள்.

''ஓஹோஹோ...நீ பெண்ணா? அதிசயம்தான்...அப்படி நான் நினைக்கவேயில்லை'' என்று பலக்கச் சிரித்தான் அவன். பெரிய ஹாஸ்யத்தை உதிர்த்த நினைவு அவனுக்கு. ''சரி சரி....ஏ பெண்ணே, இங்கு வா. இந்தப் பலகாரத்தைச் சாப்பிடு. நான் சில பழங்கள் கொண்டு வருகிறேன்.'' அவன் எழுந்து காட்டுக்குள் நுழைந்தான்.

அபராஜிதாவுக்கு உள்ளூற வியப்பும் மகிழ்ச்சியும் அலைமோதின. அந்த மனிதனிடம் ஏதோ ஒரு அபூர்வக் கவர்ச்சி இருக்கத்தான் இருந்தது. அவனுடைய உடல் வனப்பைவிட, அவன் தன்னைப் பற்றி ஏதும் அறியாத பாமரன் என்பதே அவளுக்குப் போதுமானதாக இருந்தது. இந்தக் காட்டில் வசிக்கும் மனிதன் போலிருக்கிறது!

அவன் பழங்களோடு திரும்பிவந்தான்.

''அடேயப்பா! இவ்வளவு எதற்கு?'' என்று கூறினாள் அவள், அவன் கொணர்ந்த பழக் குவியலைப் பார்த்து.

''எதற்கா? சாப்பிடத்தான்...காசு தர வேண்டாம். சும்மா சாப்பிடு.''

அவள் அவற்றை உரித்துச் சாப்பிட ஆரம்பித்து விட்டாள். அதிலொன்றும் இதிலொன்றுமாக ருசி பார்த்து விட்டுக் கையைக் கழுவ எழுந்தாள் அவள்.

அவனுடைய முரட்டுக் கரம் அவள் கையைப் பற்றியது. ''ஏய்! ஏன் அதற்குள் எழுந்து விட்டாய்?'' அவள் மௌனம் சாதித்தாள். அவன் கோபங்கொண்டு ''உட்கார்...நீ யார்? அதைச் சொல்'' என்று கூறி அவள் கூந்தலை உலுக்கினான்.

''அதான் சொன்னேனே...நான் ஒரு பெண் என்று'' என்றாள் அவள்.

# வாழ்க்கையில் நீங்கள் பெறுவதென்ன?

*விளங்கும் வீரியமா*



அல்லது



வாழ்க்கையின் சந்தோஷத்தை கவலை, தெம்பின்மை, சிரமம் முதலியன கெடுக்காமல் காத்துக்கொள்ளுங்கள். வாழ்க்கையில் உண்மை வெற்றி தெம்பினால்தான் ஏற்படும்—ஸனடோஜன் புதுபலம் அளித்து, உடல்வலிமை மனசக்தி அதிகரிக்கச் செய்கிறது. 25,000 த்துக்கு மேற்பட்ட வைத்தியர்கள் அதன் அபூர்வ சக்தியளிக்கும் குணத்திற்கு அத்தாட்சி அளிக்கிறார்கள்.



## ஸனடோஜன்
-மிக்க உயர்ந்த பால் டானிக்

வியக்கத்தக்க
நீளமான
செழிப்பான
கூந்தல்



ரோமா
கூந்தல் வளர்க்கும் டானிக்





EPHRILIME
எப்ரிலைம்



அவள் கொடுக்கும் இந்த மருந்தை உட்கொண்ட ஒரு சில நிமிஷங்களிலேயே அவனது ஆஸ்த்மா உபாதைகள் மாயமாக மறையும்.

நீண்ட நாள்பட்டதும், மிக்க உபாதை தரக்கூடியதுமான மார்ச்சளி, ஆஸ்த்மா முதலிய நோய்களுக்கு ஓர் சிறந்த ஊரானியற்ற மருந்து.

யூனியன் டிரக் கம்பெனி லிட்.
மதராஸ் டிப்போ: 2, ஜோன்ஸ்லேன், மதராஸ்-1



நோயால் வருந்தும் பொழுதும், நோயிலிருந்து குணம் பெறும் பொழுதும் யாவருக்கு ஒரு சிறந்த டானிக்



நல்ல தேகவளர்ச்சியையும், திரும்ப வாலிபத்தையும் கொடுக்கக் கூடிய ஆயுர்வேதிக் டானிக்.

ZANDU

ச்யவன்பிராஷ்
லேஹியம்



ஜண்டு பார்மஸூடிகல் வொர்க்ஸ் லிட்.,
கோகலே ரோடு ஸௌத், பம்பாய்-28.

"உன் பெயர்?"

"பெயரா?...உம்...வந்து...மீனா."

"மீனாவா? நல்ல பெயர்...எனக்கு அந்தப் பெயரைப் பிடித்திருக்கிறது."

அவள் 'உர்'ரென்று முகத்தை வைத்துக் கொண்டாள்.

அவன் மீண்டும் சிரித்தான். "நீ அசட்டுப் பெண்தான். சந்தேகமேயில்லை. இதோ பார், நீ சினிமா பார்த்திருக்கிறாயா?" என்று கேட்டான்.

"சினிமாவா?...இல்லை...ஏன்?"

"நானும் பார்த்ததில்லை. நாலு வருஷங்களுக்கு முன்னாலே ஒரே ஒரு படம் பார்த்தேன். நல்ல படம்...உம்... இப்போ நினைவு வருது. அதிலே ஒரே ஒரு பொம்பளை உன் மாதிரியே இருந்தா."

அபராஜிதாவுக்கு மூச்சு நின்று விடும் போலிருந்தது. தன்னை அவன் கண்டு கொள்வானோ என்கிற பீதியில்.

"ஆனால் அவள் எங்கே? நீ எங்கே? அவள் நல்ல புத்திசாலி. மலையிலிருந்து உருண்டு விழுந்தாள் பார், நான் அசந்து போயிட்டேன்."

'நிஜமாகவா?"

"ஆமாம்."

"வேடிக்கைதான். கொஞ்ச நேரத்துக்கு முன்னால் நீ இந்த அருவியில் குதித்து வந்தாயே, அதைவிட அழகாகவா இருந்தது அவள் நடித்தது?"

"சந்தேகமில்லாமல். உனக்கு அவளைத் தெரியாது. தெரிந்தால் இப்படிப் பேச மாட்டாய். குதித்தது என்ன பிரமாதமாக இருந்தது" என்றான் அவன்.

அவள் சிரித்தபடியே வெறுமனே வீற்றிருந்தாள்.

"நான் மறுபடியும் குளிக்கப் போகிறேன்" என்று எழுந்தான் அவன்.

"மறுபடியுமா?"

"ஆமாம். இல்லா விட்டால் சாப்பிட்டது எப்படி ஜீரணமாகும்?"

அவள் பதில் சொல்லவில்லை.

"மீனா! உன் கூந்தல் மிகவும் அழகாக இருக்கிறது" என்று எழுந்தான் அவன்.

"அதனால்தான் அதைப் பிடித்து உலுக்கினாயோ?" என்று கேட்டாள் அவள். குரலில் கேலிதான் பரிணமித்துக் கொண்டிருந்தது.

"ஆமாம்! எனக்குப் பிடித்தமானதாக இருந்தால் அப்படித்தான். மீனா நீ நிஜமாகவே நல்ல அழகியாக இருக்கிறாய். நீ யார்? இங்கே எப்படி வந்து சேர்ந்தாய்?"

"நான் யாராக இருந்தால் உனக்கு என்ன?"

"சொல்லா விட்டால் போயேன். அதை நான் கண்டு பிடித்துவிடுவேன்" என்று சிரித்தான் அவன். பிறகு அவனா



சுதேசமித்திரன் செய்தி ஆசிரியர் திரு எஸ். லக்ஷ்மிநரசிம்மன் அவர்களின் புதல்வர் திரு எஸ். சீனிவாசனுக்கும் செள. அம்புஜவல்லிக்கும் விவாகம் சிறப்பாக நடைபெற்றது.

கவே என்னவோ கணக்குப் போடுவது போல் தனக்குள் பேசிக் கொண்டான். "உன்னைப் பார்த்தால் எனக்கு அந்தச் சினிமாக்காரிதான் ஞாபகத்துக்கு வருகிறாள். அவள் மட்டும் என் கண் முன்னால் வந்தால்..."

"என்ன செய்வாய்?"

"என்ன செய்வேன் என்று கேட்கிறாய்?...இந்தக் காட்டில் விளையும் அற்புதமான மலர்களால் மாலை தொடுப்பேன்...அவள் காலடியில் வைத்துப் பூஜிப்பேன்....அவள் என்ன சொன்னாலும் செய்வேன்."

"இல்லை...அவள் தலையைப் பிடித்து உலுக்குவாய்" என்று சிரித்தாள் அபராஜிதா. "உன்னுடைய சுபாவம் அதுதானே!"

அவன் கோபமாகத் தன் கையிலிருந்த பழத்தை வீசி எறிந்தான். "உனக்கு மூளையே இல்லை. உன் முகரைக்கு அவளைப் பார்த்துப் பொறாமைப்படுகிறாயோ நீ! அவளுடைய கூந்தலைத் தொடும் பாக்கியம் இந்தக்கோபாலுக்குக் கிடைக்குமா? அவள் நிஜப் பெண்ணில்லை. மோகினி தெரியுமா?..மீனா, நீ மோகினியை எப்போதாவது பார்த்திருக்கிறாயா?" என்று கேட்டான்.

"உம்..."

"எங்கே?"

"கண்ணாடியில்."

"நீ பொய் சொல்கிறாய்."

"ஆமாம். பொய்தான் சொல்கிறேன். நீ போய்க் குளித்து விட்டு வா. எனக்கு நேரமாகிறது."

அவன் அருவிக்குச் சென்றான். குளித்தபடியே ஏதோ ஒரு பாட்டை முணுமுணுத்தான்.

மீனா தலையை உலர்த்தியபடி இங்கு மங்கும் நடந்தாள். ஒரொரு தடவை



அவள் : 'இன்னும் கொஞ்சம் பின்னால் போங்க, நன்றாக விழுவீர்கள்' என்று சொல்லாதீங்க! நான் அதை ஏற்கனவே பத்திரிகையில் ஹாஸ்யமாய்ப் பார்த்திருக்கேன்! நீங்க வேணுமானால் பின்னாலே போங்க.

அவன் குளிப்பதைக் கடைக் கண்ணால் பார்க்காமலிருக்க முடியவில்லை. வலிமை மிக்க அந்த உடல் நீரில் பளபளத்தது.

"சரி...நாம் போவோமா?" என்றபடி வந்தான் அவன்.

"நல்லது, கோபால்! உன்னைப் பார்த்தது எனக்கு மிகவும் சந்தோஷமாக இருக்கிறது. நான் வரட்டுமா?" என்று விடைபெற முற்பட்டாள் அபராஜிதா.

"அடேடே! எங்கே புறப்படுகிறாய்? நானும் வருகிறேன்."

"நீ வராமலிருப்பது நல்லது."

"ஏன்?"

"உன் மோகினியைப் பற்றிய நினைவு கலைந்து போகும், கோபால்...நான்தான் அசட்டுப் பெண்ணாயிற்றே!"

"இதுவா விஷயம்!" என்று உரக்கச் சிரித்தான் அவன். "நீ அசட்டுப் பெண்தான். சரி, சரி, நட...உன்னை நான் விழுங்கி விடமாட்டேன், போ."

"நல்லவேளை பிழைத்தேன்...உன் விருப்பம்போல் எனக்கு வழிகாட்ட வரலாம்."

இருவரும் நடந்தனர். தன்னைப் பற்றிக் கோபால் விஸ்தாரமாகப் பேச ஆரம்பித்து விட்டான். அவற்றில் சுவாரசியமாக ஏதும் இல்லை அபராஜிதாவுக்கு. ஒன்று மட்டுமே அவளைக் கவர்ந்தது; கவலைக்கு உள்ளாக்கியது. சினிமாவைப் பற்றிய அவனது பிரமை, அந்த மோகினியினிடம் அவனுக்கு இருந்த காதல் — இதை எண்ணி ஒரு புறம் மகிழ்ச்சியும், மற்றொரு புறம் வேதனையும் அடைந்தாள் அவள்.

காரை அடைந்த போது அபராஜிதாவுக்கு நெஞ்சு கனத்தே விட்டது. ஏன் என்று விளங்கவில்லை. கோபால் தன்னையும் அறியாமல் அவளை நெருங்கி வந்து விட்டான். அவனுடைய எளிமையும் முரட்டுத்தனமும், சிரிப்பும் அடங்காத்தனமும், பிரமையும், அசட்டுத்தனமும் அவளுக்குப் பிடித்துப் போய் விட்டன. ஆனால் இதே போல் அவளுடைய உண்மை சொரூபம் தெரிந்தால் மாறி விடுவான். அதை நினைக்கவே அவளுக்குப் பயமாக இருந்தது.

"இந்தக் கார் உன்னுடையதா?"

"இல்லை. என் சிநேகிதியினுடையது."

"நீ பணக்காரியா?"

"இல்லை."

"ஏழை மாதிரி இல்லையே நீ? ஏழைகளுக்கு உன்னைப் போல் உடம்பு இருக்காது. பேச்சு இருக்காது."

"அப்படியா? நீ பணக்காரனா?"

"இல்லை. பரம ஏழை."

"ஆனால் ஏழை மாதிரி இல்லையே நீ? ஏழைகளுக்கு உன்னைப் போல் பேசவும் சிரிக்கவும் தெரியாதே!"

"நீ கெட்டிக்காரப் பெண்."

"நல்ல வேளை..."

"மீனா!" என்றான் அவன். அடுத்த கணம் அவளுடைய கூந்தல் அவன் கைகளில் சிக்கியது. ஆனால் இம் முறை அது அவன் அரவணைப்பில் குலுங்கியது. அவள் தன்னை மறந்து விட்டாள்.

"நீ நல்லவள், மிகவும் நல்லவள்!" என்றான் அவன்.

தன்னை விடுவித்துக் கொண்டு அவள் கலகல வென்று சிரித்தாள்.

"நானும் காரில் வரட்டுமா?"

"ஊஹூம்...வேண்டாம். என் சிநேகிதி கோபித்துக் கொள்வாள்."

"அவள் ஏன் கோபிக்க வேண்டும்? காரில் நாலு பேர்கள் போகலாம் போல் இருக்கிறதே!"

"வேண்டாம், கோபால்! சொல்வதைக் கேள். அப்புறம் விபரீதமாக ஆகிவிடும். நான் நாளைக்கு என் காரில் வருகிறேன். அப்போது நீ அதில் வரலாம். என்ன?"

"நிஜமாகவா?"

"உம்..."

"சரி, போய் வா."

அபராஜிதா காரில் ஏறி அமர்ந்தாள் உண்மையில் அவளுக்குப் போகவே மனமில்லை. ஏன் இப்படி? மற்றொரு முறை அந்த மோகினியைப் பற்றிய அவனுடைய கனவைக் கேட்க வேண்டும் என்கிற தாபம் தொடர்ந்தது.

காரோடு போராடுவது போல் பாவனை செய்து விட்டு, "பழுதாகி விட்டதே. என்ன செய்வது? எப்படியும் நான் போயாக வேண்டும்" என்று அவள் கீழே இறங்கினுள்.

"கவலைப்படாதே, மீனு! என் வீட்டில் தங்கியிருந்து விட்டுக் காலையில் போகலாம். வா."

"உன் வீட்டிலா ?"

"ஏன் பயப்படுகிருய்? உன்னை நான் விழுங்கிவிட மாட்டேன்."

"விழுங்கினுல் சந்தோஷம்தான்...சரி. புறப்படு. வேறு வழியில்லை."

வழியில் அவன் மறுபடியும் ஒருமுறை கேட்டான். "நீ யார்? நிஜமாகச் சொல், நீதானு அந்த மோகினி ?"

"அப்படித்தான் வைத்துக் கொள்ளேன்" என்றுள் அவள்.

இதைக் கேட்டு அவன் கலவரம் அடைந்ததுபோல் காணப்பட்டான். "நீ மோகினியாக இருந்தால் இந்தக் கோபால் இப்போதே உயிரை விட்டு விடுவான், தெரியுமா?" என்றுன்.

"ஏன்?"

"மோகினியின் தலையை உலுக்குவது தர்மமில்லை, மீனு!"

"நீ சரியான முரடன். உனக்கு மூளையே இல்லை."

"என்ன சொன்னுய்?"

"நீ மோகினிதான். ஆனுல் அந்த மோகினி இல்லை. அவள் வேறே...நீ வேறே..." என்றுன்.

வீட்டை அடைந்ததும் அபராஜிதா களைத்து உட்கார்ந்தாள். வீடா இது? புறாக் கூண்டு போலிருந்தது. கோபாலின் வயதான தாய், தந்தையரை நமஸ்கரித்தாள் அவள். அதில் எத்தனை ஆனந்தம் அவளுக்கு !

இரவு அங்கேயே படுக்கை. கோபாலும் தந்தையும் வெளியே போய் விட்டார்கள். அவர்களுக்குப் படுக்கை மரத் தொட்டில்.

காலையில் அவள் எழுந்தபோது பனி மூட்டம் விலகவில்லை. கோபால் வந்தான். "நீ யார் என்பதைக் கண்டு பிடித்து விட்டேன்" என்றுன்.

"கண்டு பிடித்து விட்டாயா?" என்று கூவினுள் அவள்.

"உம்...நீதான் அந்த மோகினி. சந்தேகமே இல்லை. என்னை மன்னித்துவிடு.. இந்தக் கோபால் ஒரு பிழையும் செய்யவில்லை. என்மீது ஏன் இத்தனை கோபம் உனக்கு?" அவன் குனிந்து அவள் காலடியில் உட்கார்ந்தான். அடுத்த கணம் ஒரு பெரிய மாலை அவள் காலில் வந்து விழுந்தது. தொடர்ந்து கோபாலின் தலையும் சாய்ந்தது.



மனைவி : அடுத்த ஜன்மத்திலே நாம் இரண்டு பேரும் சந்தித்தோமானுல் என்னைத்தானே நீங்கள் கல்யாணம் செய்து கொள்வீர்கள் ?

கணவன் : அனுபவியேமா என்னை என் இப்ப சண்டைக்கு இழுக்கறே ?

அபராஜிதா பதறிப் போய் அவனைப் பற்றினுள். "கோபால்! எழுந்திரு நீ ஒரு பிழையும் செய்யவில்லை. உன்மேல் எனக்குச் சிறிதும் கோபம் இல்லை...எழுந்திரு..." என்றுள்.

அவன் தலை நிமிர்ந்தது. ஆனுல் இதென்ன? ஒரே கண்ணீர் அருவி. அவன் குலுங்கக் குலுங்க அழுது கொண்டிருந்தான்.

"நீ நிஜப் பெண் இல்லை. மோகினி. உன்னை என்னுல் பார்க்கக்கூட முடியாது. நீ போய் விடு."

"கோபால்..."

ஆனுல் அவன் நிற்கவில்லை. ஓடியே போய் விட்டான். அபராஜிதா அவனுக்காகக் காத்திருப்பதில் பயனில்லை என்பதை உணர்ந்தாள். வாழ்க்கையில் ஒருநாள் அவள் அதிர்ஷ்டசாலியாக இருந்தாள். அந்த ஒருநாள் இனித் திரும்ப வரப் போவதில்லை. மீண்டும் அவளுடைய பழைய வாழ்க்கையில் நுழைந்து கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. புகழின் சிறைக்குள் புழுங்க வேண்டிய தொன்றே அவளது விதி. ஏதோ அபூர்வமாக ஒரு பாமரன் அவளிடம் ஓடி வந்தான். அவள் யார் என்று தெரியாத வரை, அவளைப் பூஜித்தான். தெரிந்தவுடன் அவளை மறந்து நிழலைப் பூஜிக்கிருன். அதை நினைக்க நினைக்க வேதனையே வடிந்தது அவள் நெஞ்சத்தில்.

கார் மலைப்பாதையில் கீழ் நோக்கிச் சரிந்தது. கார் மட்டுமா? அவளும் கூடத்தான்.

அந்த அருவியில் இனி மீண்டுமொரு நாள் அவள் வந்து குளிக்கவும் கூடும். ஆனுல் கோபால் வருவானு?

காரை நிறுத்தி விட்டு அபராஜிதா குலுங்கக் குலுங்க அழுதாள். ஏனே?

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 99. சித்தர் அருளியவை—மற்றுஞ் சில

இவ்வளவுதானா நமது சித்தர்கள் தமிழில் இயற்றிய வைத்திய நூல்களிலிருந்து கிடைக்கும் முறைகள்? இல்லை, அவர்கள் தெரிவித்துள்ள முறைகளோ அனந்தம். நானென்ன அவர்கள் எழுதிய எல்லா நூல்களையும் படித்து முடித்து விட்டேனா? இன்னும் படிக்க வேண்டிய நூல்கள் எத்தனையோ இருக்கின்றன. ஆகவே, 'சித்தர்கள் நிறுவிய நூல்கள் வாயிலாகக் கிடைப்பது இவ்வளவுதான். இனி வேறு ஒன்றுமில்லை' என்று சொல்ல முடியாது. படித்தவற்றுள்ளும் பயன் தரக் கூடியவை என்று தோன்றும் முறைகளையும், பயன் தருபவை என்று தெளிந்தவைகளையுந்தான் நேயர்களுக்கு இந்தக் கட்டுரைகள் மூலம் தெரிவித்து வருகிறேன். தற்போது எழுதி வரும் விஷயத்தில் இன்னும் சில மருந்து முறைகளும் இருக்கின்றன. மூலக் கிரந்தங்களிலிருந்து தேடிப் பிடிப்பது பெரிய காரியம். அவற்றை ஓரிடத்தில் கிடைக்கும்படி செய்வது அவசியம் விரும்பத் தக்கதென்பது என் கருத்து. ஆகவே...

9. யானைக்கால் வீக்கமுள்ள இடங்களில் சிற்றாமணக்கின் நெய்யை மெல்லியதாகத் தடவி அதன்மேல் குன்றி இலையை ஒட்ட வைக்கவும். அப்போது ஒருவித விறுவிறுப்பு உண்டாகி வலி நீங்கும்; வீக்கமும் குறையும்.

10. அமுக்கிராங்கிழங்கு பச்சையாகக் கிடைக்குமானால் அதைப் பசுவின் மூத்திரம் விட்டு அரைத்து, யானைக்கால் வியாதியில் அழற்சியுடன் வீக்கமுற்றிருக்கும் கவட்டியிலுள்ள கழலை (கிரந்தி)களின் மேல் பற்றிட வீக்கமும் அழற்சியும் வலி முதலியனவும் குறையும்.

11. பச்சையாக அமுக்கிராங் கிழங்கு கிடைக்காவிடின் காய்ந்ததையே சிறிது கக்குடன் சேர்த்து அரைத்துப் பூசினாலும் மேற்சொன்ன பலன் கிடைக்கும்.

12. கற்றாழையில் யானைக் கற்றாழை என்றால் பலருக்குத் தெரியலாம்; சிலருக்குத் தெரியாமலும் இருக்கலாம். இது அமெரிக்காவிலிருந்து இந்தியாவுக்குக் கொண்டுவரப் பட்டதாம். இது மடல் மடலாக விரிந்து 4-6 அங்குல அகலமுள்ள (இலைகள்) மடல்கள் 2 முதல் 5, 6 அடி வரையில் நீளமும் இருபுறத்திலும் முட்களுடன் 12 அடி உயரம் வரையில் குறிஞ்சி, முல்லை நிலங்களில் வளரும். இராகாசி மடல் என்றால் பலர் புரிந்து கொள்வர். இருப்புப் பாதையின் இரு புறங்களிலும் வளர்க்கப்படுவதால் இதை ரயில் கத்தாழை என்று சொன்னால் எல்லோருக்கும் புரியும். வரகு வைக்கோலின் தீயில் இதன் மடலை வாட்டி முறுக்கிப் பிழிந்தால் சலசல வென்று தாராளமாகச் சாறு கிடைக்கும். இச்சாற்றில் போதுமான அளவு கேழ்வரகு மாவைக் கூட்டி, குழம்பு பதம் வரும் வரையில் காய்ச்சிப் பொறுக்குஞ் சூட்டில் இருக்கும்போது யானைக்கால் வீக்கம், அது சம்பந்தமான கிரந்தி வீக்கம் ஆகியவற்றின் மேல் பற்றிட்டால் வீக்கம் கரையும். (கையினால் தொட்டால் கற்றாழையின் நாற்றமும் கசப்பும் கைவிட்டு அகலவே செய்யாது. சாப்பிடும்போது இந் நாற்றமும் கசப்பும் கைவிட்டு அகலவே செய்யாது. சாப்பிடும்போது இந் நாற்றமும் கசப்பும் அன்னத்தில் வெறுப்பையூட்டும். ஆகவே, கையினால் தொடாமல் இதைத் தயாரிக்க வேண்டும். அல்லது இடது கையினால் தொட்டால் பாதகமிராது.)

சோற்றுக் கற்றாழையைக் குறுக்கில் நறுக்கினால் வடியும் பால் உலர்ந்ததும் ஒரு பொருள் கிடைக்கும். இதை இரத்த போளம் என்பர். நேரிடவே கடையிலிருந்து கிடைக்கத் தக்கது. இதைப் பொடித்துக் கோழி முட்டையின் வெண்பாகத்தில் அரைத்து மேலுக்குப் பற்றிடுவதால் யானைக்கால் வீக்கமும் - அது சம்பந்தமான கவட்டியின் கிரந்தியி



"ஆபீஸில் என் மேஜைக்குத் தனியாக ஒரு கடிகாரம் வேணும்!"

"அலாரம் கடிகாரமாக வாங்கித் தரச் சொல்கிறேன்!"

## இதுவன்றோ நேர்மை!

நிர்வாகத் துறையில் நேர்மை தவறாமல் நாட்டின் நலனுக்குச் சேவை செய்வது என்றால் எப்படிச் செய்ய வேண்டும் என்பதற்கு ஒரு உதாரணத்தை எடுத்துக் காட்டாகக் கூறுகிறோம். ஸர் எம். விச்வேச்வரய்யா மைசூர் சமஸ்தானத்தின் திவானாகப் பணியாற்றியபோது கிராமங்களுக்கெல்லாம் விஜயம் செய்வாராம். அந்தக் காலத்தில் கிராமங்களுக்கு மின்சார வசதி பரவவில்லை. மெழுகுவர்த்திகளைத்தான் வெளிச்சத்துக்காக உபயோகித்தார்கள். திரு விச்வேச்வரய்யா எப்போதும் இரண்டு ஜோடி மெழுகு வர்த்திகளை எடுத்துச் செல்லுவது வழக்கம். ஒரு ஜோடி அரசாங்கச் செலவில் வாங்கப் பட்டது. மற்றொரு ஜோடி தமது சொந்தச் செலவில் வாங்கப் பட்டது. முசாபரி பங்களாக்களில் தங்கி,



சர்க்கார் வேலை பார்க்கும்போதெல்லாம் அரசாங்கச் செலவில் வாங்கி வைத்திருந்த மெழுகுவர்த்தியைக் கொளுத்தி வைத்துக் கொள்வாராம். சர்க்கார் வேலை முடிந்தவுடனே தாம் சொந்தமாக ஏதாவது புத்தகம் படிக்கவோ எழுதவோ ஆரம்பித்ததும் சர்க்கார் செலவில் வாங்கப்பட்ட மெழுகு வர்த்தியை ஊதி அணைத்து விட்டுச் சொந்தச் செலவில் வாங்கி வைத்திருக்கும் மெழுகுவர்த்தியைக் கொளுத்திக் கொள்வாராம். நமது மந்திரிகளும் அரசாங்க உத்தியோகஸ்தர்களும் இந்த மாதிரி உதாரணத்தை லட்சியமாகக் கொள்ள வேண்டும்.

(மூரார்ஜி ஜே. வைத்யாவின் சொற்பொழிவிலிருந்து எடுக்கப்பட்டது)

---

லுள்ள அழற்சி வீக்கம் ஆகியவையும் தசையண்ட வீக்கமும் குறையும்.

14. நாய் வேளை—நாய்க் கடுகு என்னும் காட்டுக் கடுகின் விதையைக் காடி விட்டு அரைத்து மேலே சொன்ன விதமே பற்றிடலாம்.

15. செங்கன் என்று ஒரு முட்செடி. தென்னாட்டின் கீழ்க் கரையோரங்களிலும் இலங்கையிலும் பயிராவது. கானு வாழையைப் போல் தடித்த இலைகள் நுனியில் முள்ளுடன் இருக்கும். இதன் வேர்ப்பட்டையை அரைத்து யானைக் கால் வீக்கத்தின்மேல் பூசி வர வீக்கம் குறையும்; சதை கரையும்.

16. இதன் வேர்ப்பட்டையை இடித்துப் பிழிந்த பாலில் 1-1½ பலத்துடன் அதற்கு இருமடங்கு வெள்ளாட்டுப் பாலையும் சேர்த்துப் பிரதிதினம் காலையில் கொடுத்து இச்சா பத்தியத்தில் வைத்திருக்கவும். மூத்திரம் மிகத் தாராளமாகப் போகும். யானைக்கால் சம்பந்தமான சகல வீக்கங்களும் தீரும். சுரம் குணமாகிவிடும்.

17. பருமனான மஞ்சள் நிறமுள்ள கடுக்காயின் தோலை எடுத்து வாயகன்ற ஜாடியிலிட்டுப் போதுமான நீர்விட்டு நன்றாய் ஊறின பிறகு கடுக்காயை நீக்கி விடவும். வடிகட்டின [கடுக்காய்] ஊறிய நீரானது கடுக்காயின் நிறத்தில் இருக்கும். இதை வெய்யிலில் உலர்த்தினால் குழம்பாகும். உலர உலர இது இரத்த போளத்தைப் போன்ற ஒருவித செயற்கைப் பொருளாய் முடியும். இதைக் கடுக்காய்ச் சத்து என்பர். தேக பலத்துக்குத் தக்கபடி இதை இரண்டு வராகனெடை வரையில் தினமும் ஒரு முறை கொடுத்துவர மலம் கழியும். உடலிலுள்ள துர்நீரெல்லாம் போய் யானைக் கால் சம்பந்தமான வீக்கம் குணமாகும்.

18. நூறு பலம் கடுக்காயை இடித்து இரண்டு மரக்கால் ஜலத்திலிட்டுக் காய்ச்சி எட்டிலொன்றாகச் சுண்டிய பிறகு கஷாயத்தை வடிகட்டிக் கொள்ளவும். அதில் பத்து பலம் சர்க்கரையைச் சேர்த்துப் பாகு செய்து அதில் சிவதை வேர்ப்பட்டை, இஞ்சி, மிளகு, ஓமம், வாயுவிளங்கம், திப்பலி ஆகியவற்றின் தனித்தனி சூர்ணங்களை வகைக்கு ஒருபலம் வீதம் சேர்த்து, பசுவின் நெய் ஒரு படி விட்டுக் கிண்டி லேகிய பாகத்தில் ஆக்கி வைத்துக் கொள்ளவும். இதற்குக் கடுக்காய் லேகியம் என்று பெயர்.

இக்கடுக்காய் லேஹியத்தில் வேளைக்குப் புன்னைக்காயளவாகத் தினம் 1-2 வேளை சாப்பிட்டு வெந்நீரை அனுபானமாகக் குடித்து வர, உடற் பருமன் குறைவுடன் அவருடைய யானைக்கால் - தசையண்டம் முதலியவற்றின் வீக்கங்களும் குறைந்துவிடும்.

சித்தர்கள் அருளிய முறைகளில் பெரும்பாலும் உபயோகிக்கும் பூச்சுக்களாகவேயுள்ளதைக் கவனிக்கவும். லிம்ஃ ஆஞ்ஜைடிஸ்ஸா - பைலேரியாஸிஸ்ஸா - என்பது போன்ற மீமாம்ஸைகள் எழுமிடத்தில் எதுவானாலும் ஆகட்டுமென்று இவற்றை உபயோகிக்கலாமென்பது குறிப்பிடத் தக்கது. மலத்தைப் போக்குவதும் மூத்திரத்தை அதிகப்படுத்துவதுமான உள்ளுக்குச் சேவிக்கச் சொன்ன முறைகளும் அவ்விதமே இதுவா அதுவா என்று நிச்சயம் இல்லாத இடங்களில் இதுவானாலுஞ் சரி அதுவானாலுஞ் சரி என்று கொடுக்கக் கூடியவை என்பது கவனிக்கத் தக்கது.

(தொடரும்)

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs.
Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

காலையில் இருக்கும் புதுமலர்ச்சி
நாள் முழுவதும் இருக்க

# பாண்ட்ஸ்

ட்ரீம்ப்ளவர் டால்க்




நாள் முழுவதும் புதுமலர்ச்சியுடனும்
குளுமையுடனும் இருக்க, ஸ்நானத்திற்குப்பின்
பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர்
உபயோகியுங்கள்!

பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர்
இன்பகரமான பரிமளமுள்ளது; மற்றும்
வியர்வையை உறுஞ்சும் தன்மையுடையது.
அது உங்களுக்கு நாள் முழுவதும்
நீடித்திருக்கும் புத்துணர்ச்சியை அளிக்கும்!

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ். அமெரிக்காவில் இணைக்கப்பெற்றது)

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon